# சூளாமணி

## துறவு, முத்திச் சருக்கம் - உரைநூல்



உரையாசிரியர் :

பூர்ணசந்திர சாஸ்திரியார்



ஆதிபகவன் அறநூற் பதிப்பகம்

14, புதுப்பேட்டைத் தோட்டத் தெரு

இராயப்பேட்டை :: சென்னை - 14

திருவறம் வளர்க!

தோலாமொழித்தேவர் இயற்றிய

# சூளாமணி

## துறவு, முத்திச் சருக்கம்

(உரையுடன்)



*உரியாசிரியர் :*
பூர்ணசந்திர சாஸ்திரியார்

ஆதிபகவன் அறநூற்பதிப்பகம்
14, புதுப்பேட்டைத் தோட்டத்தெரு, ராயப்பேட்டை,
சென்னை-14.

*மகாவீர சகாப்தம்—2486.* ஆகஸ்டு, *1959.*

வெளியீடு—3

விலை ரூ. 2-50



முதற்பதிப்பு : ஆகஸ்டு, 1959
பதிப்பு உரிமை : வீடூர், பூர்ணசந்திர சாஸ்திரியார்
" ஆதிபகவன் அறநூற் பதிப்பகம்
அச்சிட்டவர்கள் : ரத்தினம் (கிளை) அச்சகம், சென்னை.

மகாவித்துவான் சிந்தாமணிச் செல்வர்

**மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்கள்**

# அணிந்துரை

"பெர்ழிந்து பொருள்விளக்கும் போழ்திருள்கால் சீக்குங்
இழிந்தவரை ஏற்றி நிறுத்தும்—செழுந்தரளத்
தோளா மணிதொகுத்தார் போலாதே தோலாச்சீர்
சூளா மணிதொகுத்தார் சொல்."

என்னும் பாவலர் பாராட்டைப்பெற்று விளங்கும் **சூளாமணி** என்னும் காப்பியம் நாற்பொருள் பயக்கும் நடை நெறித்தாய் விளங்குவது; கற்பார்க்குக் கழிபேருவகை விளைக்கும் சொல் நோக்கும், பொருள் நோக்கும், தொடை நோக்கும், நடை நோக்கும் பெற்று விளங்குவது; ஆருகத சமய உண்மைகளை அழகுற எடுத்து விளக்குவது; சீரிய செந்தமிழ் நூல்களின் கூரிய மதிவாய்ந்த உரையாசிரியர்களால் தங்கள் உரைகளில் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட சிறப்பினை உடையது.

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றான சிந்தாமணிக்கு உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் உரை கண்டதுபோல, இக்காப்பியத்திற்குச் சமய நுட்பந் தெரிந்து உரை காண்பார் இலராயினர். இக் குறையினை நீக்க ஆருகத சமயப் பேருண்மைகளை ஆய்ந்துணர்ந்த நல்லறிஞர் ஒருவர் ஒல்லும்வகை முயல்வது சொல்லரும் பயன் விளைப்பதாகும்.

ஆருகத சமயப் பெரியார் பூரணசந்திர சாஸ்திரியார் அவர்கள் இந்நூலின் **துறவுச் சருக்கம், முத்திச் சருக்கம்** என்னும் இறுதிச் சருக்கங்கள் இரண்டினுக்கும் சமய நெறியைப் பின்பற்றிக் கண்டிருக்கும் உரை தமிழறிஞர் போற்றி வரவேற்கத் தக்கதாகும். இது வாயிலாக ஆருகத சமய உண்மைகள் பலவற்றைத் தமிழ் நாடு அறிந்து மகிழச் செய்த சாஸ்திரியாரவர்கள் நன்முயற்சி பெரிதும் பாராட்டத் தக்கது. அவர்கள் முழு நூலுக்கும் நல்லுரை வழங்கித் தமிழறிஞர் பாராட்டுக்கு உரியவர்களாதல் வேண்டுமென்பது எனது வேண்டுகோள்.

**மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை.**

# முன்னுரை

வென்றான் வினையின், றொகையாகி விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த வுணர்வின் னொழியாது முற்றும்
சென்றான் திகழும் சுடர்சூழ் ஒளிமூர்த்தி யாகி
நின்றான் அடிக்கீழ்ப் பணிந்தார் வினைநீங்கி நின்றார்.

"பொழிந்து பொருள்விளக்கும் போழ்ந்திருள்கால் சிக்கும்
இழிந்தவரை யேற்றி நிறுத்துஞ்—செழுந்தரளத்
தோளா மணிதொகுத்தார் போலாதே தோலாச்சீர்ச்
சூளா மணியகத்துச் சொல்."

எனப் பழம்பெரும் பாடல் ஒன்றில் விளக்கப்பட்டுள்ளது. எனவே, சூளாமணியின் பெருமை நன்கு விளங்கும். ஜைன சமய அறவோர்கள் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும் பெருமைக்கும் ஆக்கத்திற்கும் செய்துள்ள சேவைகள் அளவிடற் பாலனவல்ல. இவ்வுண்மையை உலக அறிஞர் பெருமக்கள் பலரும் ஒப்புக்கொண்டு உள்ளனர். அவ்வறவோர்களின் கலைப்படைப்பில் சூளாமணியும் ஒன்று.

சூளாமணி இயற்றிய தோலாமொழித்தேவர் தமிழின் கிழவனான சேந்தன் காலத்தவர் என்பது அவர்,

நாமாண் புரைக்குங் குறையெனினு நாம வென்வேல்
தேமா லைங்கற் றிருமா னெடுஞ்சேந்த னென்னுந்
தூமாண் டமிழின் கிழவன் சுடரார மார்பிற்
கோமா னவையுட் டெருண்டார் கொளப்பட்ட தன்றே.

என்ற அவையடக்கச் செய்யுளினின்றும் அறிகின்றோம் அகச் சான்றாக விளங்குார். சேந்தன் என்னும் மன்னர் காலத்தை யாரும் ஆராய்ந்து எழுதவில்லை. இது புலவர் மட்டுமன்றி, வரலாற்றுத் துறை ஆசிரியர்களின் குறையுமாகும். சேந்தன் காலம் கி. பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டிற்கு முந்தியதாகக் கருத இடமுண்டு.

திக்கெட்டும் புகழ்படைத்த திறல்விசயன்
புயலனைய கையன் தெவ்வைக்
கைக்கொட்டி நகைக்குமிகற் கார்வெட்டி
யரையன்வள நாடற் கேற்பப்
பொக்கெட்டும் பத்துமிலான் புகழ்த்தரும
தீர்த்தன்மலர்ப் பதம்பூ சிப்போன்
சொற்கெட்டா வரன்றோலா மொழிசூளா
மணியுணர்வோர் துறைகண் டோரே.

என்ற பாவினைக்கொண்டு சிலர் சூளாமணி ஆசிரியர் கி. பி. 9-ஆம் நூற்றுண்டினர் என எழுதுகின்றனர். கி. பி. ஏழாம் நூற்றுண்டில் நடந்ததாகக் கூறும் திருஞான சம்பந்தர் கதையை இவர்கள் மறந்து இவ்வாறு எழுதுகிருர்கள், தமிழ்க் காவியங்களில் தலைசிறந்த காவியமாகிய சீவக சிந்தாமணியின் காலம் கி. பி. பத்தாம் நூற்றுண்டு என எழுதி வருவது யாவரும் அறிந்த ஒன்றுகும். இவ் ஆராய்ச்சியாளர்கள் கி. பி. ஏழாம் நூற்றுண்டின் நிகழ்ச்சி உண்மையெனக் கருதுவார்களாஞல், இக் காவியங்களின் காலம் அந்நிகழ்ச்சிக்குப் பிந்தியதென்று கூறமாட்டார்கள். ஏனெனில், அத்தகைய கோர நிகழ்ச்சிக்குப்பின் இத்தகைய பேரறிஞர்கள் தமிழகத்தில் உலவ இயலாது. அதிலும் மதுரைக்கு வர இயலாது. எனவே சீவகசிந்தாமணி சூளாமணி ஆகியவைகளின் காலம் கி. பி. 7-ஆம் நூற்றுண்டிற்கு முந்தியது என்பதுதான் பொருந்தும்.

மேலும், அப்பர் தேவாரத்தில் சமணர்களை பழிக்கும் பாடல் ஒன்றில் "நரி விருத்த மதாகுவர்" எனக் குறிப்பிட்டிருப்பதாலும், சிலப்பதிகாரம் போலவே சிந்தாமணியிலும் சூளாமணியிலும் சிவன், திருமால், முருகன், கொற்றவை போன்ற தெய்வங்கள் இடம் பெற்றிருப்பது போல 'விநாயகர்' இடம் பெருமையாலும், இவ்விருகாவியங்களும் தேவார காலத்திற்கு முந்தியவை என்றும், விநாயகரை தமிழகம் தெய்வமாக ஏற்றுக்கொள்ளும் முன்னரே இயற்றப் பட்டவை என்பதை அறிஞர் உலகம் அறிதல் வேண்டும். எனவே சீவகசிந்தாமணி ஐந்து அல்லது ஆறும்

நூற்றாண்டினது என்றும் அதே காலத்தில் சூளாமணியும் தோன்றி யிருக்கவேண்டும என்பதும் மேலே கண்ட வரலாறுகளால் உறுதிப் படுத்தலாம்.

மற்றும், இவ்வாசிரியர் தோலாமொழித்தேவர் பயாபதி வேந்தன் துறவுபூண்ட பிறகும் அவனை ஓர் அரசனாகவும் அவன் எண்ணங்களை சேனைகளாகவும் வருணித்திருப்பது மகிழத்தக்க பகுதியாகும். மற்றும், அவர் மனிதர் கதியில் போக பூமியையும் அந்நில மக்களையும் வருணித்துக் கூறுமிடத்து அவர்களின் இன்பங்களையும் மகம்மேருவினையும் உத்தர குரவம், வெள்ளியம் பெருமலை முதலியவையும் சமணர் தத்துவம் அறியாதார்க்கும்கூட புதிதாகத் தோன்றுது.

என்னை? எனின் ஸ்ரீராமபிரான் பத்தினியான சீதா பிராட்டியாரை தேடும்பொருட்டு சுக்ரீவன் அனுமானை அனுப்புமிடத்து, " நீ வடக்கே செல், அங்கே பொன்மலை (மகம்மேரு) இருக்கிறது. அங்கு உத்தர குரு என்ற நாட்டின் மனிதர் போகத்தை அனுபவிக்கின்றனர் (போகபூமி மனிதர்). அவர்களுக்கு அங்குள்ள (கற்பக) மரங்கள் ஆண் பெண் ஆகிய இருபாலார்க்கும் வேண்டிய வெவ்வேறு ஆடை அணிகலன்களையும், உணவுப் பண்டங்களையும், மாலை முதலியவற்றையும், மற்றும் பலவற்றையும் கொடுக்கின்றன. அங்கு சூரிய சந்திரர் தாராகணங்கள் இலதாகும். அங்குள்ள சீதோதா எனனும் நதி ஆயிரம் உபநதிகளையுடையது என்பது முதலிய பல பொருள்கள் விளங்க, வால்மீகி ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் 43-வது சருக்கத்தில் 33-வது சுலோகத்திலிருந்து 57-வது சுலோகம் வரையிலும் கூறப்பட்டிருப்பது பலரும் அறிந்த ஒன்றாகும்.

இந்நூல், முதன்முதலாக 1889-ஆம் ஆண்டில் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்களாலும், 1954 ல் அடையாற்றுக் கலாக்ஷேத்திரத்தில் ஸ்ரீமதி ருக்குமிணி தேவியாராலும் பதிப்பிக்கப்பட்டது. இவர்களுக்கு நாம் நன்றி செலுத்தக்மைப்பட்டுள்ளோம். அக்காலத்தில் கலாக்ஷேத்திர அமைச்சர் விச்வநாத ஐயரவர்கள். வித்வான் வேங்கடராஜலு ரெட்டியார் மூலம் அடியேனுக்கு கடிதம் அனுப்பி, சூளாமணி

முக்தி துறவு ஆகிய இரண்டு சருக்கம் மட்டிலும் உரை எழுத வேண்டும், மற்றவை ஐயரவர்கள் குறிப்புரையைக்கொண்டே அச்சிடுகிறோம், என்றனர். அவர் கேட்டுக்கொண்டவாறே துறவு முக்தி ஆகிய இரண்டுமட்டுமே எழுத நேர்ந்தது. யான் எழுதுவதற்கு சிறிது காலம் தாழ்ந்தமையால் இது அவர்கள் பதிப்பில் சேர்ப்பதற்கில்லை.

மற்றும், இந்நூல் வெளிவரப் பெரிதும் ஊக்கமும் உணர்ச்சியும் எனக்கு அளித்தவர்கள் பலர். அவர்களில் திரு, ஜீவபந்து, T. S. ஸ்ரீபால் அவர்களும் ஒருவராவர். ஆகவே, அவர்களுக்கு என் வணக்கத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன். இனி நூல் முழுவதும் உரையுடன் வெளியிட வேண்டுமென்பதே இப்போதைய நோக்கமாகும். எனது இவ்வுரைகளைச் செம்மையுறத் திருத்தித் தந்த அறிஞர் மகா வித்வான் மே.வி. வேணுகோபாலப் பிள்ளையவர்களுக்கு என் நன்றி கலந்த வணக்கத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலை அழகாக அச்சிட்டுதவிய ரத்தினம் பிரஸ் (பிராஞ்சு) உரிமையாளர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

மற்றும் என் அசதி மறதியினாலும் அறியாமையினாலும் நேர்ந்த பிழையினை அறிஞர் பொறுத்தருள்வாராக.

**வீடூர், பூர்ணசந்திர சாஸ்திரி.**



ஸ்ரீ ஜிநாய நம:

# சூளாமணிக்கதைச் சுருக்கம்.

பூவுலகின் புகழ்பெற்ற சுரமை நாடு நீர்வளம் நில வளம் முதலிய பல்வேறு வளங்களும் சிறப்புற அமையப் பெற்றது. அந் நாட்டிற்குத் திலகம் போலும் நகரம் மேன்மை தங்கிய **பௌதனபுரம்** அங்கு, மழையின் வளர்ப்பத்தால் பாலை நிலமும் மருத நிலமாகக் காட்சியளிக்கின்றது; எனவே, ஏனைய வளப்பங்கள் சொல்லாமலே விளங்கும். அத் தகைய நாட்டிற்கு அமைவுடைய மன்னன் **பிரஜாபதி** (தமிழில் பயாபதி என வழங்கும்) பிரஜைகளுக்குத் துன்பம் அணுகாமல் காக்கும் தன்மையால் அவனுக்கு அந்தப் பெயர் பொருந்துவதாயிற்று. அறம் பொருள் இன்பங்களில் நீதி முறையுடன் ஆட்சி புரியும் அவ்வேந்தனுடைய பட்ட மகிஷிகள் ஜெய வதி மிருகாவதி எனும் இருவர்.

"மன்னவன் ஆவியாவார் மகளிர்கள், மகளிர் தங் கள் இன்னுயி ராகி நின்றான் இறைமகன்" என்பர் ஆசிரியர். எனவே, மன்னனுடன் மங்கையர் இரு வரும் மனைமாட்சிக்கேற்பப் பொற்புடன் தங்கி இன் புற்றனர்.

அவ்விரு மனைவியருள் மூத்தவள் ஜெயவதி; இளையவள் **மிருகாவதி**. அவளைச் சசியென்றும் கூறுவ துண்டு. அவள் இந்திராணிக்குச் சமானமானவள். நன்னிமித்தத்துடன் அவ்விருவரும் இரு நற்புதல்வர் களைப் பெற்று நாட்டினருடன் இன்புறுகின்றனர்.

அப்புதல்வருள் ஜெயவதியின் புதல்வன் **விஜயன்** என்பான்; மிருகாவதியின் புதல்வன் **திவிட்டன்** என் பான். சங்க வர்ணமும் நீல வர்ணமும் பொருந்திய விஜய திவிட்டர்களாகிய இவ்விருவரும் பலதேவ வாசு தேவரின் அம்சமுடையவர்களாகி, இயற்கையழகிலும்

செயற்கையழகிலும் இணையிலாராய், மக்கள் மனத்தை மகிழச் செய்யும் மாண்பு மிக்கவராய், மன்மதனும் வருந்தும் அழகுச் செல்வத்தைப் பெற்று அந்நாட்டு மங்கையரை வாடச் செய்கின்றனர்.

மற்றும் இப்பூவுலகில் மிகச் சிறப்புற்றோங்கியது வித்தியாதரர் வசிக்கும் விஞ்சையருலகம். அது வெள்ளியம்பெருமலை எனப்படும். அங்குள்ள மாந்தர் விஞ்சையின் உதவியால் விண்ணில் இயங்கல், தமக்கு வேண்டிய உருவுகோடல் முதலிய பல வியக்கத்தக்க செயலால் இன்பம் நுகர்கின்றனர்; ஆதலின் வித்தியாதரர் என்ற பெயர் பெற்றனர். அம்மலையில், இரத நூபுர சக்கரவாள மென்னும் சிறந்த நகரம் ஒன்றுளது. அதற்கிறைவனை சுவலனசடி (ஜ்வலனசடி) விஞ்சை முதலிய சகல நன்மையும் அமையப் பெற்றவன். அம்மன்னன் மனைவி கற்பிற்சிறந்த வாயு வேகை என்பாள். அவன் புதல்வன் அர்க்க கீர்த்தி என்பான், புதல்வியாகிய புவனம் போற்றும் புகழுடைய சுயம்பிரபை நற்கலைப் பண்புகளுடன் வளர்ந்து அழகுச் செல்வத்தால் மிக்கவளாயினள். மன்னனும் மனைவியும் மகளுடன் உத்தியான வனம் சென்று வசந்த உத்ஸவம் கொண்டாடுகின்றனர். அங்குள்ள ஆலயத்தில் இறைவனை வணங்கி வழிபடுகின்றனர்; அவ்வமயம் அங்கு வந்த சாரண பரமேஷ்டிகளை வணங்கி அறங் கேட்கின்றனர். அவர்களில் சுயம்பிரபை முனிவரை வணங்கி, சக்கரவாளம் என்ற ஒரு மஹா நோன்பைக் கைக்கொண்டு, அதற்குரிய உண்ணா விரதத்தை மேற்கொண்டு நோற்கின்றனள். இது நிற்க,

பௌதனபுர மன்னன் பயாபதி, ஒரு நாளிரவில் நற்கனவு ஒன்று கண்டு, மறு நாள் சபையில் அமைச்சர் புரோகிதர் முதலியோர் சூழ வீற்றிருக்கின்றனன். அவ்வமயம் ஒரு நிமித்திகன் வந்து,

அரசனை முறைப்படி வணங்கி அரசன் அருள் பெற்றுக் கூறுவான். "அரசரே, நீவிர் கடந்த இரவில் ஒரு நற்கனவு கண்டீர். அது நம் கடல் வண்ணனாகிய திவிட்ட நம்பிக்கு வான் வழியாக இழிந்து வந்த ஓர் யானை, வெண்தாமரையாலியன்ற மாலையொன்றைச் சூட்டிச் சென்றதாகும். அதன் பயன் யாதெனின், விஞ்சையருலகினின்றும் போந்த மன்னன் ஒருவன் தன் மகளை நம் நம்பிக்கு ஈந்து போவான் என்பது. அதற்கு அறிகுறியாக இன்னும் ஏழுநாள் சென்றால் விஞ்சையர் தூதன் ஒருவன் மண ஓலையுடன் புட்பமாகாண்டம் என்னும் நமது சோலையில் வந்து இறங்குவான்," என்றனன்.

தான் கண்ட கனவை நிமித்திகன் அறிந்து கூறியதற்கு மகிழ்ந்த மன்னன், மந்திரச்சாலையடைந்து, அமைச்சருடன் ஆராய்கின்றனன். அமைச்சர் அரசனை நோக்கி, 'அரசரே, நம் நிமித்திகன் முன்னர்க் கூறியவாறே திவிட்ட நம்பியின் கையில் சங்கரேகையும் சக்கரரேகையும் உள்ளன. அவன் சக்கரவர்த்தியாவதற்கு யாதோர் ஐயமுமில்லது. ஆதலின், நிமித்திகன் கூறிய நாள் வரை புஷ்பமாகாண்டமென்னும் நம் சோலையில் ஒரு சிலாதலம் இயற்றி, துருமகாந்தனைக் காவல் வைப்போம்," எனத் தீர்மானித்து அவ்வாறே அரசன் ஆணையால் அமைத்தனர்.

சுவலனசடி மன்னனின் மகள் சுயம்பிரபை சக்கரவாள நோன்பை முறை தவறாது நோற்று முடித்து, இறைவன் திருவடி சேஷத்தினைத் தந்தைக்குப் புஷ்பங்களுடன் கொடுக்க அவனும் முறைப்படி ஏற்று வணங்கித் தன் மகளை உற்று நோக்கி, தன் மகளுக்குத் தக்க வரன் தேடுவான் கருதி, மந்திரச்சாலையையடைந்து, தன் அமைச்சர் நால்வருடனும் ஆராய்கின்றான்.

அவர்களுள் சுஸ்ருதன் என்பான், "அரசரே, இரத்தின பல்லவ நகரைத் தலைநகராகக் கொண்டு இவ் வித்தியாதரவுலகையும் மண்ணுலகையும் ஆட்சி புரிபவர், மயூரக்கிரீவருக்கும் நீலாஞ்சனைக்கும் புதல்வரான அச்சுவக்கிரீவர் என்பார். அவர் சக்கர ரத்தினம் முதலிய செல்வங்களில் மிக்கவராகி, மூன்று கண்டத்திற்கும் அதிபதியாய் விளங்குகிறார். அவரை மீறி எவராலும் ஒன்றும் செய்ய இயலாது. மற்றும் பல வைபவமும் உடைய அவருக்கு உகந்தவளான நம் கன்னியா ரத்தினத்தைக் கொடுத்தல் அழகிது," என்றனன்.

பவஸ்ருதன் என்னும் மந்திரி, "அரசரே, சுஸ்ருதன் கூறியயாவும் உண்மையே. ஆயினும், நம் குமாரிக்கு ஜாதகம் கணிக்கும்போது இவள் ஓர் பட்டத்தரசியாவள் என்று கூறியிருப்பதனாலும், அச்சுவக்கிரீவர் முதிர்ந்த வயதுடையவர் ஆகையினாலும், அவை பொருந்தா. அன்றியும், அவருக்குக் கனக சித்திரை என்ற பட்டமகிஷியும் உள்ள். ஆகவே, நம் கன்னிகையின் வயதிற்குச் சமானமானவர், கின்னர கீத நகரத்தையாளும் பவனஞ்சயனும், அமிர்தபுரத்து வேகரதனும், மேகபுரத்து பத்மரதனும், இரத்தின புரத்து (இரத்தினரதன் என்னும்) தனஞ்ஜயனும், கீதசந்திரபுரத்து அரிகண்டனும், திரிபுவனபுரத்து இல்லிதாங்கனும், சித்திரகூடபுரத்துச் சுவர்ண தேஜனும், அசுவபுரத்துக் கனக சித்திரனும், ஸ்ரீநிலய புரத்துச் சித்திரரதனும், கனக பல்லவபுரத்துச் சிம்ம கேதுவும், இரத்தின சஞ்சயபுரத்து அரிஞ்சயனும் ஆகிய பலரும் உளர். அவர்களுள் ஒருவருக்குக் கொடுத்தல் நலம்," என்றனன்.

பின்னர், சுருத சாகரன் என்ற மந்திரி, "அரசரே, அச்சுவக்கிரீவர் வயோதிகர் என்பது உண்மையே. ஆயினும், அவ்வரை விட்டு அவர் ஆணை கேட்டு நடக்கும்

ஏனையோர்க்குக் கொடுப்பதென்பதும் முடியாத காரி யம். ஆகவே, அச்சுவக்கிரீவர் முதலிய யாவராலும் ஜெயிக்கமுடியாத தன்மை வாய்ந்த சுரேந்திர காந்தார மன்னர் மேக வாகனரின் மகன் **வித்யுத்ப்ரபன்.** கூற்ற மும் அஞ்சும் குணமுள்ளவன். அவனுக்குக் கொடுத் தல் அழகிது. அதுவன்றியும், அவன் தங்கை ஜோதி மாலையை நம் குமாரன் அர்க்க கீர்த்திக்கும் மணம் முடித்துவிடலாம்," என்றனன்.

சுமதி என்னும் அமைச்சன், "அரசரே அச்சுவக் கிரீவர் வயோதிகர். அவருக்குச் சுயம்பிரபையைக் கொடுக்க நினைப்பதும் தவறு. அவர் ஏவலைக் கேட்டு வாழும் ஏனையோர்க்குக் கொடுப்பதும் பொருந் தாது. சுருத சாகரர் கூறிய வித்யுத்ப்ரபனுக்குக் கொடுப்பதென்பதும் முடியாத காரியம். ஏனெனில், அவன் "முற்பிறவியில் பவகிரியரசன் ஜய சேனனுக் கும் பிரீதி மதிக்கும் விஜயபத்திரனென்ற புதல்வ ராகி இருந்து, துறவு கொண்டு, தவமியற்றி, சஹஸ் ரார கற்பம் என்னும் தேவருலகில் இன்பம் நுகர்ந்து வந்து, வித்யுத் ப்ரபனுயினன். அவன் இப்பிறவியில் முத்தியடைவான்" என்பதை யசோதர குருக்கள் வாயி லாகக் கேட்டுளோம். ஆதலின், இல்லற போகத்தை விரும்பாத அவருக்குக் கொடுத்தல் அழகன்று. இனி சுயம்வரம் வைத்தால் கன்னிகைக்குத் தகுந்த கண வனே நேருவான். அதுவும் அச்சுவக்கிரீவரைத் தவிர்த்து நடத்த இயலாது. ஆகவே, முக்காலத்தை யும் சுருத ஞான மூலமாக அறிந்துரைக்கும் நம் நிமித் திகன்பால் கேட்டறிதும்," என்றனன். எனவே, சகலரும் அவன் யோசனையையே ஒப்புக்கொண் டனர்.

பின்னர்ச் சபை கலைந்தது. மன்னன் நிமித்தி கன் மனைக்குத் தானே சென்றனன். நிமித்திக னும் மன்னனை முறைப்படி வரவேற்று உபசரித்

தனன். பின்னர், மன்னன் மனத்திலுள்ளதனை நூல் முகக்திறுற் கூற நினைந்த நிமித்தகன், "அரசரே நீவிர் கருதி வந்தது திருத்தங்கிய நும் நங்கைக் குரிய நம்பியின் திருமணச் செய்தியாகும். அது வேறொருவரால் கூறும் தகுதியுடையதன்று. அற வாழி வேந்தராகிய ஆதிபகவர் திருவாய் மலர்ந்தருளி யது. நீவிர் எம்மிடம் வரும் போதே, நும் எதிரில் ஒரு மங்கலப் பெண் திரு எதிர் வந்தது போல வலமாய்ச் சென்றனள். அஃது ஒரு நன்னிமித்த மாகும். இன்னும் இரண்டொரு மாதத்தில் பூமியில் பௌதனபுரத்தில் வாழும் திவிட்டனென்னும் வாசு தேவனுக்குச் சுயம்பிரபை மனைவியாகி இன்புறு வள்," என்றனன். நிமித்திகன் கூறியதைக் கேட்ட வேந்தன், உவகையால் உள்ளமும் உடலும் பூரித்து, ஆவலுடன் அதன் விவரம் யாதென? நிமித்திகன் கூறுவான்.

"அரசரே, இம் மூவுலகின் நடுவில் மகாமேருவினை யுடைய **ஜம்பூத்வீபம்** பல கடல்களும் தீவுகளும் சூழப் பெற்றது. அது ஹிமவான், மஹா ஹிமவான், நிஷ தம், நீலி, ருக்குமி, சிகரி என்ற ஆறு குலகிரிகளும் குறுக்கே வீழ்ந்து அதனல் **பரதம்**, ஹைமவதம், ஹரி வர்ஷம், **விதேகம்**, ரம்யகம், ஹைரண்ய வதம், ஐரா வதம் என ஏழு நாடுகளாகப் பிரிந்துளது. ஏற்றிழி வோடு கூடிய உத்சர்ப்பிணி, அவசர்ப்பிணி காலங் களில் தெற்கில் உள்ள பரதமும், வடக்கில் உள்ள ஐராவதமும் போக பூமியாகவும் கர்ம பூமியாகவும் மாறுகின்றன. உத்தர தக்ஷிண குரவம் நீங்கலாக விதேக க்ஷேத்திரம் கர்ம பூமியாகவும் மற்றவை போக பூமிகளாகவும் நிலைத்திருக்கின்றன. நாம் வசிக்கும் பரத க்ஷேத்திரத்து முதல் மூன்று காலம், போகபூமி யாக விளங்கி கர்மபூமியாக மாறும் காலத்துப் பதி னன்கு மனுக்கள் தோன்றினர்கள். அவர்களில்

கடைசியில் தோன்றிய நாபி மனுவின் புதல்வராக அறவாழி அண்ணலாகிய பகவான் விருஷப தேவர் தோன்றினர். அவர்தம் திருக்குமாரரே பரத சக்கர வர்த்தியாவர். இளையவர் பாகுபலி யென்பார். விருஷப தேவர் இல்லறம் வழுவாது நிகழ்ந்து துறவு பூண்டு தவமியற்றி, வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முற்றும் உணர்ந்த முனிவராய் விளங்குகிறார். ஒரு நாள் பரத சக்கரவர்த்தி தம் தந்தையாரை அடைந்து, வணங்கி எதிர்காலத்து நிகழக்கூடியதை வினவுகின்றார். தீர்த்தங்கரராகிய பகவான் பின்வருமாறு கூறு கின்றார். இனி வருங்காலத்து என்னை முதலாக உடைய தீர்த்தங்கரர் இருபத்து மூவரும், நின்னை முத லாக உடைய சக்கரவர்த்திகள் பன்னிருவரும், ஒன் பது பலதேவரும், ஒன்பது வாசுதேவரும், ஒன்பது பிரதி வாசுதேவரும் தோன்றுவர். அவர்களுள் நின் மகன் மரீசி, பௌதன புரவரசன் பயாபதியின் புதல் வர் இருவரில் விஜய பலதேவனுக்கு இளையவனான திவிட்டன் என்னும் முதல் வாசுதேவனாகப் பிறந்து, வித்தியாதர கன்னிகையான சுயம் பிரபையினை மணப் பான். அது காரணமாகப் பகைகொண்ட அச்சுவக் கிரீவனான பிரதி வாசுதேவனைப் பலதேவனுடன் சென்று வென்று, அர்த்த சக்கரவர்த்தியாகி, இன் புறுவன். பின்னர் அவனே இருபத்து நாலாம் தீர்த் தங்கரராகிய மஹாவீரருமாவன்," என்று அருளிச் செய்தார். ஆகவே, உம் மகள் சுயம்பிரபை அந்தத் திவிட்ட குமாரனுக்கே உரியவள். அவனும், இன்னும் ஒரு மாதத்தில் ஒரு சிங்கத்தினை வாயைப் பிளந்து அழிப்பன். இவ்வுண்மையை அதனைக்கொண்டே உணர்வீராக," என்றனன்.

அதன் பின்னர் மன்னன் மீண்டும் மந்திரச்சாலை யடைந்து, அமைச்சர்களையும் கலந்து ஆலோசித்து, மரீசி என்பவனைப் பௌதனபுரத்திற்குத் தூதராக

அனுப்பினன். அவனும் வான்வழியாகச் சென்று, பௌதனபுரத்துப் புட்பமா காண்டம் என்னும் சோலையில் வந்து இறங்கினன்.

அவன் வரவை எதிர்பார்த்திருந்த துருமகாந்தன் அவனை வணங்கி வரவேற்று உபசரித்து, மணிச் சிலாதலத்தைக் காட்டி அமரச் சொன்னான். மரீசி மயங்கி, "மாமுனிவர் வந்து தங்குதற்கியன்ற இச் சிலாதலம் எம் போல்வார்க்குத் தகுதியன்று." என மறுக்க, துருமகாந்தன் வணங்கி, "ஐயனே நும் வரவை எதிர் நோக்கியே எம் அரசர் கட்டளையால் இரவு பகலாக இங்குக் காத்திருக்கிறேன். இஃது உமக்காகவே இயற்றப்பட்டது, என்று வணங்கி அமரச் செய்து, உடனே மன்னனுக்கும் செய்தியனுப்பி, மங்கலப் பெண்கள் நால்வரைக் கொண்டு விருந்தளித்தான்.

பின்னர்ப் பயாபதி வேந்தன் சில பெரிய மனிதர்களையும் தன்புதல்வர்களையும் அனுப்பித் தூதுவனை மங்களகரமுடன் அழைத்து வரச் செய்தான் அவ்வாறு வந்து வணங்கிய தூதுவனுக்கு ஆசி கூறிக் குசலம் வினவினன். அவனும், மீண்டும் வணங்கி, மணவோலையை நீட்டினன். அரசன் குறிப் பறிந்த (சந்தி விக்ரஹி) ஓலை வாசிப்பவன் வாங்கி. "ஸ்வஸ்தி (மங்களமாகக் கடவது). இரத நூபுர சக்கர வாள மன்னன் சுவலனசடி ஓலையைப் போதன மாநகரத்திறைவர் பயாபதி வேந்தர் காண்பாராக. மன்னர்க்கு உண்டி முதலிய காப்புச் செவ்வனே அமைவனவாக. உம் இளைய நம்பி திருநிறைச் செல்வன் திவிட்ட நம்பிக்கு உம் மருகி சுயம் பிரபையை அழைத்து மணம் முடிப்பீராக!" என்று வாசித்தனன். இதனைக் கேட்ட மன்னன், 'மனிதரை விடச் சிறந்த வித்தியாதரரிடம் நமக்குச் சம்பந்தம் கிடைத்திருக்கிறதே!, என மகிழ்ந்து பதிலுரையாது வாளாவிருந்தனன்.

அதற்குள் மரீசி, "இம்மன்னனிடம் நம் மன்னன் ஓலையை வலிய அனுப்பினதனால் இவன் அவமதித்தனன் போலும்"! என வெகுண்டு, "அரசரே! ஒரு நற்காரியத்தைக் குறித்து மனிதரிடம் ஒருவர் வலியச் சொல்வாராயின், சொன்னவர் எத்தகையோராயினும், மனிதர் அவரை இகழ்வர் என்பது மூதுரை. அது உம்மிடம் நிஜமாயிற்று. மேலும், தம்மை அணுகினோர் தேவரேயாயினும், நாளாக நாளாக இகழ்வதும் மனிதர்க்கு இயற்கை. அன்றியும், பித்தஜ்வரம் உடையவனுக்குப் பால் கைப்பதும், பிறவியிலழுந்துமவர்க்கு நற்காட்சி வெறுப்பாவதும் போல, சிறந்த விஞ்சையர் செல்வத்தின் இன்பம் மயக்கப் பிறவியிலுள்ள மனிதர்க்கு நுகர முடியாததும் மதிக்க முடியாததுமாகும். ஆகவே, சமயோசிதம் அறிய வியலாத நீர், எம் திருமுகத்துக்குப் பதிலுரைக்க வில்லை," என்றனன்.

எனவே, பயாபதி வேந்தன், "விஞ்சையர்" தூதுவரே, சிவந்துரையாடல் வேண்டா! தேவருக்கிணையான உம் இறைவர்க்கு எத்தகைய பதில் விடுக்கலாம் என்று ஆலோசித்ததே தவிர வேறன்று. புன் புலால் பொதிந்த புல்லியராகிய எமக்கு, வாடா மாலையும் கண்ணியுமுடைய நும் வேந்தரின் திருமுகம் காட்டி எம்மைத் தெளிவித்தது கனவென்று கருதினேமேயன்றி நனவாகத் தோற்றவில்லை. அன்றியும், அவரவர் ஈட்டிய வினைக்குத் தக்கவாறு இன்ப துன்பங்கள் அனுபவிக்கலாமே தவிர, அவற்றை வேறொருவரால் கொடுக்க இயலாது. அல்லது, தானே அடைந்து விடலாமென்று முயற்சித்தாலும் கூடிவருமா? வாராது. ஆகவே, உயிரின் உண்மைத் தன்மையை உணர்ந்து முன்னர் விழுத்தவம் பூண்டு நோற்றாற் கல்லது, நும் வித்யாதர விபவம் எமக்கு எங்ஙனே கூடும்? நீரும் முன்னர் அவ்வாறே கூறினீர்." என, மரீசி, "என்னே!

பாவம்! இக்காவலன் கருதியது ஓராது வீணே உளறி விட்டேனே." என்று தன் அறியாமையை நினைந்து வருந்தி, "மன்னவரே, மன்னித்தருள்க; வித்தியாதரர் விஞ்சையினால் உயர்ந்தோர் என்பதல்லது, அவர்களும் மனிதர்களே. அவ்வித்தை எய்திய வரலாறு கூறுவன்; கேண்மின். ஆதியில் கர்ம பூமியாக மாறிய, காலத்தில் மக்களுக்கு வாள், வரைவு, உழவு, வாணிபம், வித்தை, சிற்பம் என்னும் அறுவகைத் தொழில்களைக் கற்பித்து நாடு நகரங்களைப் பிரித்து உதவிய ஆதிபகவர் விருஷபதேவர் தவம் இயற்றும் காலத்தில், நமி விநமி குமாரர்கள் அவரை வணங்கி தரணேந்திரன் தயவால் தேவரோடொத்த செல்வங்களைப் பெறும் விஞ்சையைப் பெற்றனர். அந்த நமி குலத்தில் உதித்தவரே எம் இறைவர்," என, பயாபதியின் நிமித்திகன், "எம் இறைவர் அந்த ஆதி பகவனின் இளைய குமாரர் பாகுபலி ஸ்வாமியினுடைய திருக்குலத்தின் வந்தவரே," என விஞ்சையர் தூதன், "அங்ஙனமாயின், அந்தப் பாகுபலி எம் நமியின் தந்தையாரான கச்சர்க்கு மருகராவர். ஆகவே, இருவர் குலமும் ஒத்துளது," என்றனன்.

பயாபதி வேந்தன், "விஞ்சையர் தூதுவரே? நீதி நூல்களில் அரசர், தம் மக்களே கால்களாகவும், தோழரே தோள்களாகவும், ஒற்றரே செவிகளாகவும், அமைச்சரே கண்களாகவும், நீதிநூலே உணர்வாகவும், ஆக்கப்பட்ட வேந்தராகிய யந்திரத்திற்கு **வாய்** தூதுவரென்பது கூறப்படுகிறது. அத்தகைய உம்மைத் தூதுவராகப் பெற்ற விஞ்சை வேந்தர்க்குக் குறை என்பது யாது?" எனப் பலவாறு புகழ்ந்து, "அவர் எம்மைத் தம் சுற்றமாக எண்ணி நும்மை அனுப்பியது, யாம் இம்மையே யன்றி உம்மையிற் செய்த நல்வினையே யாகும். ஆகவே, தம் அடியன்மாரை அழைத்துக் குற்றேவற் குரியவராய்ச் செய்ய அருள் பாலிக்குமாறு நும் வேந்தர்க்குக் கூறுக," என

முகமன் கூறி விருந்தளித்து முறைப்படி அனுப்பினன். தூதுவனும் தன் நகரம் சென்று நடந்தவை யாவும் கூறி, திவிட்டன் முதலியோரின் செல்வத்தையும் கூறினன். பின்னர்ச் சடிவேந்தன், "திவிட்டன் சிங்கத்தைக் கிழிப்பான் என நிமித்திகன் கூறிய உண்மையையும் காண்போம்," என, அமைச்சரோடு எண்ணி அவ்விடத்தே ஒரு தூதனை அனுப்பினன். இது நிற்க.

அச்சுவக்கிரீவன் திரிகண்டாதிபதி சக்கர ரத்தினத்தின் செல்வாக்கால் இறுமாப்பு அடைந்திருக்கின்றனன். ஒருநாள் நிமித்திகன் வந்து, "அரசரே, பூமியில் மானிடன் ஒருவன் நினக்குப் பகையாக வளர்கின்றான். அவன் பௌதனமா நகரத்திலுள்ள பயாபதியின் இளைய புதல்வன் திவிட்டன் என்பான். நினக்கு உரிய பெண்ணை மணக்கும் அவனை, ஆரம்பத்திலேயே அழிப்பதற்காக வழி தேடுவீராக. என்றனன். என்றலும், அச்சுவக்கிரீவன் மிகவும் கோபித்து, கர்வத்துடன் அமைச்சரை அழைத்து ஆலோசிக்கின்றான். அவர்கள், "அரசரே, நிமித்திகன் சொல் தவறாது நிகழும். ஆயினும், பகையல்லாதவர்களைப் பகையென்றெண்ணுவதும் தவறாகும். ஆதலின், முதலில் அவனிடம் தூதுவர்களை அனுப்பித் திறை வாங்கிவரச் செய்வோம் என்றனர். அவ்வாறே நான்கு தூதுவரை, திருமுகத்துடன் அனுப்பினான். அவர்களும் போதனமா நகரம் சென்று, பயாபதி வேந்தனை வணங்கித் திருமுகம் அளித்தனர். அதைக் கண்ட பயாபதி வெகுண்டனனேனும், வேறு வழியின்றி அவ்வோலையிலுள்ளவாறு ஆயிரத்தெண்மர் நடனமாதரையும், முத்தும் பவழமும் முதலிய எண்ணற்ற பொருள்களையும் கொடுத்து அனுப்புகின்றான். தூதுவரும், விஞ்சையால் ஒரு விமானமியற்றி, அதில் பணிப்பெண் முதலியோரை அமரச்செய்து, கஞ்சுகியால் மறைத்து எழும்

சமயம், எதிர்பாராமல் அங்கு வந்த திவிட்ட நம்பி, 'இது என்ன' என்று வெகுண்டு கேட்டனன். அவன் கோபத்தைக் கண்டு அஞ்சி ஒருவரும் பேசாது வாளாவிருந்தனர். அப்போது குறளி (தோழி) ஒருத்தி, "இவர்கள் சக்கரவர்த்தியின் தூதுவர்கள்; நம்மிடம் திறைவேண்டி வந்தார்கள்; நம் தந்தையாராகிய அரசர், அவ்வாறே தந்தார்; இதுவே இங்கு நிகழ்ந்தது," என்றனள்.

திவிட்டன் திறை எனும் சுடுசொல் கேட்டலும் அத்தூதுவர்களை நெய் விட்ட எரிபோன்று கனன்று பலபடப் பேசித் துரத்தினன். அவர்களும் நடுநடுங்கிச் சென்று, அங்குத் தம் அரசனுக்குக் கூற, அஞ்சி, அரிமஞ்சு என்னும் அமைச்சரிடம் அறிவித்தனர். அவனும் அரிகேதுவை அழைத்து, "அரிமா உரு எடுத்து, அவண் சென்று அத்திவிட்டனை அழித்து வருக," என்று பணித்தனன். அவனும் அவ்வாறே சென்று அந்நாட்டு மக்களை அச்சுறுத்தினன். பின்னர், மீண்டும் தூதுவரைத் திவிட்டன்பால் விடுத்தனன். அவரும் சென்று, "இளவரசரே, எம திறைவன் நும்மை இளைஞர் என்று மன்னித்தார். அன்றியும் நம் நாட்டை அழிக்கும் சிங்கத்தைமட்டும் அழித்துவிடுவீராயின், திறை செலுத்தியது போலாகும் என்று பணித்தனர். உடனே திவிட்டன் மாயச் சிங்கம் உள்ளவிடத்திற்குத் தனியே சென்று அதனைத் துரத்திச் செல்கின்றான். அவனைத் தொடர்ந்து விஜயனும் ஓடுகின்றான். அவ் விஞ்சையனான சிங்கமும் திவிட்டனைக் கண்டு நடுங்கி ஓடி உண்மையாகவே சிங்கம் உள்ள ஒரு மலைக் குகையில் நுழைந்து மறைகிறது. திவிட்டனும் அக்குகையினருகிற் சென்று கர்ஜித்தான். அப்பேரொலியைக் கேட்ட சிங்கமும் கர்ஜித்து திவிட்டன்மேல் பாய்ந்து வருகின்றது. திவிட்டன் அதன் வாயைப் பிடித்துக் கிழித்து அழிக்

கின்றான். அச்செயல் கண்டு விஜயன் மகிழ்ந்து திவிட்டனை நகருக்கு அழைத்துச் செல்கின்றான்.

இவையாவும் கண்ட விஞ்சையர் தூதன், சடியரச னிடம் நிகழ்ந்தவற்றைக் கூறுகின்றான். அரசன் மகிழ்ந்து அரசர்க்கு உரிய மணமுறைப்படி சுயம் பிரபையை அழைத்து வந்து, திவிட்டனுக்கு மணம் முடிக்கின்றான். இவை யாவும் கேள்வியுற்ற அச்சுவக் கிரீவன் வெகுண்டு, திவிட்டன்மேல் படை எடுத்து கின்றான். திவிட்டனும் எதிர்த்துப் போரிடுகிறான். அப்போருக்கு அஞ்சி அச்சுவக்ரீவனுடைய சேனை சிதறியோடுகிறது. அதைக் கண்ட அச்சுவக்கிரீவன் வெகுண்டு, தானே நேரில் வந்து திவிட்டனை விஞ்சை யால் வெல்ல இயலாது சக்கரத்தை விடுகின்றான். அது சென்று திவிட்டனை வணங்கி நிற்கின்றது. அதனைக் கண்டு மகிழ்ந்த திவிட்டன், முறைப்படி வணங்கி, அத்தேவதா சக்தியுள்ள சக்கரத்தினை அச் சுவக்கிரீவன்மேல் விட்டனன். அது சென்று அவனை அழித்தது. பின்னர், விஜய பலதேவனுடன் வாசு தேவனை திவிட்டன் திக்குவிஜயம் செய்து, மூன்று கண்டத்தையும் அடிப்படுத்தி, போதனபுரம் வந்து பட்டாபிஷேகத்துடன் முடிபுனைந்து ஆள்கின்றனன்.

பின்னர், பட்டமகிஷியான சுயம்பிரபைக்கு நன் முகூர்த்தத்தில் ஸ்ரீ விஜயன் என்ற புதல்வன் பிறந்து இனிது வளர்கின்றனன். பெயரனைக் கண்ட பயாபதி மகிழ்ந்து, இவ்வின்பங்களுக்குக் காரணம் முற்செய்த தவப்பயனாகும். ஆதலின் இன்னும் தவம் செய்ய முயலவேண்டும் என்று கருதி, அமைச் சரையும் உடன்கொண்டு, திருவிழவு இயற்றி பிஹி தாஸ்ரவ முனிவரிடம் அறங்கேட்டுத் துறந்து, வீடு பேற்றை அடைந்து என்றும் அழியாத இன்பத்தில் திளைக்கின்றார்.

ஜே ஜிநேந்திரா

சுபம்.



அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு.

வந்தே ஜிநவரம்.

அறமே துணை.

தோலாமொழித்தேவரியற்றிய

# சூளாமணி

(மூலமும் உரையும்)

---

## 11. துறவுச் சருக்கம்

**மன்னிய புகழி னான்றன் மகன்வழிச் சிறுவர் [1]வாயுள்**
**இன்னகை மழலை கேட்டாங் கினிதினி[2]னிருந்த காலை**
**மன்னுமெய்த் துறவிற் புக்கான் பயாபதி மன்னர் மன்னன்**
**அன்னதன் பகுதி தன்னை யறியுமா பகர லுற்றேன்.**

*பொழிப்புரை. நிலைபெற்ற புகழுடையவனாகிய பயாபதி வேந்தன் தன் மகன் திவிட்டன் தனயர்களாகிய (தன்) பேரன்மார்களின் இனிய மழலைச் சொல்லைக் கேட்டு ஆனந்தத்துடனிருந்து, பின்னர் இறைவனருளிய ஆகமத்துக் கூறும் மெய்த்தவத்தின்கண் சென்ற பகுதியினை அறியும் வண்ணம் இனிக் கூறுகின்றேன். இது நூலாசிரியர் கூற்று.

†விரிவுரை. இன்னகை-இனிய புன்முறுவல், பன்னுதல்-கூறுதல். 1

---

*இவ்வாறே பெரிய எழுத்தில் உள்ளது பொழிப்புரை யென்றும்,

†இம்மாதிரி சிறிய எழுத்தில் உள்ளது கருத்துரையும், விரிவுரையும் என்றும் அறியவும்.

பா - பே. 1. வாயில். 2. இருந்து பின்னர்ப்.

திருமகி ழலங்கன் மாற்பிற் செங்கணன் வணங்கச் செல்வப்
பெருமகிழ்வெய்தி வேந்தன் பிரசாபதி பெரிய வாட்கண்
உரிமையோ டிருந்த போழ்தி னொலிகல னொலிப்ப வோடி
அருமைகொ டிகிரி யாள்வான் சிறுவர்சென் றணுகினரே

*திருவும் மகிழும் மாலையணிந்த மார்பினனான திவிட்டன், பிரசாபதி வேந்தனை வணங்க, இல்வாழ்க்கையாகிய இன்பத்தில் மிகவும் மகிழ்ந்து தன் மனைவியர் முதலிய சுற்றத்தோடு வீற்றிருக்குமிடத்து, திகிரியாளும் திவிட்டனின் சிறுவர் ஆபரணம் ஒலிக்கச் சென்றடைந்தனர்.* 2

ஆங்கவ ரணைந்த போழ்தி னமிழ்துகொப் பளித்தபோலுந்
தேங்கமழ் பவழச் செவ்வாய் முறுவனீர் பருகித் [1]தேக்கி,
ஈங்கிவை யனைய தோற்றி யின்பமே [2]பருக நின்ற
வீங்கிய தவத்திற் கின்னும் வித்திடற் பால தென்றான்.

*சிறுவரைக் கண்டு களிகூர்ந்த வேந்தன், பவழம் போலும் செவ்வாயின் முறுவல் நீரைப் பருகி, அமிர்தம் கொப்பளித்தாலொத்த இன்பக் களிப்பிலாழ்ந்து, 'நுகர்ந்து தெவிட்டுதற்குக் காரணமான இவை போன்ற செல்வங்களை நமக்குத் தோன்றச்செய்து இன்பம் தந்த பூர்வ புண்ணிய காரணமான தவத்திற்கு இன்னும் வித்திடற்பாலது அவசியம்,' என்றெண்ணினான்.*

*வித்திடல் - தபோராஜ்யத்தினை மேற்கொள்ளல்; தவம் முத்திக்கு விதையாதலின், அங்ஙனம் கருதினன்.* 3

அலகுடன் விளங்கு மம்பொற் குடைநிழ லரசர் சூழ
உலகுடன் வணங்க வோடை யுயர்களிற் [3]றெருத்த மேலாற்
பலகுடை பணியச் செல்லும் பண்பிது நமக்குத் தந்த
நலனுடைத் தளிய நங்க ணல்வினைத் தெய்வ மன்றே.

பா பே. *1.* தேங்கி. *2.* பெருக. *3.* றெருத்த மேறிப்

'அலகு முதலியவற்றுடன் விளங்கும் பொற்குடையின் நிழலில் பல அரசர் சூழ்ந்துவர, உலகோர் ஒரு தன்மையாக வணங்க, நெற்றிப்பட்டமணிந்த பட்டத்து யானையின்மேல், பல குடை வேந்தர் பணியச் செல்லும் தன்மையாகிய இச்செல்வத்தினை நமக்குத் தந்தது பூர்வம் நாம் ஈட்டிய நல்வினையாகிய தெய்வ மன்றோ? அது மிகு நலனுடைத்தாகும்.

அலகு - சட்டம். 4

தன்னையோ ரரச னாக்கித் [1]தரங்கநீர் வளாக மாள்வித்
[2]தின்னுயி ராகிச் செல்லு நல்வினை யென்னு மின்ன
முன்னுப காரி தன்னை முதல்கெட முயலுங் கீழ்மை
நன்னரின் [3]மன்ன னன்றே நரகங்கட் கரச னாவான்.

'மேலும் அந்நல்வினை, தன்னையுடையானை ஒப்பற்ற அரசனாக்கிக் கடல்சூழ்ந்த உலகை ஆளச்செய்து இனிய உயிர் போலும் இன்பத்துத் தொடர்ந்து செலுத்தும் தன்மையது; அத்தகைய நல்வினையாகிய முன் உபகாரியை, முதல் கெட முயல்வதாகிய (அறத்தை மறத்தலாகிய) கயமைத்தன்மையுடன் நன்னெறி சிறிதும் இல்லாத வேந்தனே, துன்பங்களுக்குக் காரணமான நரகங்கட்கு வேந்தனாவான்.

புண்ணியத்திற்கு முதற்காரணம் திருவறம். அவ்வறத்தையே ஈண்டு முதல் என்றார். 'அறம் பொருள் இன்பம் மூன்றில் ஆதியால் மூன்றுமாகும்,' என்பார் வாமன முனிவர்; 'அறத்தினூஉங்காக்கமுமில்லை' என்பது திருக்குறள். 5

சென்றநாள் பெயரு மேனுஞ் செல்வமுஞ் செருக்கு மாக்கி
நின்றநா ணிலவு மேனு நெறிநின்று வருந்த வேண்டா
இன்றுபோல் வாழ்து மன்றே யிப்படித் தன்றி யாங்கள்
பொன்றுநாள் வருவ தாயின் வாழ்க்கையோர்
[பொருள தன்றே.

பா-பே. 1. தரங்கநீள். 2. இன்னுயிராகச். 3. மாந்தரன்றே.

'(நாம்) துய்த்துக் கழித்துக் கடந்த அந்நாள் மீண்டும் வருமாயினும், அரச செல்வமும், அச்செல்வத்தாலாம் செருக்கும் இன்று போலவே என்றும் நீடித்திருக்குமாயினும், நாம் வேறு வழியில் நின்று வருந்த வேண்டுவதில்லை ; இன்று போலவே என்றும் இன்பத்துடன் வாழலாம். இங்ஙனமன்றி, நாம் இறந்துபடும் நாள் வருவதாயின், நிலையாமையாகிய இவ்வாழ்க்கை ஒரு நற்பொருளதாகாது. 6

**எரிபுரை யெழில தாய விளந்தளி ரிரண்டு நாளின்**
**மரகத வுருவ மெய்தி மற்றது பசலை கொண்டு**
**சருகிலை யாகி வீழ்ந்து சரிந்துமண் ணுதல் கண்டும்**
**வெருவிலர் வாழ்து மென்பார் வெளிற்றினை விலக்க[1]லாமோ**

'சிவந்த எரி போலும் அழகிதாகிய இளந்தளிர், இரண்டுநாளில் மரகத மணி போலும் பசுமை நிறம் எய்தி, பின்னர் அதுவே சருகிலையாகி பூமியின் மேல் வீழ்ந்து, பின்னர் அழிந்து, மண்ணோடு மண்ணாவதை நேரில் கண்டுவைத்தும் (அதாவது அவ் விளந்தளிர் போலும் நம் வாழ்க்கை நிலையற்றதென்பதையறிந்தும்), அஞ்சுதலின்றி, 'நீண்ட நாள் வாழ்தும்,' என்றெண்ணுபவரின் அஞ்ஞானத்தினை விலக்க இயலுமா? இயலாது. 7

**பிறந்தனர் பிறந்து சாலப் பெருகினர் பெருகிப் பின்னை**
**இறந்தன ரென்ப தல்லா லியாவரு மின்று காறும்**
**மறைந்துயிர் வாழா நின்ரு ரில்லையால் வாழி நெஞ்சே!**
**சிறந்தது தவத்தின் மிக்க தின்மையே சிந்தி கண்டாய்.**

"மாந்தர் (பலர்) பிறந்தனர் ; பிறந்து, மிகவும் மேன்மையாகப் பெருகி வாழ்ந்தனர் ; பின்னர் இறந்தனர்,' என்பதல்லால், எவரும் இன்றைய வரை காலன்

---

பா - பே. 1. லாமே.

கையிலகப்படாது மறைந்து உயிர் வாழ்பவர் இல்லை; ஆதலின், என் நெஞ்சமே, நீ நன்றாக வாழ உனக்குத் தவம் செய்வதைக்காட்டிலும் சிறந்தது வேறொன்று இல்லாமையை நன்றாக ஆராய்ந்து உணர்க.

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு."

என்றார் தேவரும். 8

பிறந்துநாம் புறஞ்செய் கின்ற பேதையிவ் வுடலந் தானும்
இறந்தநாள் [1]போல்வ தன்று யிற்றையி னுளை வேறுய்ப்
பறைந்துநாம் பற்றப் பற்றப் பற்றுவிட் டகலு மாகிற்
சிறந்தனர் [2]பிறர்க ளியாரே சிந்தைநீ சிந்தி யென்றான்.

'நாம் மனிதனாய்ப் பிறந்து பேதைமையினால் புறம் செய்கின்ற இவ்வுடல், கடந்த நாளில் உள்ளது போலன்றி, நாளுக்குநாள் வேறாகி, நாம் இதன்மேல் பற்றுவைக்கப் பற்றுவைக்க அப்பற்றினைப் பிறர்க்குப் பறை சாற்றுவது போல நிலையாமையைத் தெரிவித்து நம்மை விட்டு அகலுமாகில், நெஞ்சமே, கூடப்பிறந்த உடலைக்காட்டிலும் நம் உயிரோடு கூடவரும் உறவினர் வேறு யாவருளர்? ஆதலின், வாழ்க்கை நிலையாமையை நீ நன்றாகச் சிந்தித்துப் பற்றகல்க.

நில்லாதவற்றை நிலையின என்றுணருதல் ஈண்டுப் பேதைமை; உணவு எண்ணெய் முதலியவற்றால் உடலை அழகுற வளர்த்தல் ஈண்டுப் 'புறம் செய்தல்' எனப் பட்டது. (உள்ளும் புறமும் என்பர் பலரும்.) 9

தொகைமல ரலங்கல் சூடித் தூநறுஞ் சுண்ண மப்பிப்
புகைநனி கமழ வூட்டிப் புறஞ்செயப் பட்ட மேனி
சிகையினோர் சிறுமுட் டீண்டச் சிதைந்தழுக் கொழுகு மாயி
னகைபெரி துடைத்து நாணு மிதனை நா மகிழ்த னெஞ்சே

பா பே. 1. போல்வதினரு யிற்றையின்னுளை. 2. பிறர் களன்றே.

'மனமே, தொகுத்துக் கட்டிய மலர் மாலையைச் சூடி, தூய நறுஞ்சுண்ணங்களைப் பூசி, கமழுமாறு வாசனைப் புகையையும் ஊட்டி, புறஞ்செய்து போற்றிக் காப்பாற்றுகின்ற நம் உடல், ஒரு சிறு முள்ளின் முனை தீண்டிவிட உடனே கெட்டுச் சீ முதலிய அழுக்கு ஒழுகித் துர்நாற்றமாக மாறிவிடுமாயின், இவ்வுடலின் பொருட்டு நாம் மகிழ்தல் மிகவும் நகுதற்குக் காரணமாயுளது; மேலும் வெட்கமுமாம். 10

**ஒழுகிய நடையு நீரு முதலகை யிகப்ப வூறும்**
**அழுகலிவ் வள்ள லியாக்கை யகம்புற மாயிற் றுயிற்**
**கழுகொடு கவருங் காக்கை கைத்தடி கொண்டு காத்தும்**
**அழகுள சுழலு மன்னோ வாயிரச் சாதி மாதோ.**

'மேற்கூறியவாறு புறஞ்செய்யவேண்டி ஒழுகிய செயலும், அதன் தன்மையும் கடந்து கைவிட்டு, ஊன் நாறும் அழுகலாகிய துர்க்கந்தச் சேற்றுடன் கூடிய இவ்வுடலின் உட்புறம் மேலாகுமாறு (கோணியைத் திருப்புவது போலத்) திருப்பிவிடுவோமாயின், கழுகு இனம் காக்கையினம் முதலியன கவர்ந்துண்ணும்; அதனைத் தடுக்க ஒரு தடியைக் கையில்கொண்டு காவல் புரிந்தாக வேண்டிய இலட்சணமுளதாகும்; மற்றும் எறும்பு முதலிய உயிர்களும் சூழ்ந்து பற்றிச் சுழலும்.

"பைமறியா பார்க்கப்படும்," என்றார் நாலடியாரிலும்; 'வினையின் வந்தது.........புறமறிப்பாராய்' (மணிமேகலை 4 : 113-121). "ஈச்சிறகன்னதோர் தோலறினும் வேண்டுமே காக்கை கடிவதோர் கோல்." (நாலடியார்) 11

**வல்வினை விளைத்த மாந்தர் மற்றதன் வித்து மாட்டிப்**
**புல்வினை கான மண்டிப் புலியின்வாய்ப் பட்ட தேபோ**
**னல்வினை யினிதி னூட்டி நல்வினை முதல்கண் மாறி**
**இல்வினை யின்பம் வெஃகி யிறுபவே யறிவி லாதார்.**

'வலிய தீவினையை ஈட்டிய மாந்தர் அத்தீவினையின் உதயமாகிய தீய (பாவச்) செயலில் ஒரு சேர நிகழ்ந்து, பின்னர் அற்பமாகிய அவ்வினைக் காட்டில் அகப்பட்டு நெருங்கி, புலியின் வாயிலகப்பட்ட மான் போல, நற்செயலை இனிதாக ஊட்டும் இன்பத்திற்குக் காரணமான நல்வினைக்குரிய திருவறத்தில் நிகழாது, மாறுபட்டு, இல்வாழ்க்கை இன்பத்தையே விரும்பிப் பற்றுபவர் அறிவில்லாதாரேயாவர்,' என்றெண்ணினன். 12

**இன்னன பலவுஞ் சிந்தித் திருந்தது மிகையென் றெண்ணி**
**மன்னவ னுழையர் தம்மான் மந்திரத் தவரைக் கூவிப்**
**பொன்னவிர் பவழத் திண்காற் புரிமணிக் கூட மெய்தித்**
**தன்னம ரமைச்ச ரோடு தானமர்ந் திருந்து சொன்னான்**

பயாபதி வேந்தன் வைராக்கியத்திற்குக் காரணமாகிய நிலையாமை முதலிய இவை போல்வன பலவற்றையும் சிந்தித்து, 'இதுவரை நாம் துறவு மேற்கொள்ளாதிருந்தது மிகை,' என்றெண்ணி, பவழத் தூண்கள் அமைந்த இரத்தினங்கள் பதித்த பொன்போல ஒளிரும் மாளிகையை அடைந்து, உழையவரால் தன்னோடொத்த அமைச்சரை வரவழைத்து முறைப்படியிருந்து அமைச்சரை வினவுகின்றனன்.

**மிகை - குற்றம்; மிகுதியும் ஆம்.** 13

**மலைபயில் களிநல் யானை மன்னரால் வவ்வ லின்றுய்க்**
**கலைபயில் மகளிர் கண்போற் கள்வர்கைப் படாது நாளும்**
**நிலையின செல்வக் [1]கூன நிகழ்வன வுரைமி னென்றான்**
**இலைபயின் மகரப் பைம்பூ ணெரிமணிக் கடகக் கையான்.**

தகடு பொருந்திய மகரம்போன்ற அஸ்த கங்கணமணிந்த பிரசாபதி வேந்தன், 'மலையிடத்துப் பயிற்சி

பா - பே. 1. கூனம் வருவன.

புரியும் கர்வமுள்ள யானைக்குத் தலைவர்களாகிய பகை வேந்தர்களால் பற்றப்படாததாகியும், கலை பயிலும் மகளிர் கண்கள் (காமுகர் மேல் தவறாது மோதுவது) போன்று கள்வர் கையிலும் அகப்படாததாகியும் நிலை பெற்ற நம் செல்வத்திற்கு ஊனம் நிகழ்வன உளவாயின் நீவிர் உரைமின்,' என அமைச்சரை வினவினன். 14

**ஆள்வினை மாட்சி யென்னு மிரண்டினு மரசு காத்துத்**
**தோள்வினைக் களவு காவ லுள்வழித் துன்னல் செல்லா**
**[1]வாள்வினைத் தடக்கை வேந்தே வருவது மற்று முண்டோ**
**கோள்வினை பயின்ற கூற்றங் குறுகல தாயி னென்றார்.**

'வாட் போரில் வல்ல வேந்தே, ஆளும் தகைமையுடைய அரசனின் முயற்சியும், நீதியை ஆராய்ந்துரைக்கும் அமைச்சரின் மாட்சிமையும் ஆகிய இரண்டினாலும் அரச பாரத்தைத் தோள் வல்லமையுடன் காவல் புரியுமிடத்து, கள்வர் முதலியோரால் ஏற்படும் துன்பம் இலதாகும்; கொலைத் தொழிலிலேயே பயிற்சியுள்ள காலன் பற்றாதிருப்பானாயின், அது வரை துன்பம் வருவதும் உண்டோ? இல்லை,' என்றனர். 15

**கோள்வினை பயின்ற கூற்ற வரசனாற் கொள்ளற் பால**
**கேள்வினை பயின்ற நூலிற்[2]கிளர்ந்துநீ ருரைமி னென்ன**
**வாள்வினை புரிந்த தோளான் மனத்ததை யுணர்ந்து மற்றோர்**
**நாள்வினை புரிந்து நங்க ளுயிர்நிறை கொள்ளு மென்றார்**

'அங்ஙனமாயின், அமைச்சர்காள், கொலைத்தொழிலிலேயே பயிற்சியுள்ள கூற்றுவனால் நம் உயிரைக் கொள்ளும் பகுதியைத் தடுக்கும் உபாயத்தை நம் பெரியோர்கள் கிளந்துரைத்த நூலினுள் ஆராய்ந்தறிந்து நீவிர் உரைமின்,' என்றதும் அவர்கள், வாள் தொழில்-

பா - பே. 1. வாள்வலித். 2. கிளந்து.

வல்லமையால் உலகை இரட்சித்த பயாபதி வேந்தனது உள்ளத்தை உணர்ந்து, 'வேந்தே, அக்கூற்றவரசன் நம் ஆயுள் நாட்களின் அளவறிந்து முடிவில் நம் உயிரைக் கவர்ந்தே செல்வான்,' என்றனர். 16

**சந்திஞற் றவிர்க்க லாமோ சார்பிஞ லொழிக்க லாமோ**
**பந்தியா முன்ன நாமே பகைத்திருந் துய்ய லாமோ**
**வெந்திறற் காலன் றன்னை மேற்சென்று வெல்ல லாமோ**
**உய்ந்துயிர் யாங்கள் வாழு முபாயநீ ருரைமி னென்ருன்.**

வேந்தன், 'அமைச்சர்காள், வெந்திறல்காலனுகிய அவனேடு நாம் கூட்டுறவு கொண்டு தூதுவர் மூலம் சமாதான உடன்படிக்கை செய்து நம்மிடம் வரவொட்டாது தவிர்க்கலாமா? அல்லது அவனை அடைக்கலம் புகுந்து உறவுகொண்டு தடுக்கலாமா? அல்லது, அவன் நம்மைச் சேரும் முன்னம் அவனேடு பகைத்திருந்து உய்யவியலுமா? அல்லது, அவன் மீது நாமே படையெடுத்துச் சென்று வெல்லலாமா? எங்ஙனமாயினும்யாம்பிழைத்து உயிர்வாழும் உபாயம் நீவிர் உரைமின்,' என்றான். 17

**பீழைமை பலவுஞ் செய்து பிணிப்படை பரப்பி வந்து**
[1]வாழுயிர்ப் பொழித்து வவ்வி வலிந்துயிர் வாங்கி யுண்ணுங்
**[2]கூழைமை பயின்ற கூற்ற வரசனைக் குதிக்குஞ் சூழ்ச்சி**
**யாழியந் தடக்கை வேந்தே பயின்றிலம் யாங்களென்ருர்**

அமைச்சர், 'வலிமை மிக்க அழகிய விசாலமான கைகளையுடைய வேந்தே, அக்காலன் பிணியென்னும் படைகளுடன் வந்து துன்பம் பலவும் செய்து, நாம் உயிர் வாழ்வதற்குக் காரணமாகிய உயிர்ப்பை (தசப்பிராணனை) அழித்து, நம் உயிரை வலிந்து அபகரித்துப் பிரித்து உண்ணும் கடமையிற் பயின்றவனவன்; அக்கூற்றவரசனைக் கடக்கும் உபாயம் யாம் அறிந்திலேம்,' என்றனர்.

---

பா - பே. 1. வாழுயிர் வாரி, 2. கூழமை.

பீழை - துன்பம். உயிர்ப்பு - உசுவாச நிசுவாசம். குதித்தல் - கடத்தல், வெல்லுதலுமாம். பாழி - வலிமை.

"உடற்றும் பிணித்தீ வுடம்பின் உயிர்பெய்திட்டு
அடுத்துணர்வு நெய்யாக வாற்றல் துவையாக
குடித்துண்ணும் கூற்றம் குடில்பிரியா முன்னே
கொடுத்துண்மின் கண்டீர் குணம்புரிமின் கண்டீர்."

என்ற திருத்தக்க தேவர் வாக்கு ஈண்டு ஒப்பு நோக்கியறிக. 18

ஆயினக் காலன் பாணி யாம்பிற வரச செல்வ
மேயினங் களித்தி யாங்கள் விழைந்துயிர் வாழும் வாழ்க்கை
பாயிய வெழுந்த வேங்கை பாரிக்கு மளவிற் பைம்புன்
மாயிருஞ் சுருளை மேயு மான்மறி போலு மென்றான்.

'(அமைச்சர்காள்) அங்ஙனமாயின் நமக்குச் சொந்தமின்றி அன்னியமாகிய இந்த அரச செல்வத்து யாம் விரும்பிவாழும் வாழ்க்கை, அக்காலன் கையிலகப்பட்டதேயாம்; அஃதெப்படியுளதெனின், பாயவெழுந்த வேங்கைப்புலி தாவுமிடத்துப் பசிய அறுகம்புல்லைக் கடித்துத் தின்னும் மான் குட்டியின் செயல்போலும்,' என்றனன்.

மறி - பெண்மான் எனலுமாம். பாரித்தல் - தாவுதல். 'மாயிரு வேங்கை' எனினுமாம். பைம்புல் சுருளை. சுருளை மான் மேயுமெனவே ஈண்டுப் புல் அறுகம்புல் என்க. 19

அருங்களி யானை வேந்தே யத்துணைப் பாணி யுண்டோ
கருங்களி மதநல்யானை வாய்புகு கவள மேபோற்
பெருங்களி யாளன் காலன் பிறையெயி றணிந்து நின்ற
இருங்களி யாணர் வாழ்விற் கிமைபிடை பெரிது கண்டாய்.

'வேந்தரே, நீவிர் கூறும் அவ்வளவு கால தாமதமும் உண்டோ? கறுத்த மத யானையின் வாயில் புகும் கவளம் போல, பெருங்களியாளனாகிய காலனது பிறை

போலும் விளங்க பற்களினிடத்தே அகப்பட்டு நின்ற இல்வாழ்க்கையில் மகிழ்ந்தோரின் வாழ்க்கையின் அழிவிற்கு இமை கொட்டும் நேரமும் அதிகமாகும்,' என்றனர் அமைச்சர்.

கண்டாய் - முன்னிலை அசை. 20

**இன்னுயி ரழியும் போழ்து மிறைவனுக் குறுதியல்லான்**
**முன்னிய முகமன் மாட்டா முற்றிய வறிவி னரை**
**மன்னவன் மகிழ்ந்து நோக்கி வாழுயிர் வவ்வுங் காலன்**
**றன்னை நா மிகந்து சேருஞ் சரண்பிறி துரைமி னென்றான்**

(ஏனைய பொருளேயன்றி) தம் இனிய உயிரே அழியய பேருங்காலத்தும், தம் தலைவனுக்கு உறுதி யளிக்கும் உதவி புரிவதல்லது வேறு முகமனை விரும்ப மாட்டாத முதிர்ந்த அறிவுடையராகிய அவ்வமைச்சர் களை வேந்தன் மகிழ்ந்து நோக்கி, 'உலகில் வாழும் உயிர்களை அபகரிக்கும் காலனைக் கடந்து நாம் அடை யும் அடைக்கலம் இன்னும் வேறே ஏதாகிலும் இருக்கு மாயின் நீவிர் உரைப்பீராக,' என்றனன். 21

**இனியன போன்று தோன்றி நுகர்ந்தவற் கிறுதி செய்யுங்**
**கனிபுரை கிளவி நீக்கிக் கண்ணனார் கருத்துட் கொண்டு**
**துனிவன நினையுங் காலன் றுணிவன துணியுஞ் சூழ்ச்சி**
**முனிவரை வணங்கிக் கேட்டு முயறுமோ வடிக ளென்றார்**

அமைச்சர்கள், 'அடிகளே, தம் இன்பத்தை நுகர்பவனுக்கு இனியவை போன்று தோன்றி, முடி வைச் செய்யும் கனிபோலும் சொல்லையுடைய மாதரை வெறுத்து நீக்கிக் கண்போன்றவராகிய ஞானிகளின் கருத்தை உட்கொண்டு தவமியற்றும் மாமுனிவர்களை வணங்கி, துன்பம் புரிய நினையும் காலனது துணிவைக் கடக்கும் உபாயம் கேட்டறிவோம். அதற்குரிய நன் முயற்சியுள் ஈடுபடுவோமா?' என்றார்கள். 22

**குருகயா வுயிர்க்குஞ் சோலைக் குளிரணிப் பழன நாட!**
**முருகயா வுயிர்க்கும் பூவார் முறிமிடை படலை மாலைத்**
**திருவயா வுயிர்க்கு மார்பற் செறிதவர் சரண மூலத்**
**தருகயா வுயிர்ப்பி னல்லா லரண்பிறி தாவ துண்டோ ?**

'பறவையினம் இளைப்பாறும் சோலைகளையும், குளிர்ந்த அழகிய மருத நிலங்களையும் உடைய நீர்வள முள்ள நாட்டை ஆளும் வேந்தரே, மணம் விரவிய மலர் செறிந்த பச்சிலை மாலைகளையணிந்த திருத்தங் கும் மார்பினையுடைய மன்னன் தவ முனிவர்களின் பாத மூலத்து அருகணைந்து அடைக்கலம் புகுந்தா லல்லது (காலனைத் தடுக்கும் மார்க்கமாகிய) புகலிடம் வேறொன்றுண்டோ? இல்லை,' என்றனர். 23

**எரிகின்ற சுடரி னெய்பெய் திடுதிரி தூண்டி யாங்கு**
**விரிகின்ற புலமை வீரர் மொழிதலும் விசோதி யன்றாற்**
**பரிகின்ற வுரிமை வல்ல படரொழி மனத்த னானன்**
**சொரிகின்ற மதுவின் மாரித் [1]துவலையி னனைந்த தாரான்.**

சொரிகின்ற தேன்மாரித் திவலைகளால் நனைந்த மாலையணிந்தவனாகிய பயாபதி வேந்தன், மிகுந்த புலமை வீரர்களாகிய அமைச்சர்கள் இவ்வண்ணம் கூறியவுடன், எரியும் விளக்கில் நெய் சொரிந்து திரியைத் தூண்டினாலொப்ப (தான் கருதியவாறே முடி வடைந்த காரணத்தால்) விசோதி பரிணாமமுடைய வனாகி, பரிந்து இன்பம் அளிக்கின்ற உரிமை மாதர் களின் துன்பத்தை வல்லமையுடன் பரிகரித்துத் துறவு மேற்கொள்ளும் உறுதியுடைய உள்ளத்தனானான்.

ஈண்டுக் கூறிய விசோதி பரிணாமம் பஞ்சலப்தி களில் இரண்டாவது எனலாம். அதன் விவரம் மேருமந்தரம் 6-ஆம் சருக்கத்துக் காண்க. துவலை - துளி. 24

---

பா. - பே. 1. திவலையி.

**கரும்பணி மொழியி னார்தங் கருந்தடங் கண்ணும் வண்டுஞ்**
**சுரும்பணி முலையி னருந் தொடையலுந் துதைந்த மார்பன்**
**அரும்பணி யசோக நீழ லடிகள தணிபொற் கோயில்**
**விரும்பணி விழவு சாற்றி வியன்முர சறைக வென்றான்.**

*கரும்பினும் இனிய மதுரமொழிபேசும் மாதர்களின் கறுத்து நீண்ட கண்களும், வண்டும் சுரும்பும் மொய்க்கும் மலர் மாலையும், அம்மாலையணிந்த மாதர்களின் மார்பும் புதைந்த மார்பினையுடைய வேந்தன், அமைச்சரிடம் 'அரும்புகளால் தேவர் அலங்கரித்த அசோக நிழலிலமர்ந்த அடிகளாகிய அருகனது அரும்பொன்னாலாகிய கோயிலில் யாவரும் விரும்பும் திருவிழா நடத்த வேண்டுமென்பதனை முரசறைவித்துத் தெரிவிப்பீராக!' என்றனன்.*

*அரும்பு அணிந்த அசோகம்.* 25

**அரசன் உத்தரவை மேற்கொண்ட அமைச்சர் முரசறைவோனுக்குக் கட்டளையிட, அவன் முரசறைந்து தெரிவித்தல் :**

**ஒளியவ னுலகந் தன்னுட் கரந்தவ னுயிர்க ளுய்யும்**
**அளியவ னருள்செய் யாழி யுடையவ னடிமை செய்வார்க்**
**கெளியவ னெந்தை பெம்மாற் கியற்றிய விழவின் மிக்க**
**களியவ ரென்ப செம்பொற் கதிர்முடி சூடு வாரே.**

*'(உலகிர்), மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று ஒளியையுடையவனும், உலகோரின் உள்ளத்தில் மறைந்தவனும், உயிர்கள் உய்யுமாறு அருள் பாலித்தவனும், அருள் செய்யும் அறவாழி வேந்தனும், அடிமைப் பணி புரியுமவர்கட்கு எளியனாகக் கிடைக்கக் கூடியவனும், எந்தை பெருமானுமாகிய ஆதிபகவனுக்கு இயற்றும் திருவிழாவில் ஈடுபட்டுக் களிப்பவர் செம்பொன் முடியணிந்த தேவராவர் என்ப.*

*உலகத்துக்கரத்தல் - சர்வ வியாபி எனலுமாம்.* 26

அருள்புரி யழலஞ் சோதி யாழியா ஞதி யில்லான்
மருள்புரி வினைகட் கென்று மறுதலை யாய வாமன்
இருள்புரி யுலகஞ் சேரா வியனெறி பயந்த பெம்மான்
பொருள்புரி விழவு காண்பார் புண்ணிய வுலகங் காண்பார்

'அருள் புரியும் ஒளி வடிவினனும் அருளாழியுடையவனும், ஆதியந்தமில்லாதவனும், உயிர்களை மயங்கச் செய்யும் தீவினைகட்கு என்றும் பகையான வாமனும், (சர்வஞ்ஞனும்) அஞ்ஞானத்தை அடைவிக்கும் நாற்கதிகளிலும் சேராத தூய நெறியைத் தெரிவித்தவனும் ஆகிய எம்பெருமானது அறிவுப்பொருள் சேர்ந்த விழவு காண்பவர் புண்ணியவுலகமாகிய தேவருலகம் அடைவர்.

'ஆதியில்லான்' எனவே, அந்தமில்லான் என்பதும் போதரும். 'பொருள்புரி விழவு' என்பதற்கு, 'மெய்ப்பொருள்களைப் புரிந்துகொள்ளும் தர்மோபதேசமுடையதே திருவிழா,' என்பது கருத்து. 27

கண்ணிய வறிவன் செல்வ விழவினுட் களித்த மாந்தர்
புண்ணியத் துகள்க ளென்னும் பொற்சுண்ணம் புதைய வாடிப்
பண்ணியன் மொழியி னார்தங் கருங்கண்ணாற் பருகு நீர்மை
விண்ணிய லுருவ மெய்தி விளங்கிவீற் றிருப்ப ரன்றே.

'கண்ணியமான தூய அறிவனது செல்வ விழாவினுள் களித்த மாந்தர், தர்மானுபந்தி புண்ணியத்தால் மிகுதியாகப் பற்றப்பட்டவராகி, கீதத்தினுமினிய மதுர மொழியுடையாராகிய தேவமாதரின் கடைக்கண் பார்வைக்கு இலக்காகத் தேவராகி இன்புறுவர்.

தருமானுபந்தி-தருமத்தைத் தொடர்ந்து செல்வது. 28

எல்லைசான் முரசிற் சாற்றி யின்னன வறைத லோடு
மல்லன்மா நகரங் கேட்டே வானுல கிழிந்த தேபோன்
முல்லைவான் கண்ணி சூடி முகிணகைக் கலங்க டாங்கிச்
செல்லும்வாய் தோறுஞ் செல்வ விழவணி தேர்த்த தன்றே.

(ஆதலின் யாவரும் செல்வன் விழவினுள் கலந்து கொள்ளவேண்டுமென்பது நம் வேந்தரது ஆணை,' என்று) அளவோடமைந்த முரசறைந்து இவை போல்வன தெரிவிக்கவும், வளமார்ந்த அந்த மாநகரத்தி லுள்ளார் கேட்டு, தங்களை முல்லை மாலையாலும் ஆபரணங்களினாலும் அலங்கரித்து, தேவ லோகமே வந்து தங்கினாலொப்ப வாயில்தோறும் செல்வத் தன்மை பொருந்தத் திருவிழாவைத் தெளிவித்தனர். 29

**இன்னிசை முரசங் கேட்டே மெய்பெரி தினிய கேட்டா**
**மன்னிய நங்கள் வாணுள் வாழ்கநம் மிறைவ னென்னுப்**
**பொன்னியன் மலருஞ் சாந்துஞ் சுண்ணமும் புகையும் [பொங்கத்**
**துன்னிய நகர மாந்தர் [1] துறக்கம்பெற் றவர்க ளொத்தார்.**

இனிய முரசொலியைக் கேட்டு அந்நகரமாந்தர், 'நம் வாழ்நாளில் மிக இனியன கேட்டோம்!' என்று உள்ளமும் உடலும் பூரித்து, 'நம் இறைவன் நீடூழி வாழ்வானாக!' என்று தூயமலர், பொற்சுண்ணம் முதலியன மிகுதியாகச் சேகரித்தவராகித் தேவருலகை அடைந்தார் போன்று இன்பத்துக் களித்தனர். 30

**பூரண மணிக்குட நிரைத்த பொன்னணி**
**தோரண மெடுத்தன துதைந்த வெண்கொடி**
**வாரணி முரசொடு வளைக ளார்த்தரோ**
**காரணி கடலொலி கைத விர்ந்ததே.**

பொன்னாலாகிய அழகிய பூரண கும்பங்கள் வரிசை பெற்றன; வாயில்களில் தோரணங்கள் கட்டப் பட்டன; புதிய வெண்கொடிகள் இல்லந்தோறும் நாட்டப் பெற்றன; முரசும் சங்கும் எங்கும் முழங்கக் கேட்க, இவ்வாரவார ஒலியால், மேக முழக்கத்துடன் அலைகடல் ஒலியும் அடங்கிக் கேளாதொழிந்தது.

---

பா - பே. 1. துறக்கம் புக்கவர்கள்.

கைதவிர்தல் - கைவிடல், ஒலிக்கும் அலை ஒலியைக் கைவிடல். அரோ - அசை. 31

விரையினுன் மெழுகிய வீதி வாயெலாந்
திரையினூர் செழுமணி முத்தஞ் சிந்தினூர்
உரையினு லென்னேயவ் வொளிகொண் மாநகர்
புரையினுற் பொன்னுல கிழிந்த தொத்ததே.

சந்தனுதி வாசனைத் திரவியங்களால் மெழுகிய வீதியிடமெங்கும் அலையினின்றும் கொண்டு வரப்பட்ட சிறந்த முத்துமணிகள் பரப்பப்பட்டன; பல சொல்லி என்னை! ஒளிதங்கிய அம்மாநகர்க்கு உவமை கூறு மிடத்துத் தேவருலகமே இறங்கிவந்து பூமியில் தங்கினு லொத்துளது. 32

கழுமிய காழகி லாவி காமரு
செழுமணி மாளிகைச் சென்னி சூழ்வது
விழுமணி விளங்கிய விலங்கன் மீமிசைத்
தழுவிய விளமழை தவழ்வ தொத்ததே.

மணிகளிழைத்த மாளிகைகளின் மேல் மணங் கமழும் அகில் தூபம் சூழ்வதைப் பார்த்தால், சிறந்த மணிகள் பிறத்தற்கிடமான மலைகளின் மேல் வெண் (மாசி) மேகம் தவழ்ந்தாற் போன்றது.

மாளிகை மலையினுக்கும், புகை மேகத்திற்கும் உவமை. 33

இதுமுதல் இரண்டிரணடு கவிகளில் முக்குலத்தவர் வருகை கூறுகிறுர்.

அந்தணர் அணிபெற வரல்:

வெண்டுகி லுடுத்துவெண் சாந்து மெய்வழித்(து)
ஒண்டிரண் மல்லிகை யொலியல் சூடினுர்
வண்டிரண் மணிமுத்தும் வயிரச் சாதியுங்
கொண்டிய லணியொடு கோலந் தாங்கினுர்.

வெண்மருப் பிரட்டைய வேழ மீமிசைக்
கண்மருட் டுறுப்பன கமலப் பூப்பலி
விண்மருட் டுறுப்பன வேந்தி வேதியர்
மண்மருட் டுறுப்பதோர் வகையின் மன்னினர்.

*ஒழுக்கத்தால் விண்ணவரையும் மருளச்செய்யும் அந்நாட்டின் அந்தணர்கள், வெண்டுகிலுடுத்து, வெண்சாந்து பூசி, தூய்மையாகக் கட்டப்பெற்ற மல்லிகை மாலையணிந்து, முத்து வயிரம் முதலிய வற்றாலாகிய அணிகலன்களை அலங்காரமாக அணிந்து, வெண்மையான கிம்புரி அணியப்பெற்ற இரண்டு தந்தங்களையுடைய யானைகளின்மேல் காண்பவர் கண்களை மருட்டும் தாமரை முதலிய அஷ்டவித அர்ச்சனை திரவியங்களுடன் மண்ணில் காண்பார் மருளும் வகையில் வந்து கூடினார்கள்.* 34—35

வேந்தர் விருதுடன் வரல் :

செம்மலர்க் கண்ணியர் செம்பொற் றாரினர்
கொய்ம்மலர்க் குங்குமங் குழைந்த சாந்தினர்
கைம்மலர் மணிநகைக் கடகம் வில்லிட
மெய்ம்மல ரணியினர் வேந்த ராயினர்.

[1]செந்நிறக் குவளைகை செய்த சூட்டினர்
அந்நிறந் தழுவிய வரத்த வாடையர்
மெய்ந்நிறஞ் செய்வன வேழ மீமிசைக்
கைந்நிற மலரொடு கலந்து தோன்றினர்.

*சிற்றரசர் முதலிய க்ஷத்திரியர் பலர் செந்நிற மாலையைச் சிரசிலணிந்து, செம்பொன் மாலையை மார்பிலணிந்து, குங்குமப் பூக்கலந்தரைத்த செஞ்சந் தனத்தை முறைப்படி பூசி, கடகம் முதலிய பல ஆப*

---

பா-பே. 1. *செய்ந்நிற.*

ரணங்களையும் அலங்காரமாக அணிந்து, செங்குவளை மாலையை நெற்றிச் சூட்டாக அணிந்து, செந்நிறப் பட்டாடையை உடையாக அணிந்து, செம்பட்டுப் போர்த்து, செம்புகருடைய யானைகளின்மேல் எண் வகை அர்ச்சனா திரவியங்களுடன் வந்து தோன்றி னார்கள். 36-37

வணிகர் வகை பெற வரல் :

**பொன்மலர்க் கண்ணியர் பொன்செய் சுண்ணமொய்**
**மின்மலர் மேனிமேல் விளங்க வப்பினார்**
**மென்மல ரணிநகை மிளிருங் கோலமொ(டு)**
**இன்மல ரிருநிதிக் கிழவ ரீண்டினார்.**

**பேரொளிப் பீதக வுடையர் பைம்பொனால்**
**ஆரொளி தழுவிய வலர்செய் பூப்பலி**
**போரொளி யானைமே னிரைத்துப் போந்தனர்**
**வாரணி வனமுலை யவரொ டென்பவே.**

சங்கநிதி பதுமநிதி ஆகிய இருநிதித் தலைவர் களாகிய வணிகர்கள், மஞ்சள் நிற மலர் மாலை சூடி, மஞ்சள் நிறமாகிய பொற்சுண்ணம் முதலியவற்றை அணிபெற அணிந்து, மணிகளிழைத்த மஞ்சள்நிறப் பொன் நகைகளையும் மஞ்சள் பட்டுடையும் அணிந்து, மஞ்சள் பட்டைப் போர்த்த யானைகளின்மேல் மங்கள கரமான மஞ்சள் நிறமலர் முதலிய அஷ்டவித அர்ச்சனா திரவியங்களுடனும் தங்கள் தங்கள் மனைவிமார் முதலிய பரிவாரத்துடனும் வந்து கூடினார்கள். 38-39

அரசன் விழாவிற்கெழுதல் :

**நகரமாங் கெழுந்தபி னரலுஞ் சங்கொடு**
**முகரவாய் மணிமுர சதிரு மூரிநீர்**
**மகரமால் கருங்கடன் மருளுந் தானையான்**
**சிகரமால் யானைமேற் செல்வன் றோன்றினான்.**

இவ்வண்ணம் முக்குலத்துள்ள நகரமாந்தர் யாவரும் தங்கள் தங்கள் வாகனங்களின்மேல் ஏறி வந்தவுடன், குவிந்த சங்க நாதத்தின் ஒலியினோடு பேரொலி பொருந்திய முரசும் அடிபட்டதிர, மகரம் உலவும் விசாலமான கடல் போலும் சேனைச் செல்வனாகிய பயாபதி வேந்தன், பட்டத்து யானையின்மேல் ஏறினான்.

முகரம் - பேரொலி. சங்கத் தொனியும் முரசொலியும் வேந்தன் வரவை உணர்த்தும். முரசு - ஒருவகைப் பேரிகை. 40

வேல்புரை கண்ணியர் கவரி வீசவெண்
பால்புரை பவழக்காற் குடையி னீழலான்
மால்புரை கருங்கடல் வளாகங் காவலன்
கால்புரை புரவியங் கடலுட் டோன்றினான்.

வேல் போலும் கண்களையுடைய வாரவிலாசினிகள் கவரி வீச, பால் போலும் பவழக் காம்பினையுடைய வெண்கொற்றக் குடையின் கீழ்த் திருமாலைப் போலக் கடல் சூழ் உலகின் காவலனாகிய வேந்தன், காற்றினும் கடுகச் செல்லும் குதிரைப்படை முதலிய சேனைக்கடலின் மையத்தே வந்து தோன்றினான். 41

புதமெழு புரவிகள் புடை[1]ப ரந்திடை
மதமழை பொழிவன வயிரக் கோட்டன
கதமழ லெழவுமிழ் தகைய காணில
விதமெழு களிறுகள் பலமி டைந்தவே.

குளம்படியினின்றும் துகள் பரவுமாறு தாவி எழும் குதிரைகள் பக்கத்தே பரந்து வர, மதமழை சொரிவனவும் வயிரக் கிம்புரி அழுத்திய கொம்பினையுடையனவும் அழல் போலும் கோபத்தை உமிழும் தன்மையினவுமான யானைப் படைகளும், இவ்வளவு

---

பா - பே. 1. பரந்திட.

என்று அளவிட்டுக் காண்பதற்கு இயலாத விதமாய் வந்து நெருங்கின.

**கர்ணில-காண முடியவில்லை எனலுமாம். புதம்-குளம்பு.** 42

**ஆர்த்தன பல்லிய மதிர்ந்த குஞ்சரந்**
**தேர்த்தன தேர்க்குழாந் [1]திகைத்த பல்லுயிர்**
**போர்த்தன கொடிமிடை பொழிந்த பூமழை**
**வேர்த்தன விளிந்தன வினைக ளென்பவே.**

பதினெண் வகை வாத்தியமும் ஒலித்தன; யானைகள் எங்கும் அதிர வீறிட்டன; தேர்த்தொகுதி நெருங்கிக் கலந்தன; பல்லுயிரும் மயங்கின; கொடிகள் நெருங்கி மூடின; பூமழை பொழிந்தன; ஆகவே பலர்க்கும் தீவினைகள் நடுங்கினவாகி அகன்றோடின.

**தேர்த்தல் - கலத்தல்.** 43

**விரிந்துயர் வெள்ளிவெண் குடையின் மாடெலாந்**
**திருந்திய சாமரை திசைக டேர்த்தன**
**பரந்தெழு பாற்கடற் பரவை வெண்டிரை**
**[2]நிரந்தெழு நுரையொடு நிரைத்த வொத்தவே.**

வெள்ளியினலான காம்பமைந்த எண்ணற்ற குடைகளின் அண்மையில் திருத்தமாகிய சாமரைத் தொகுதிகள் எத்திசையும் நெருங்கின; அவை, மிகவும் பரந்த பாற்கடலின் அலைகளுடன் வரிசை பெற்றெழும் நுரையின் வரிசையோடொக்கும்.

**குடை கடலின் அலையினுக்கும், சாமரை அவ்வலையின் நுரையினுக்கும் உவமை.** 44

**பீலியந் தழைபிணித் திட்ட வட்டமும்**
**ஆலியங் கசைப்பன வால வட்டமு**
**மேலியங் கொளியவன் மறைய வேய்ந்தரோ**
**காலியங் கிடவிடங் காண்கி லாரரோ.**

---

பா - பே. 1. திசைத்த. 2. நிரைந்தெழு.

மயிலிறகினால் கட்டப்பட்ட மங்களகரமான விசிறிகளும், பெருமையுடன் அசைவனவாகிய ஆலவட்டமும், வரிசைபெற்று மூடி வான்மேல் செல்கின்ற ஆதவன் ஒளியையும் மறைத்துவிட, அதனால் கால் அடியெடுத்து வைக்கவும் இடம் காண்கிலராகிக் களிப்பெய்தினரென்க. 45

**சந்தனஞ் செறிந்தன செப்புந் தண்புகைக்**
**கந்தமே நிறைந்தன கரண்ட கங்களுங்**
**கொந்துமொய்ம் மலர்நிறை கோடி கங்களும்**
**உந்தியொன் றொன்றனை யூன்று கின்றவே.**

சந்தனம் நிறைந்தனவாகிய சந்திரகாந்தச் செப்பும், மணமும் குணமும் விரவிய தூப கரண்டகங்களும், நெருங்கிய கொத்தாகிய மலர் நிறைந்த பல பூந்தட்டுகளும், ஒன்றோடொன்று நெருங்கி உராயாநின்றன. 46

**நிரந்தன பூப்பலி நிரைகொண் மாரியாய்ச்**
**சொரிந்தன சுரும்பிவர் துணர்கொள் பூமழை**
**பரந்தன மங்கலப் பதாகை யவ்வழிக்**
**கரந்தன கருவினைக் குழாங்க ளென்பவே.**

எண்வகை அர்ச்சனை திரவியங்கள் அளவின்றிக் குவிந்தன; சுரும்புகள் இவரும் கொத்துக் கொத்தாகிய பூக்கள், மாரி போலச் சொரிந்தன; அட்டமங்கலங்களும் கொடிகளும் எங்கும் நிறைந்து பரந்தன; அந்தக் கணமே மாந்தர்களின் வலிய தீவினைக்கூட்டங்கள் ஓடி ஒளிந்தன என்பர்.

அட்ட மங்கலங்களாவன :—1. ப்ருங்காரம் - கெண்டீர், 2. தாலம் - ஆலவட்டம் 3. கலசம் - பூர்ணகடம், 4. துவசம் - கொடி, 5. சுப்பிரதிட்டம் - சந்தனக் கிண்ணம் (போல்வது), 6. சுவேத ஆதபத்திரம் - வெண்குடை, 7. தர்ப்பணம் - கண்ணடி, 8. சாமரை - கவரி என்பனவர்கும். 47

பாடுவார் பலாண்டிசை பரவு வார்பரந்(து)
ஆடுவா ரறிவனைப் பரவி யார்களுங்
கூடுவார் குழுவுமெய் குழுமி யெங்கணும்
ஊடுதான் வியலிட முள்ள தில்லையே.

சங்கீதம் பாடுமவர்களோடு பல்லாண்டு கூறுமவர்களும், வேதபாராயணம் பண்ணுமவர்களும், எங்கும் பரந்து ஆனந்த நடனம் புரியுமவர்களுமாகி, வாலறிவனாகிய இறைவனைப் பரவிப் பலரும் ஒன்று கூடுவர்; அங்ஙனம் கூடுமிடத்து, அவர்கள் உடல்கள் ஒன்றோடொன்று (நெருக்கத்தால்) உராய்தலின், ஓரிடத்தும் வெற்றிடமாயுள்ள இடம் இல்லை. 48

நொவ்வகை வினைப்பகை யகற்றி நூனெறி
செவ்வகை மொழிந்தவன் செல்வச் சேவடிக்(கு)
இவ்வகை யெழுவகை விழவு செல்வுழி
நெய்வகை வேலவ னிலைமை கேட்கவே.

உயிர்கள் தளர்ச்சியடையுமாறு துன்புறுத்தும் வினைப் பகைவரை வென்று, செவ்வனே சன்மார்க்க நெறியை முதன்முதலாகத் தெரிவித்த முனைவனுடைய செல்வச் சேவடிக்கு இவ்வண்ணம் திருவிழா இயற்ற நகரமாந்தர் செல்கின்ற காலத்து, வேலவனாகிய வேந்தனது நிலைமை யாதென யான் கூறக் கேட்பீராக.

வேலுக்கு எண்ணெய் பூசி நீராட்டுதல் மரபு. 49

நீர்ப்பலி விரைப்பலி நிரந்து தேனிமிர்
பூப்பலி யெனவிவை நிரைத்துப் புண்ணியன்
சீர்ப்பொலி சினகரஞ் சென்று சேர்ந்தனன்
ஆர்ப்பொலி தழூவிய வரவத் தானையான்.

ஏனைய ஒலிகளைத் தன்னுள்ளே அடக்கத்தக்க மிக்க ஒலி தங்கிய சேனையையுடைய வேந்தன்; தூய

கரகத்திலுள்ள நீர்ப்பலியும், தூபம் முதலியவற்றிற்கு வேண்டிய விரைப்பலியும், ஏனைய அர்ச்சனு திரவியங்களுடன் தேனினம் ஒலிக்கும் பூப்பலியும் என்றிவை முதலியன முறைப்படி எடுத்துக்கொண்டு, தீர்த்தங்கர நாம மகா புண்ணியமமைந்தவனுன இறைவனது சிறப்பமைந்த கோயிலருகே சென்றனைந்தனன்.

புண்ணியம் - நாமகர்மம் 93ல் ஒன்று. 50

கோடுயர் கோபுர வாய்தல் சேர்ந்துதன்
னீடுயர் மழகளி றிருவித் தானிழிந்(து)
ஏடுய ரினமல ரேந்தி யீர்ம்பொழின்
மாடுயர் வளநகர் வலங்கொண் டெய்தினன்.

சிகரத்தால் சிறப்புடைய கோபுரவாயிலினருகே சேர்வதற்குள் தூரத்திலேயே தன் இலட்சணமமைந்த யானையை நிறுத்தி, (அதனின்றும்) இழிந்து, பூவிதழ்களினுல் சிறந்த மலர்களைக் கையிலேந்திப் பொழில் முதலியவற்றினுல் பக்கத்தே வளம் சிறந்த கோயிலை நான் முறைப்படி மும்முறை வலம் வந்தனன்.

ஈர்ம்பொழில் - குளிர்ச்சி பொருந்திய அசோகவிருட்சக் கூட்டம், மழகளிறு - அரச யானை. 51

மன்னவ னணைதலு மலர்ந்த வாணிலாப்
பொன்னணி வளநக ரகத்துப் பொங்கரி
துன்னிய வணைமிசைத் துளங்குஞ் சோதியொடு
அன்னண மசோகமர்ந் தடிக டோன்றினர்.

மன்னவன் அங்ஙனம் வலம் வந்து உள் மண்டபத்தை அடைந்ததும், கதவு திறக்கவும், பேரொளி பரந்தமண்டபத்தின் நடுவே சிங்கத்தினுல் தாங்கப்பட்ட சிங்காதனத்தின்மிசை அசோகமரத்தின் கீழ்த்தங்கிய சோதி சொரூபரான ஆதிபகவர் தோன்றினர்.

'தோன்றினர்' எனப் பன்மையாகக் கூறுதல் மங்கல மரபு. 52

இது முதல் ஏழு கவிகளால் இறைவருடைய சிறப்பு வகைகளுள் ஒன்றாகிய (அஷ்டமஹா ப்ராதிஹார்யம் என்னும்) எண்வகை அதிசயங்களில் 'திவ்யத்வனி' நீங்கலாக ஏனைய சிங்காசனம் முதலியவற்றை முறையே கூறுகின்றார் :

ஆசனம் :

குஞ்சரத் தடக்கைய குழவிச் சென்னிய
மஞ்சிவர் தோற்றத்து மகர வாயொடு
செஞ்சுடர் மணிநிரை யழுத்திச் செம்பொனால்
அஞ்சுட ருமிழ்வதவ் வணையின் வண்ணமே.

அந்தச் சிங்காசனத்தின் தன்மை, இளைய வலிய யானையின் தலையைக் கவ்விய மகர மீனின் வாயைப் போலும் தோற்றமுடைய சிங்கத்தினால் தாங்கப் பட்டது போல மணிகளாலிழைத்து இயற்றப்பட்டதாகி அழகிய சுடர் உமிழ்வதாகும்.

மஞ்சு இவர் தோற்றம்-பிடரியின் வளைந்த தோற்றம். 53

பிரபா மண்டலம் :

ஏழிய லுலகிலுள் ளிருளங் கையகன்
றூழியல் வினைகளொ டவிய வாயிரந்
தாழொளி சுடரவன் றன்னைக் காணவோர்
சூழொளி மண்டிலஞ் சுடரத் தோன்றுமே.

பல்லாயிரம் சந்திர சூரியரின் ஒளியுள்ளவரான இறைவரைக் காணுமிடத்து, எழுவகை உலகிலுள்ளாரின் அஞ்ஞானமாகிய இருளும், வெகுகாலமாகப் பற்றப்பட்ட தீவினைகளும் கெடும் வண்ணம், ஒப்பற்ற ஒளி விரவிய பிரபாமண்டலம் சுடர்விட்டுத் தோன்றும்.

'பிரபா மண்டலம்' என்பது இறைவரின் பின்புறத்தே சோதிமயமாக (வானவில்போல) வளைந்து தோன்றுவது. பிரபாமண்டலத்தைக்காண முன் எழுபவும் தெரிதலும் மரபு. 54

**கவரி :**

கழுமிய பானிலாக் கதிரின் கற்றைகள்
செழுமணித் திரண்மிசைச் செறிந்த போல்வன
எழுவளர்த் தனையதோ ளியக்க ரேந்தின
தொழுதகை யுருவின கவரி தோன்றுமே.

*யாவரும் தொழும் தகுதி வாய்ந்த உருவினையுடைய இறைவனின் சாமரைகள், யட்ச தேவர்களின் எழுந்தோங்கும் திரண்ட கையினால் ஏந்தி வீசப்பட்டன; அவை கலைகள் நிறைந்த வெண்ணிலவின் தொகுதிகள் பதுமராக மணியினாலியற்றிய காம்பின்மேல் செறிந்துள்ளன போன்றன.* 55

**முக்குடை :**

பருகலாம் பானிலாய்ப் பரந்த மாமணி
அருகெலா மணிந்தக டம்பொ னார்ந்துமேற்
பெருகலாஞ் சுடரொளி பிறங்கி நின்றதம்
முருகுலாம் பிண்டியான் குடையின் மும்மையே.

*வானளாவ உயர்ந்த அசோக மரநிழலின் கீழமர்ந்த அந்த ஆதிபகவன் மேலுள்ள (சந்திராதித்தியம், நித்திய* **வினோதம்,** *சகலபாசனம் என்னும்) முக்குடை (மூன்று சந்திரனை ஒன்றின்மேலொன்றாக அடுக்கி வைத்தாற் போன்று) அளவோடு (விசாலித்து) வட்டமாய் விரிந்து அவற்றின் விளிம்புகளின் (ஓரங்களில்) அருகெல்லாம் வெள்ளிய நிலவை பருகுவது போன்ற முத்து மணிகள்* **சரஞ்சரமாகத்** *தொங்கவிடப்பட்டுக் குடையின் (காம்* **பின்மேல்)** *மையத்தில் பொன்னால் இயற்றப்பட்ட சட்டத்தகாகி மிக்க சுடர்விட்டு ஒளி விளங்குகின்றது.* 56

**அசோகம் :**

அழல்வளர்த் தனையன தழையு மவ்வழற்
றழல்வளர்த் தனையன மலருந் தாமரைப்
பொழில்வளர் வளையமும் பொதுளி வண்டினங்
குழைவள ரசோகின்மேற் [1]குளிர்செய் கின்றவே.

---

பா - பே. 1. குளிறுகின்றவே.

அழலை மிகுதியாக வளர்த்தாற்போலும் சிவந்த தளிர்களும், அவ்வழலின் கழலை அதிகமாக்கினுலொத்த சோதியான (அசோக) மலர்களும், தாமரையினிடத்தே அமைந்து நெருங்கப்பட்டதாகிக் குழைவுபட்டு வளர்ந்துள்ள அசோக மரத்தின் மேல் குளிர, வண்டினம் முதலியன நெருங்கி ஒலிக்கின்றன.

இதனால், தாமரையினின்றும் அடிமரம் ஆரம்பித்ததைக் குறிப்பிட்டனர் என்க. 57

பூமழை :

மாமழைக் கண்ணியர் மருங்கு போல்வன
தூமழை வளர்கொடி துவன்றிப் பத்திகள்
[1]பாமழை யுருவுகள் பலவுந் தோன்றவே
பூமழை பொன்னிலம் புதைய [2]வீழ்ந்தவே.

கருமையைப் பெருமையாகக் கொண்ட கண்ணியரின் இடை போலும் தூய்மையாகக் குளிர வளர்ந்த கொடியின் பூக்கள் வரிசை பெற்றுப் பாவலர் வருணிக்கும் உருவங்கள் பலவும் தோன்றப் பொன்னிலம் மறையப் பூமழை சொரிந்தன.

இனி, மருங்குடைய கண்ணியரை விரும்புவது போலும் மணங்கமழும் மலர்கள் நெருங்கி வரிசை பெற்றுப் பாவலர் வருணிக்கும் மங்கல உருவங்கள் தோன்றப் பூமழை அவ்வழகிய பூமியில் சொரிந்தன எனலுமாம்.

தூமழை வளர் கொடி - அளவோடு கூடிய மழையில் வளர்ந்த கொடி அட்ட மங்கலம் முதலிய உருவங்கள் அமையுமாறு பூவால் அமைத்தல் மரபு. இதனை,

"அத்தி யாளியொ டாமா னட்ட மங்கல மரிய
பத்தி பாவைபல் பறவை பயில்கொடி திமிசொடு பிறவும்
வித்த கம்பெரி துடைய விசித்திர வுருவநன் மலராற்
சித்த நன்னெறி பயந்தான் றிருவடிக் கருச்சனை செய்தாள்"

என்பது 'ஆனை முதலாகச் சொல்லப்பட்ட ரூபங்களாகப் புஷ்பங்களால் அர்ச்சித்தாள்,' என்னும் நீலகேசித் தெருட்டில் குண்டலகேசிவாதம் 152-ஆம் செய்யுளால் அறியலாகும். 58

பா - பே. 1. மாமழை. 2. வீழ்ந்ததே.

தேவதுந்துபி :

மொய்த்திலங் கலர்மழை முருகு லாவிய
மைத்தலை விசும்பிடை மயங்க வானவர்
கைத்தலம் பரவிய காம ரின்னியம்
எத்திசை மருங்கினு மிரங்கித் தோன்றுமே.

*நெருங்கி விளங்கும் பூமழையின் மணம் கலந்து உலவும் மேகம் தவழும் இடமாகிய வானிலுள்ள தேவராதியோர் பத்தியில் அமிழ்ந்து மயங்கும் வண்ணம் சங்கம் முதலிய பதினொன் வகை வாத்தியங்களும் எங்கும் முழங்கி மங்களம் பெருக நயமுடன் இரங்கி ஒலிக்கும்.* 59

மைஞ்ஞலம் பருகிய கருங்கண் மாமணிப்
பைஞ்ஞலம் பருகிய பரும வல்குலார்
மெய்ஞ்ஞலம் விஞ்சையர் [1]விரவ மேலெலாங்
கிஞ்ஞர மிதுனங்கள் கிளர்ந்து தோன்றுமே.

*எழுதிய மையின் நலத்தைப் பருகிய கண்களையும், சர்ப்பத்தின் சிரோமணி தங்கிய பணாமுடியின் நலத்தைப் பருகிய பருத்த அல்குலினையுமுடைய வித்தியாதர மாதர்களும், அவர் மெய்ந்நலத்தைப் பருகிய வித்தியாதரர்களும், கின்னரமிதுனம் என்னும் வியந்தரதேவ தேவியரும் ஒருவரோடொருவர் மேலிடமெங்கும் கலந்து தோன்றினர்.*

விஞ்சையர் - *வித்தையின்* மஹிமையால் வானில் (*இயங்குபவர்*) செல்பவர். கின்னரமிதுனம் என்பது வியந்தர தேவர் *அவர்தம் மனைவியர்* ஆகிய இருவரையும் குறிக்கும். 60

எரிமணி நெடுமுடி யிமைப்பிற் செங்கணப்
புரிமணி வண்ணனும் பொன்செ யாழியத்
திருமணி வண்ணனுந் தேவி மார்களும்
அருமணி வண்ணனுக் கருகு தோன்றினர்

---

பா - பே. 1. *விரவி.*

மணிகளிமைத்து ஒளிரும் நெடுமுடியுடையவனும் ஒளி விளங்கும் சிவந்த கண்களுடையவனும் சங்க வண்ணனுமாகிய விஜய பலதேவனும், ஆழியை ஏந்தியவனும் இந்திர நீல வண்ணனுமாகிய திப்ரஷ்ட வாசுதேவனும், ஜயவதி மிருகாவதி என்னும் தேவிமார்களும், பதுமராக மணி போலும் சிவந்த மேனியனை பயாபதி வேந்தனுக்கு அருகே நெருங்கி வந்து தோன்றினர்.

இமைத்தல் - ஒளி விட்டு விளங்குதல். தேவியர் ஈண்டுப் பயாபதியின் மனைவியர். 61

[1]ஒண்டமர் மணிகளு மொளிர்பொற் சாதியுங்
கொண்டன ரியற்றிய கோலச் செய்கையாற்
கண்டவர் கண்கவர் நகரங் காண்டலும்
விண்டுதிர் வினையினன் வேந்த னாயினான்.

புகழ் மிக்க உறவினர்களால் நவமணிகளையும் பொன் முதலியவற்றையும் பொடி செய்து கலந்து கைக்கொண்டு இயற்கை அழகுடன் கலந்தியற்றிய செயற்கை அழகினால், கண்டவர் கண்களைக் கவரும் ஜினருடைய கோயிலை வேந்தன் கண்டவுடன் வினைகள் வேறுபட்டு உதிரும் தன்மையினனாயினான்.

'பொன்னில் மணியைப் பதித்து இழைத்து அலங்கரித்தது' எனினுமாம். ஒணடுதல் - பதித்தல், அமர்தல் - பொருந்துதல். 62

பணியொடு நறுவிரை மெழுகிப் பன்மலர்
அணியுடை [2]யருச்சனை பலவுஞ் செய்தபின்
மணிமுடி [3]நிலனுற வணங்கி வாமன்மேற்
றுணிபடு வினையினன் றுதிதொ டங்கினான்.

பா - பே. 1. ஒண்டிரள். 2. யனையன. 3. நிலமுற.

இறைவன் எதிரில் பன்னீர் முதலியவற்றோடு கலந்த சந்தனத்தால் மெழுகி, மலர் முதலிய அர்ச்சனை திரவியங்களினால் பக்தி பரிபூரணத்தோடு அர்ச்சனை புஷ்பாஞ்சலி முதலியன செய்து முடித்து, வினை நீங்கும் தன்மையினனான வேந்தன், தன் மணிமுடி நிலத்துற வணங்கி, வாமன்மேல் துதி வகை பாட ஆரம்பித்தனன்.

**பனி என்பது எதுகை நோக்கிப் பணி என நின்றது. இனி ஏவலுமாம். 63**

**மூவடிவி னாலிரண்டு சூழ்சுடரு நாண**
**முழுதுலக மூடியெழின் முளைவயிர நாற்றித்**
**தூவடிவி னாலிலங்கு வெண்குடையி னீழற்**
**சுடரோயுன் னடிபோற்றிச் சொல்லுவதொன்**
**சேவடிக டாமரையின் சேயிதழ்க டீண்டச் [றுண்டாற்**
**சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள் பாயப்**
**பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து**
**புலங்கொளா வாலெமக்கெம் புண்ணியர்தங் கோவே**

'மூன்று முழுச்சந்திரனை ஒன்றன்மேலொன்றாக அடுக்கிவைத்தாற்போன்றதும், மேருவைச் சுழன்று **வலம்** வரும் சந்திர சூரியராகிய இருசுடரும் நாணத்தக்கதும், மூவுலகும் தண்ணளி பரந்து அழகிய வயிர ரத்தினத்தினாலாகிய காம்புடையதும் ஆகிய தூய வடிவத்துடன் விளங்குவதாகிய முக்குடையின் நிழலில் அமர்ந்த சோதி சொரூபரான இறைவரே, நும் திருவடியை வணங்கி யாம் தெளியக்கடவது ஒன்றுண்டு. அஃது யாதெனின், நும் சிவந்த திருவடிகள் (சமவ சரணம் என்னும் கோயிலில் தேவர்களியற்றிய) தாமரையின் சிவந்த இதழ்களைத் தீண்டச் சிவப்பேறினவோ? அல்லது, நும் சிவந்த பாதங்களின் செவ்விய கதிர்கள் பாய்ந்து, அதனால் அத்தாமரை மிக்க ஒளி-

நிறைந்து, சிவந்த வடிவத்தைக் கொண்டனவோ? அவை எம் அறிவிற்குப் புலனாகவில்லை; ஆதலின், அவற்றைக் கூறியருள்க,' என்றான். 64

மூவடிவினாலாகிய குடை - முக்குடை, மூடுதல் - கவித்தல், முளை - காம்பு, முளை வயிரம் - வயிரத்தினாலாகிய குடையின் காம்பு, நாற்றி - விளிம்புகளில் முத்து முதலியன தொங்கவிடப்பட்டு எனினுமாம். இரு சுடர் - சந்திர சூரியர், இரு சுடரும் நாணத் தக்க முக்குடை என்க. புண்ணியர் - புண்ணியத்தையுடையோர். இனி, புண்ணியத்தை அடைவதற்குக் காரணர்களான கணதரர் முதலிய இருடிகள் எனினுமாம். 'பாதங்களின் கிரணமே பூவடிவு கொண்டனவோ?' எனினுமாம்.

கருமாலை வெவ்வினைகள் காறளர நூறிக்
கடையிலா வொண்ஞானக் கதிர்விரித்தா யென்றும்
அருமாலை நன்னெறியை முன்பயந்தா யென்றும்
அடியேமுன் னடிபரவு மாறறிவ தல்லால்
திருமாலே தேனாரு மரவிந்த மேந்துந்
திருவணங்கு சேவடியாய் தேவாதி தேவ
பெருமானே நின்பெருமை நன்குணர மாட்டார்
பிணங்குவார் தம்மைவினைப் பிணக்கொழிக்கலாமே

'பிறவியின் தொடர்பிற்குக் காரணமாகிய தீவினைகளை வேரறக்களைந்து, (அதனால்) கடையிலா ஞான ஒளி விளங்கப்பெற்றீர் என்றும்; திருவறத்தை அவரவர் மொழிக்கும் விளங்குமாறு, திருமொழி ஒன்றினால் விரித்தருளினீர் என்றும்; பெறுதற்கரிய நல்லொழுக்க மாலையை முதன்முதலாகத் தோன்றச் செய்தவரும் நீரே என்றும்; அடியேமாகிய யாம் நும் திருவடிகளைப் பரவித் துதித்து வினைநீக்கிக்கோடற்கு அறிந்துளோமல்லது வேறொன்றில்லை. திருமாலே, திருவும் வணங்கும் மணங்கமழும் தாமரையேந்தும் செவ்விதாகிய திருவடியுடையீர், தேவ தேவர்க்கும் முதல்வராகிய

இறைவரே, எம்பெருமானீர், முனைவராகிய நும் அறப் பெருமையைச் செவ்வனே உணராதவராகி மாறுபடு வார் தம் வினையின் தொடர்பை ஒழிக்க இயலுமா? இயலாது.

ஒண் ஞானம் - கேவல ஞானம், விரித்தல் - ஆகமம் நாற்பத்திரண்டாக் விரித்துரைத்தல் எனினுமாம். (இரண் டாமடியிலுள்ள) மாலை - ஒழுங்கு, நெறி - சன்மார்க்கம், பயத்தல் - பிறப்பித்தல்; முதலிரண்டடிகளை, 'வினையின் நீங்கி விளங்கிய வறிவின் முனைவன் கண்டது முதனூ லாகும்' என்ற தொல்காப்பியச் சூத்திரத்தோடு ஒப்பு நோக்கி யறிக. திருவும் வணங்கும் சேவடி என்க. பிணக்குதல் மனவேறுபாடுமாம். அகில வுலகத்தையும் ஞானத்தால் அறிந்து பரந்து நிற்றலின், "திருமால்," (ஞானத்தால் விழுங்கியவன்) என்றார். இதன் விளக்கம் அடுத்த செய் ளாலுமுணரலாகும். 'செங்கண் நெடுமாலே' என்பர் பின் னரும் (சூளா : துறவு. 73) "தேவர்தம் தேவர்க்கும் தேவா" என்பர் நீலகேசியிலும். 65

ஒளியாகி யுலகாகி நீவிரிந்தா யென்கோ
வுலகெலா நின்னொளியி னுள்ளடங்கிற் றென்கோ
[1]அளியார வுலகநீ யாள்கின்று யென்கோ
[2]அமருலகு தானின்ன தடியடைந்த தென்கோ
விளியாத மெய்ப்பொருளை நீவிரித்தா யென்கோ
நீவிரித்த வாறேமெய்ப் பொருள்விரிந்த தென்கோ
தெளியாம லில்லைநின் றிருவடிகண் மெய்ம்மை
தெளிந்தாலுஞ் செவ்வனே தெரிந்துரைக்க லாமே

'இறைவரே, (உலகமுற்றிலுமுள்ள பொருள்கள் அனைத்தையும் ஒருங்குணரும் ஞானஸ்வரூபராதலின்) அகிலவுலகமும் நீரேயாகி, நும் ஞான ஒளியினால் (சர்வகதராய்) விரிந்துளீர் என்கோ? அல்லது, உலகம்

---

பா - பே. 1. வளியார. 2. வமருலகு.

முழுவதும் நும் ஞானத்தினுள் அடங்கியுளதென்கோ? கிருபை மிகுதலால் உலகனைத்தையும் நீரே ஆட்சி புரிகின்றீர் என்கோ? அல்லது, அமரர் உலகத்தி னுள்ள தேவர்களே நும் திருவடி அடைந்து பணிந் தனர் என்கோ? (நிச்சய நயத்தினுல்) முக்காலத்திலும் கெடுதல் இல்லாத அறுவகை மெய்ப்பொருள்களை நீர் விரித்துரைத்தீர் என்கோ? அல்லது, நீர் விரித்த வண்ணமே அம்மெய்ப்பொருள் விரிந்துளது என்கோ? யாம் தெளியாமலில்லை (எனவே யாங்கள் தெளிந் துள்ளேம்) நும் திருவடிக்கண் விளங்கிய அம்மெய்ப் பொருள்களைச் செம்மையாகத் தெரிந்திருந்தபோதிலும், நும்மைப்போல வினையின் நீங்காமையின், எம்மால் நன்கு அறிந்து விளக்க இயலுமா? இயலாது. 66

இனி, 'நீவிர் கூறிய அம்மெய்ப் பொருள்களை நன்கு தெரிந்திருந்த போதிலும் நும்மைப்போல வினையின் நீங்கா மையின் பிறர் தெரிந்துரைக்கவியலுமா?' எனினுமாம். 'என்கோ' என்பது, 'என்று சொல்லுவேனே' என்னும் பொருளது. ஆத்துமன் (தான் பொருந்தியுள்ள சரீரப்ரமாண மாகியிருந்தும்) ஞானப்பிரமாணம் என்றும், அந்த ஞானம் (தன்னுல்) அறியப்படும் பொருள்களின் (முடிவு) எல்லை வரை விரிந்துளது என்றும், அப்பொருள்கள் எல்லா உல கங்களிலும் பரவியுள என்றும், அது காரணத்தினுலேயே சகல பொருள்களையும் அறியுந் தன்மையுள்ள ஞானமய மான உயிரை, சர்வகதன் (உலகிலுள்ள ஒவ்வொரு பொருளி லும் வியாபித்துள்ளவன்,)* என்று பரமாகமங்களுள் கூறு வதற்கேற்ப, "ஒளியாகி யுலகாகி நீவிரிந்தா யென்கோ? உலகெலாம் நின்னொளியின் உள்ளடங்கிற் றென்கோ?" என்றார். ஒளியினுள் - கேவலஞானத்தினுள், அமருலகு - அமரர் உலகு (விகாரம்), உலகு - இடவாகு பெயர், விளியாத பொருள்-முக்காலத்தும் அழியாத பொருள், அவை: உயிர்,

*"ஆதாணுண பமாணம் ணுணம் ணேய பமாணமுத்திட்டம் ணேயம் லோயாலோயம் தம்மாணுணந்து சவ்வகயம்."-ப்ராப்ரதத்திரயம்.

புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாசம், காலம் என அறு வகைப்படும். புத்கலம் - ஐம்பொறிகளும் அவைகளால் நுகரப்படும் பொருள்கள் முதலியனவும். ஈண்டுத் தர்மம் என்பது உயிர்களும் புத்கலங்களும் இயங்குவதற்குத் துணைக் காரணமானது. அதர்மம் - அவைகள் நிற்றலுக்குத் துணைக் காரணமானது இனி, வளிபார வுலகம் என்ற பாடத்திற்கு மூவகை காற்றினால் சூழப்பட்ட இவ்வுலகம் என்று பொருள் கொள்க. 66

களியானை நாற்கோட்ட தொன்றுடைய செல்வன்
கண்ணொரா யிரமுடையான் கண்விளக்க மெய்தும்
ஒளியானை யூழிமுத லானானை யோங்கி
உலகளவு மாகியுயிர் தமக்குறுகண் செய்யா
அளியானை யாரழலஞ் சோதிவாய் சூழ்ந்த
அருளாழி யானையிணை யடிபரவு வார்கட்(கு)
எளியானை யெந்தைபெரு மானையே யல்லால்
இறையாக வீங்கொருவ ரெண்ணுமா றென்னே.

'நான்கு தந்தங்களுடைய களிப்பு மிக்க ஐராவதமென்னும் வெள்ளை யானைக்குத் தலைவனாகிய தேவேந்திரனின் ஆயிரம் கண்களையும் ஆனந்த பரவசமாக்கும் சோதி சொரூபமானவரை, ஊழி காலத்திற்கு முதல்வராகிய ஆதிபகவன் என்பவரை, உலக முற்றும் பரம்பி (ஓங்கி)ய ஞான சொரூபராகி உயிர்களுக்கு அணுவளவும் இன்னல் புரியாதவராகிய அஹிம்ஸா மூர்த்தியை, அழல் போலும் அருட்சோதி வாய்ந்த அறவாழி அந்தணரை, (பத்தியால்) வணங்கி இணையடி பரவும் பலருக்கும் எளிமையாகக்கிடைக்கத் தக்கவரை, (வாள், வரைவு, உழவு, வாணிகம், சிற்பம், வித்தையென்னும் அறுவகைத் தொழில்களையும் உபதேசித்த குருவாகிய) எம்பெருமானையல்லது, இவ்வண்ணமாகிய இலக்கணமமையாத ஏனைய தேவர்களை இவ்விடத்தே சிலர் இறைவனென்றெண்ணுவது ஏனோ!'

இனி, எனனே என்பது யாது காரணமோ எனினுமாம். இறைவரின் திருமேனி வடிவழகைத் தன் இரண்டு கண்களாலும் பருகித் திருபதியடையாத தேவேந்திரன், தன் உடலில் ஆயிரம் கணகளை நிருமித்துக்கொண்டு ஆனந்த பரவசனாகி, ஆனந்த நர்த்தனம் புரிந்தானென்பதும், அது காரணமாகவே இந்திரன (சகஸ்ராக்ஷன்) ஆயிரம் கண்களையுடையோன் என்னும் பெயர் பெற்றானென்பதும் மரபு. இவ்விவரம் (ஸ்ரீபுராணம்) மஹாபுராணம் முதலியவற்றிற் காணலாம். ஈண்டு, 'களியானை நாற்கோட்டதொன்றுடைய செல்வன் கண்ணொராயிரமுடையான கண்விளக்க மெய்தும் ஒளியான்' என்பதனோடு, 'ஐந்தவித்தானாற்ற லகல்விசும்புளார்கோமான் இந்திரனே சாலுங் கரி,' என்ற தேவர் குறள் ஒப்பு நோக்கற்பாலது. ஊழி முதலானன் என்பதனை யுகாதி புருஷன் என்பர் நிகண்டாசிரியர். சர்வ ஜீவதயாபரன என்பது இறைவன் திருநாமங்களுள் ஒன்றாதலின, 'உயிர்தமக்கு உறுகண் செய்யா அளியான்' என்றார். கிடைத்தற்கருமையிலாதானை, 'எளியான்' என்றார்.

67

தெருளாமை யால்வினவற் பாலதொன் றுண்டு
  திருவடிகள் செம்பொனு ரரவிந்த மேந்த
இருளாழி யேழுலகுஞ் சூழொளியின் மூழ்க
  இமையாத செங்கண்ணி னிமையோர்வந் தேத்த
உருளாழி யானுமொளி மணிமுடிமேற் கைவைத்
  தொருபாலில் வரவுலக நின்னுழைய தாக
அருளாழி முன்செல்லப் பின்செல்வ தென்னோ
  அடிப்படா தாய்நின்ற [1]வகன்ஞால முண்டோ.

'யான் என் உள்ளத்தே தெளியாமையால், நும்மிடத்துக் கேட்டு ஆராய்ந்தறியத் தக்கது ஒன்றுண்டு: அஃது யாதெனின், நும் திருவடிகளைத் தேவர் பொற்றாமரை ஏந்த, ஆழி சூழ் உலகம் ஏழும் அருளறத்து மூழ்கிப்படிய, (ஆயுள் முடிவடையுங் காலத்தல்லது) இமை கொட்டாத செங்கண்ணராகிய தேவர்கள்,

பா - பே. 1. வான்.

வரிசையாய் வந்து பரவி ஏத்த, சக்கராயுதத்தை ஏந்திய சக்கரவர்த்தியும் தன் சிரசில் கைகுவித்து வணங்கி ஒரு பக்கத்தேவர, உயர்ந்தோராகிய முனிவரர் முதலியோரும் வணங்கி ஒரு பக்கத்தேவர, உலகெலாம் நும்முன் அடங்கியிருக்க, அறவாழி முன் செல்ல, நீவிர் மலரின் மிசைப் பின் செல்வது யாது காரணம்? உமக்கு வசப்படாது நின்ற அகன்ற உலகம் இன்னும் ஏதேனும் உண்டோ? உண்டாயின், அதனைத் தெரிவிப்பீராக.'

இருளாழி - பிறவிச்சக்கரம், அரவிந்தம் - தாமரை, இந்து-சந்திரன், சந்திரனுக்குப பகை தாமரை. காதி அகாதி எனனும் இருவினைகளில (நான்கு வகையான) காதி வினையை வென்று கடையிலா ஞானம முதலிய நான்கு அதிசயங்களைப் பெற்ற அருக பரமேட்டிக்குத் தேவர்கள் இயற்றிய சமவ சரணம் என்னும் கோயிலில், பொன் எயில் மூன்றும, மானஸ்தம்பம் முதலியனவு முடைய ஏழு சுற்றுப் பிராகாரம் சூழப் பெற்றதும், முந்நூற்றெழுபத்தைந்து நிலைகளையுடைய 'ஸ்ரீநிலயம்' என்னும் கோபுரம தங்கிய லக்ஷ்மீ மரம' என்னும் ஒரு மண்டபமும், அதனுள் (பவணர், வியந்தரர், ஜோதிஷ்கர், கல்பவாசியர் என்னும் நால்வகைத் தேவர்களும, அவர் தம் மனைவியர்களும், முனிவரர், துறந்தமாதர், மனிதர், விலங்கு ஆகிய) பன்னிரு கணங்கள சூழ்ந்த 'கந்தகுடி' என்னும் மண்டபமும், அதன் மையத்தில் உள்ள சிம்மாசனத்தின்மேல் உள்ள பொற்றாமரையில் (அருக பரமேட்டியின் திருவடி தோயாதாகி நாலங்குலத்திற்குமேல் நிற்பதும், மற்றும் இறைவன் மேல் முக்குடையும், அசோக மரமும், எதிரில் அறவாழி முதலியனவும், மற்றும் பலவும் இயற்றித் தேவர்கள் வணங்குதல் மரபு. 'இதனையே, இருளாழி..............அருளாழி முன்செல்ல' என்றார். மற்றும், 'தேனுரு மரவிந்தம் சென்றேந்தும் போழ்தும் திருவடிகள் செந்தோடு தீண்டாவே யாகி' என்பர் அடுத்த செய்யுளிலும். அருளாழி - தர்ம சக்ரம, 'அறவாழி அந்தணன்' என்றார் தேவரும். இயற்றுதல் - நிருமித்தல். 68

வானோர்த முலகுடைய மானீல வண்ணன்
மகிழ்ந்திறைஞ்சு மாலையணி மணிமுடிமேல் வைகா
ஊனொரு மறவாழி யோடைமால் யானை
யுடையான்ற னொளிமுடியின் மேலுரையோ நிற்கத்
தேனொரு மரவிந்தஞ் சென்றேந்தும் போழ்து
திருவடிகள் செந்தோடு தீண்டாவே யாகில்
ஆனாவிம் மூவுலகு மாளுடைய பெம்மா
னடியுறுவா [1]ரின்மையா மறிவுண்ட தன்றே.

'தேவருலகம் முதலிய மூவுலகமும் அருளாட்சி புரியும் எம்பெருமானாராகிய நேமிநாதரின் திருவடிகள், ஊன் நிறையும் மறவாழியையும் யானையையுமுடைய சக்கரவர்த்தியின் முடி மணியின்மேல் உராயுமாறு தாழ்ந்து இறைஞ்சுமிடத்து அழகிய அம்முடிமேலும் படாதனவாகியும் (பற்றாதனவாகியும்), தேவரியற்றிய மணம் வீசும் செந்தாமரை அருகே சென்று தாங்கும் காலத்தில் அப்பூவின் செவ்விய இதழ்களையும் தீண்டாதனவாகியும் நாலங்குலத்திற்கு மேலே நிற்குமாயின், நும் திருவடியை அடைபவர் (பற்றுபவர்) இன்மையே யாம் அறிந்துளது.'

இன்மை, ஈண்டு அருமையைக் குறிக்கும் என்ப. ஈண்டு, 'தேனொருமரவிந்தஞ் சென்றேந்தும் போழ்து திருவடிகள் செந்தோடு தீண்டா' என்பதனோடு, நாலடியாரில், 'கால் நிலந் தோயாக் கடவுள்' என்று கூறியதனை ஒப்பிடுக. பாவத்திற்குக் காரணமான ஆழி, 'மறவாழி' எனப்பட்டது. ஓடை - நெற்றிப்பட்டம். உரைதல் - உராய்தல். அரவிந்தம் - வடமொழி. 'பற்றற்றவர்கள் வந்துன்னைப் பற்றில் அவர்கள் பற்றற்றே நிற்றற் கிசைந்து பற்றாது நின்றாய்' என்பர் ஆசிரியர். 'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற் றைப் பற்றுக பற்று விடற்கு' என்பது தேவர் குறள். 69

பா - பே. 1. ரின்மைதா.

தேனருளி மந்தாரச் செந்தாமந் தாழ்ந்து
திரளரைய செம்பவளம் வம்பாக வூன்றி
வானருளி மாணிக்கச் செங்கதிர்கள் வீசி
மதிமருட்டும் வெண்குடையோர் மூன்றுடைய வாமன்
யானருள வேண்டியடி யிணை[1] பரவும் போழ்து
இமையவர்கோ னாயிரச் செங்கணான் வந்து
தானருளு மாறென்று [2]தாழ்ந்திறைஞ்சும் போழ்துந்
தகையொன்ற தேலிறைமை தக்கதே யன்றே.

'இந்திரன் இயற்றியருளிய தேன் சொரியும் மந்தார மாலை விளிம்புகளிலே தாழ்ந்து தொங்கத் திரட்சியான பவளக் காம்பை நூதனமாக நாட்டி, பத்மராக மணியின் கதிர்கள் ஒளிவிட, முழு மதியையும் மருட்டும் தூய வெண்மையான ஒப்பற்ற முக்குடையின் கீழ் எழுந்தருளிய அருக பரமேட்டியின் திருவடிகளை அடியேனாகிய யான் அருளுமாறு வேண்டிப் பணியுங் காலத்தும்; நால்வகைத் தேவர்களுக்கும் தலைவனும், ஆயிரம் கண்களைத் தானே நிருமித்துக் கொண்டவனுமாகிய தேவேந்திரன் வந்து (இறைவருடைய) இணையடிகளை அருளுமாறு பணியுங் காலத்தும், அடியேனிடத்து வெறுப்பும் இந்திரனிடத்து விருப்பும் இலதாகிய பேரருள் ஒரே தன்மையாய் உளது ஆகலின், அவ்விறைமை தகுதியே அன்றோ?'

மந்தாரம் - கற்பகம், வான் - இந்திரன். 'வேண்டுதல் வேண்டாமை இலான்' ஆதலின், 'தகை ஒன்று' என்றான். 'பன்மாண் குணங்கட்கிடனாய்ப் பகை நன் பொடில்லான்', 'பெட்ட செய்கைச் சிறுகுரங்கும்' என்பன கண்டு ஒப்பு நோக்கியறிதற்பாலன. 70

---

பா - பே. 1. பணியும். 2. தாள் பணியும்.

விண்டாங்கு வெவ்வினைவெ ரூஉவுதிர நூறி
விரிகின்ற மெய்ஞ்ஞானச் சுடர்விளக்கு மாட்டிக்
கண்டார்க ணின்னிலைமை கண்டொழுக யானின்
கதிர்மயங்கு சோதியாற் கண்விளக்கப் பட்டுத்
தண்டாஅ மரைமலரின் மேனடந்தா யென்றுந்
தமனீயப் பொன்னணையின் மேலமர்ந்தா யென்றும்
வண்டார சோகினிழல் வாயமர்ந்தா யென்றும்
வாழ்த்தினல் வாராயோ வானவர்தங் கோவே.

*'வானவர்தங்கோவே, காதி வினைகளாகிய தீவினைகள் வெருவி உதிருமாறு வேறுபடுத்தி (நீக்கி) வென்று, அதனல் அகிலவுலகமும் விரிந்தறிகின்ற கடையிலா ஞான ஒளியாகிற விளக்கைத் தோற்றுவிக்கக் கண்டறிந்த உலகோர், நும் பற்றற்ற நிலைமையை நன்கு உணர்ந்து (அதன்படி) நிகழ, யான் அங்ஙனமன்றி, கதிரவனும் மயங்கும் நும் திருவுருவின் சோதியால் கண் விளக்கம் பெற்று, (பற்றுள்ளத்தால்) உம்மை, 'மலர்மிசை ஏகினய்' என்றும், 'மாற்றற்ற பொன்னணையின்மேல் வீற்றிருந்தாய்' என்றும், 'தேன் நிறைந்த அசோகமர நிழலிடத்தே தங்கினய்' என்றும், வாழ்த்தினல், நீவிர் என்னுள்ளத்தே வருவீரா? (வாரீர்).'*

எனவே, இறைவனைப் போலப் பற்றற்ற நிலைமை எய்தினலல்லது மாந்தர் வினை நீங்கப் பெருர் என்பது கருத்து. இதனை நிந்தாஸ்துதியென்றும் கூறுப. விண்டு - வேறுபடுத்தி, ஆர்தல் - நிறைதல், 'வண்தார்' எனவுமாம். ஆங்கு - அசை. 71

கருவார்ந்த பொருணிகழ்வுங் காலங்கண் மூன்றுங்
கடையிலா நன்ஞானக் கதிரகத்த வாகி
ஒருவாதிங் கவ்வொளியி னின்னுள்ள மாகில்
உலகெல்லா நின்னுள்ளத் தேயொளிக்க வேண்டா

திருவார்ந்த தண்மார்ப தேவாதி தேவ
திரளரைய செந்தளிர சோகமர்ந்த செல்வ
வருவாரும் வையகமு நீயும்வே ருகி
மணிமேனி மாலே மயக்குவதிங் கென்னே.

‘மோக்ஷலக்ஷ்மியின் இன்பம் நுகரும் மார்பரே, தேவாதி தேவரே, திரண்ட அடி மரமும் செந்தளிருமுடைய அசோகமர நிழலமர்ந்த தீர்த்தங்கர நாம மகா புண்ணியமுடைய செல்வரே, கருவார்ந்த ஜீவன் முதலிய (ஆறு) பொருள்களும், அப்பொருள்களின் முக்காலத்து நிகழும் நிகழ்ச்சிகளும், நும் கடையிலா ஞானக் கதிரிடத்தவாகியுள்ளன; இடைவிடாது அக்கடையிலா ஞானம் நும் உள்ளத்தே அடங்கியுளதெனின், அத்தகைய நும் உள்ளத்தே உலகமும் அதிலுள்ள பொருள்களும் ஒளிக்க வேண்டாவோ? அங்ஙனமன்றி, மணி போலும் மேனியராகிய திருமாலே (நேமிநாதரே), இனிப் பிறந்து வருமவரும், இவ்வுலகிலுள்ளவர்களும், நீரும் வேறு வேறாகி எம்மை மயக்குவது இங்கு யாங்ஙனம்?’

‘ஆயிரத்தெட்டுத் திருநாமங்களில் ஒன்றாகிய ‘சர்வகதன’ என்னும் பெயர் பெற்ற இறைவரின் கடையிலா ஞானத்திடத்தே அடங்காத பொருள் உலகில் இல்லை; அங்ஙனமாயினும், அவ்விறைவர், நிலம் நீர் காற்று முதலிய அந்தந்தப் பொருள்களாகத் தாம் ஆனாரென்பதோ, அல்லது நிலம் முதலிய அப்பொருள்கள் இறைவர் தன்மையை அடைந்துள்ளன என்பதோ, நிச்சய (நய)த்தால இல்லை; ஆதலின், நும் ஞானத்திடத்தே நும் உள்ளமும், நும் உள்ளத்தில் உலகமும் மறைந்து காணவேண்டுமே! அங்ஙனமின்றி, வேறு வேறாகக் காண்பதென்னோ?’ என்றான். ஈண்டுக் கூறியது ‘தன ஸ்வரூபத்தை விட்டு நீங்குவதும் அன்ய ஸ்வரூபத்தைப் பெறுதிருப்பதும்’ பெறப்படும். இதனை வட நூலார், “ஸ்வஸ்வரூப த்யாகமும், பரஸ்வரூப ஸ்வீகாரமும் இறைவனுக்கு இல்லை,” எனபர் ‘ப்ராப்ருத திரயம்’ முதலிய நூல்களில். மற்றும், ‘நிலனுகி...........’

என்றும், 'இருந்தாய்வேறே யரியணை......பேசாயே', 'இயம்பு வார் துணி வென்னே" என்றும் கூறுவர் உதீசிதேவர். கலம்பகம், 28. ஒருவாது - விட்டு விலகாது எனலுமாம். திரு - முத்திநாயகி, காலம் மூன்று - இறந்தகாலம், நிகழ் காலம் எதிர்காலம் என்பன. 'பூத பவிஷ்யத் வர்த்தமானம்' என்பர் வடநூலார். 72

செங்க ணெடுமாலே செறிந்திலங்கு சோதித்
  திருமுயங்கு மூர்த்தியாய் செய்யதா மரையின்
அங்கணடி வைத்தருளு மாதியா யாழி
  அறவரசே யென்றுநின் னடிபணிவ தல்லால்
எங்கணிட ரகலுமா றிந்நிலைமை யெய்தி
  இருளுலக நீக்குமரு டருகநீ யென்று
வெங்கணிரு வினையையற வென்றாய்முன் னின்று
  விண்ணப்பஞ் செய்யும் விழுத்தகைமை யுண்டோ.

'செங்கண்ணும் ஞான வளமுமுள்ள திருமாலே, கேவல ஞானமாகிற சோதி செறிந்து விளங்கும் திருவை (முத்தி யென்னும் கன்னிகையை) இடைவிடாது நுகரும் திவ்விய சரீரமுடையீர், செந்தாமரையின் மேலே அடிவைத்தேகித் திருவறமருளும் ஆதி பகவரே, அறவாழி அண்ணலே என்று நும் திருவடி பணிந்து பத்தி பண்ணுவதும், அஃதல்லாமலும், 'எம்மிடமுள்ள இருவினைத் துன்பமும் அகலுமாறு நும்மைப்போல் பற்றற்ற நிலைமையாகிய இந்நிலைமையை யாம் எய்தி, அஞ்ஞானமாகிய இருள் சூழ்ந்த இவ்வுலகை நீத்துப் பேரின்பம் எய்துவதும், ஆகிய இரண்டிற்கும் நீவிர் அருள் பாலித்தருள்க,' என்று, கொடிய இருவினையும் அகலும்படி வென்றவராகிய உம் முன்னின்று விண்ணப்பம் செய்யும் விழுத்தகைமை வேறொன்றுண்டோ? (இல்லை).

இறைவரைப் பத்தி செய்யுமிடத்து வேறு சிந்தனை அகலும்; பின்னர் அது அவரைப்போலவே பற்றற்ற நிலையைக் கடைபிடிக்கச் செய்து முத்தியையும் எய்துவிக்கும்; ஆகலின், 'தீவினை வரும் வழியைத் தடுப்பதற்கும், நல்வினை ஈட்டுதற்கும் காரணமான இறைவர் பத்தியும், பின்னர் இருவினையையும் வெல்வதற்குப் பற்றற்ற நிலையையும் வேண்டினன் என்றானென்க. இல்லற இன்பமாகிய இகலோக ஆட்சியை வேண்டாது பேரின்பமே விழைந்தவனாதலாலும், போக வாஞ்சையைக் குறித்து இறைவனை வணங்குமிடத்துத் தேவமூடம் என்னும் குற்றமாகும் என்று அறிந்தவனாதலாலும், இங்ஙனம் வணங்கினான் என்க.

இனி, 'உரிமையின் உயிர்கட்கெல்லாம்...........அருளும்'' யசோ. 63 ஆம் செய்யுள் இறைவனாதலின் இங்ஙனம் வணங்கினன் எனலுமாம். 73

என்றுநன் கேத்தி யிறைஞ்சி யிறைவனைச்
சென்றுயர் சேவடிச் சேடந் தலைவைத்து
வென்றவன் கோயில் வலங்கொண்டு மீண்டு[1]மோர்
பொன்றவழ் வேதிகை மண்டபம் புக்கான்.

வேந்தன் மேற்கூறிய வண்ணம் இறைவரைத் துதித்து முறைப்படி வணங்கி, திருவடிச் சேடத்தினையும் உச்சியிலணிந்து, ஸ்ரீ கோயிலை மீண்டும் வலம் வருமிடத்து, சுற்றுப் பிராகாரத்திலுள்ள ஒரு மண்டபத்தில் புகுந்தான்.

வென்றவன்-வினைகளை வென்றவன், வேதிகை-மேடை. 74

ஆங்கொர் முனிவ னருந்தவப் பல்குணந்
தாங்கிய மாமலை யன்ன தகையவன்
பூங்கமழ் சேவடிப் போதுதன் பொன்முடி
தாங்கிய தாம நுதியாற் றுடைத்தான்.

---

பா - பே. 1. மோர்.

அவ்விடத்தே மாதவத்தால் சிறந்த குணக் குன்றெப்பானாகிய ஓர் முனிவரனின் மலர் மணம் கமழும் செவ்விய திருவடிப் போதினைத் தன் பொன் முடியிலணிந்துள்ள மலர் மாலை படியும் வண்ணம் தாழ்ந்து (சாஷ்டாங்கமாக) வணங்கினன்.

காரியத்தைக் காரணமாக மொழியும் உபசாரவழக்கு; ஈண்டு வணங்கினானென்பதாயிற்று. பிறரால் ஏற்று நிகழ்தற்கரிதாகலின், 'அருந்தவம்' என்றார். 75

[1]ஆற்றி லமைந்த வருந்தவத் தால்வினை
யூற்றுச் செறிந்த வொருபெயர் மாதவன்
மாற்றரு மந்திர வாய்மொழி யாயிடை
ஏற்றன கொண்டாங் கிறைவ னிருந்தான்.

ஆகம முறைப்படி நிகழ்ந்த அருந்தவத்தால், வினை ஊற்றைத் தடுத்து, அது காரணமாக பிஹிதாஸ்ரவன் என்னும் பெயரினை (யும், சித்தியினையும்) பெற்ற முனிவரன் மொழிந்த பிறவியறும் தூயவேத மொழியை, வேந்தன் தன் சத்திக்குத் தக்கவாறு ஏற்றுக்கொண்டு, அவ்விடத்தே இனிதிருந்தனன்.

ஆறு - முறைமை; 'துறவறநெறி' எனினுமாம். ஊற்று ஆஸ்ரவம (வடமொழி), செறித்தல் - அடைத்தல், தடுத்தல். வினை வரும் வழியைத் தடுத்தல், என்பது பிஹிதாஸ்ரவன் என்று பொருள்படும். பிஹிதாஸ்ரவன் - வினை ஊற்றைத்தடுத்தனென், ஊற்றுப் போலத் தொடர்ந்து வருவதனால் அதனை ஊற்று என்ப. உயிருடன் வினைகள் சேர வரும் வாயில் ஊற்று எனவும், அங்ஙனம் சேரவருவதைத்தடுப்பது செறிப்பு (அல்லது செறித்தல்) எனவும் படும். (யசோ. பக். 116, 25) மா - சிறந்த. மாற்று - பிறவிச் சுழற்சி, வீட்டுப் பேற்றினுக்கு மாறானது எனினுமாம். இனி, '(அனனியரால்) மாற்றுதற்கரிய' எனறு கூறினும் அமையும். 76

பா - பே. 1. ஆற்றலமைந்த.

வணங்கி மணிமுடி மன்ன னிருப்ப
மணங்கமழ் கண்ணியர் மந்திர மாந்தர்
அணங்கு மறவமிழ் தூட்டி யடிகள்
பிணங்கும் பிறவிகள் பேர்த்துய்ம்மி னென்றார்.

முடிமன்னன் வணங்கிச் சிந்தனையிலாழ்ந்திருக்க, மந்திராலோசனை புரியும் அமைச்சர்கள் முனிவரனை வணங்கி, 'அடிகளே எம் வேந்தரை வினைகள் வருந்தி அகலும் திருவறமாகிய அமிர்தத்தினை (சாகா மருந்தை) உளம் நிறையும் வண்ணம் பருகச்செய்து, அறுதி காலமாகத் தொடர்ந்து வரும் பிறவியி னின்றும் நீங்கி ஈடேறச் செய்வீராக,' என்றனர்.

(பிறவியினின்றும் பேர்த்து முத்தியின்கண் சேர்க்கும்) அறத்தை அமிர்தெனறதற்கேற்ப, 'ஊட்டி' என்றார். வேந்தனுக்குக் கிடைக்கும் வீட்டுப் பேறு தமக்கும் ஆகும் என்பது உட்கோள். கண்ணி - தலை மாலை. அணங்கு - வருத்தம்; தெய்வத் தன்மை பொருந்திய அறமுமாம். பிணங்குதல் - தொடர்ந்து நிற்றல், பேர்த்துய்மின் - உபசார வழக்கு. 77

வன்ன மணிமுடி மன்ன னிருந்திட
இன்னியற் செல்வ மெனைப்பல வெய்திய
மன்ன னறியுந் திருவற மாண்பினை
என்னை வினவிய தென்னைகொ லென்றான்.

பிஹிதாஸ்ரவமுனிவன், 'இனிய ஞானச் செல்வமும் ஏனைய பல செல்வமும் எய்திய மன்னவன் திருவறப் பெருமையினை அறிந்தேயுளன்; அம்முடி மன்னன் இருக்க, என்ன காரணம் நீவிர் என்னை வினவியது?' என்றான்.

வன்ன மணிமுடி - சித்திர வேலைப்பாடுடைய அழகிய முடி. இயல் - ஞான ஸ்வபாவம் (அது வினைகளின் தாரதம்மியத்திற்கேற்ப ஏற்றத்தாழ்வு பெறுகிறது). 78

அடிக ளடிசி லமைந்த தயில்வான்
முடிய முயலு முறைமை யறியா
னெடிதி னதுவறு நீர்மையு மோரான்
வடிவமர் செல்வன் வகையு மதுவே.

'அடிகளே, வடிவமர்ந்த செல்வராகிய எம்மன்னர், அறுசுவை உண்டி புசிப்பதில் மகிழ்ந்துள்ள உலகியலைத்தான் அறிவார்; பிறவி முடிய முயலும் சீல முறைமை சிறிதும் அறியார்; நெடுங்காலமாகத் தொடர்ந்து வரும் இரு வினைகளை வேரற ஒழிக்கும் தன்மையும் அறியார்; அதனைக் கேட்க வேண்டியே யாங்கள் ஆராய்ந்து வந்த வகையுமாகும்,' என்றனர்.

முடிய முயலுதல் - வினையின் நீங்கி முத்தியடைய முயலுதல். இனி, 'முறைமை முடிய அறியார்; சிறிதளவு அறிந்துள்ளார்' என்று கூறவுமமையும். அறுதல் - வேரற வொழிதல். 79

மந்திர மாந்தர் மொழிதலும் வானிடை
அந்தரம் வாழு மமரர் வழிபடுந்
[1]தந்திர ஞான்ற தவத்திற் கரசனும்
இந்திர னன்னாற் கெடுத்துரைக் கின்றான்.

அமைச்சர் அங்ஙனம் கூற, வானுலகில் வாழும் வானவர் வழிபடும் ஆகமம் விரவிய தவ அரசன், இந்திரனை நிகர்த்த வேந்தனுக்கு விளங்க வுரைக்கின்றனன்.

அந்தரவமரர் - வானிலியங்கும் வானவர், தந்திரம் - நூல். 80

பா - பே. 1. தந்திரஞ் சான்ற, தந்திர ஞானத்.

கதியுங் கதியினுட் டுப்புமத் துப்பின்
விதிசெய் வினையும் வினைவெல் வகையு
மதியவர் காமுறும் வீட்டது மாண்பும்
அதிபதி கேளென் றருந்தவன் சொன்னான்.

அருந்தவன், 'மன்னவ, நாற்கதிகளும், அக்கதிகளுள் உயிர்கள் நுகரும் இன்ப துன்பங்களும், அவ்வின்ப துன்பங்களின் ஏற்றத் தாழ்வினாலேற்படும் விருப்பு வெறுப்புக் காரணமாக ஈட்டும் இரு வினைகளும், அவ்வினைகளை வெல்லும் வகையும், உத்தமர் விரும்பும் வீடு பேறும் யான் கூறக் கேட்பாயாக,' என்றனர்.

துப்பு - ஐம்பொறிகளால் நுகரும் பொருள்கள், அருந்தவன் - முனிவன், விதி - ஊழ்; பழவினையுமாம். 81

ஓடுஞ் சகடத் துருளு மொளிகொள
வீடி லொருவன் விசிறும் வளையமும்
ஆடுந் துகளு மெனச்சுழன் றுருயிர்
நாடுங் கதியவை நான்குள கண்டாய்.

'ஓடுங்கால் உருளும் வண்டிச் சக்கரமும், ஒரு மனிதன் ஒளி வீசுமாறு விடாது சுழற்றும் கொள்ளி வட்டமும், காற்றடித்துச் சுழலும் தூள்களும் போல, உலகின் நிறைந்தவுயிர்கள் இடைவிடாது சுழன்று சுழன்று தேடும் கதிகள் நான்கு உள.

விசிறுதல் - வீசுதல், வளையம் - இக்காலத்து மாவிலி என வழங்கும். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். 82

நரகர் விலங்கு மனிதர்நற் றேவர்
விரவி னவர்தம் விகற்ப முரைப்பிற்
பெருகு முரையென்று பெய்ம்மலர்த் தாரோன்
உருக வொருவா றுறுவ னுரைத்தான்.

'(அவை) நரகர், விலங்கு, மனிதர், தேவர் ஆகிய கதிகள்; அந்நாற்கதியிலும் கலந்துள்ள உயிர்கள் சுழலும் விகற்பம் முற்ற உரைப்பின் உரைபெருகும்,' என்று அரசன் மனமுருக ஒருவாறு முனிவரன் சுருங்கக் கூறினன்.

விகற்பம் - வகை, புண்ணியத்தால் பிறந்தோர் தேவ ராதலின், "நற்றேவர்" எனறார். 'உரை பெருகும்' என மாறுக. உறுவன் - முனிவரன். சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் முறையாதலின், ஒருவாறு உரைக்கலுற்றான் என்க. 83

நரககதித் துன்பம்

ஏழு நரகங்களில் 49 புரைகளும் 84 இலட்சம் ஆவாசமும் உளவென்பது கூறுகின்றார்.

கீழா நரகங் கிளத்தும் படலங்கள்
ஏழா யிருபத் திரட்டியோ டொன்பது
போழா மவற்றுள் ளவர்கள் புகலிடம்
பாழா மிலக்கமெண் பஃதுட னன்கே.

கீழ் உலகத்துள்ள ஏழு வகை நரகங்களிலும் கூறும் படலங்கள் நாற்பத்தொன்பது பிரிவாகும்; அவற்றுள் நரகர் பிறக்கும் இடம் எண்பத்து நான்கு இலட்சம் என்க.

இரண்டு பத்தினை இரட்டித்து (40) அதனோடு சேர்ந்த ஒன்பது 49. அவை பல அடுக்கு மாடிகளைப் போன்றவை. படலம், புரை என்பன ஒரு பொருட்பலசொல். அப்படலங் கள், முதல் நரகத்துப் பதின்மூன்றும், ஏனைய நரகங்களுக்கு இரண்டிரண்டாகக் குறைந்து ஏழாம் நரகத்து ஒன்றும், ஆக நாற்பத்தொனபதாகும்.* இனி, கீழேயுள்ள ஏழாம் நரகத்திலிருந்து நரகங்களின் பெயர்களைக் கூறுகின்றார். 84

*நரகம் இரண்டாவதில் 11 புரையும மூனறுவதில் 9ம், நான்காவதில் 7ம, ஐந்தாவதில் 5ம, ஆறுவதில் 3ம், ஏழாவதில் ஒனறுமாக 49 ஆகும்.

இருளி னிருளு மிருளும் புகையும்
அருளி லளறு மணலும் பரலும்
மருளின் மணியு மெனவிப் பெயர
பொருளி னரகங்கள் போதரக் கொண்ணீ.

'மன்னவ, இருளில் இருள், இருள், புகை, அளறு, மணல், பரல், மணி என்னும் பெயர்கொண்ட நரகங்கள் ஏழு என்பதை நீ நன்ருக அறிந்துகொள்.'

'இருள் - தமம், புகை - தூமம், அளறு - சேறு, மணல்-வாலுகம், பரல் - சர்க்கரை, மணி - இரத்தினம். இவற்றை வடநூலார், 'தமஸ்தமப்ரபை, தமப்ரபை, தூமப்ரபை, பங்கப்ரபை, வாலுகாப்ரபை, சர்க்கராப்ரபை, இரத்தின ப்ரபை' என்பர். தமஸ்தமப்ரபை என்பது ஏழாம் நரகம். இரத்தினப்ரபை என்பது முதல் நரகம். மருளின்மணி - கண்டவர்களை மயங்கச்செய்யும் மணி, இரத்தினம். (ப்ரபை - வட்டம்): அருளிலார் தோன்றும் நரகம். 85

ஆங்க ணரக மடைந்தார் படுந்துயர்
ஈங்க னுரைப்பி னெமக்கும் பனிவரும்
வாங்கி யவற்றின் முதலதன் வார்த்தைகள்
பாங்கின் மொழிவன் பனிமலர்த் தாரோய்.

'குளிர்ந்த மலர் மாலையணிந்த வேந்தே, அந்நரகங்களில் சென்று பிறந்தார் படும் துயரங்களை இவ்விடத்தே எடுத்துக் கூறின் எம்போல்வார்க்கும் உளம் நடுங்கச் செய்யும்; அவற்றுள் முதலாம் நரகத்திலுள்ளார் செய்திகளில் சில கூறுகின்றேன்.'

பனித்தல் - நடுக்குதல். பனி - நடுக்கம். 86

பத்தடம் பத்தொடு மூன்று மவற்றிடை
ஒத்த வுறையு ளிலக்கமொர் முப்பது
கொத்தெரி வெம்பவர் கும்பிக் குழியவை
இத்துணை யென்பதொ ரெல்லை யிலவே.

'அம்முதல் நரகத்தே படலம் பதின்மூன்றாகும்; அந்தப் பதின்மூன்றிலும் நரகர் பிறக்கும் இடம் முப்பது இலட்சம் பிரிவாகும்; அவற்றுள் ஒவ்வொன்றிலும் நரகர் பிறக்கும் இடமாகிய துர்க்கந்தம் நாறும் குழிகள், இத்துணை யென்பதோர் எல்லை இல்லை.'

பத்தடம் - படலம், பத்தோடு சேர்ந்த மூன்று, 13. உறையுள் - வீடு, 'ஆவாசம்' என்பர் வடநூலார். ஆவாசம் ஒவ்வொன்றிலும் நரகர் பிறக்கும் இடம் பலவாகும். நகரம் ஒன்றில் பல வீடுகள் இருப்பதுபோல என்க. 'மிகுதியாக எரியும் எரிபோலும் வெப்பமுள்ள கும்பிக்குழி' என்க.

87

பேழைப் பிளவும் பிலத்தின் முகங்களுந்
தாழிப் பதலையும் போலுந் தகையன
ஆழப் பரந்த வழுக லளறவை
பீழைப் பதகர் பிறக்கு மிடமே.

'குற்றந் தங்கிய பாதகர் பிறக்கும் இடமாகிய அந் நரகக்குழிகள், ஆழமும் அகலமும் துர்க்கந்தமும் உள்ள அழுகல்சேறாகும்; அவை, பெட்டியின் பிளவும், பர்வதக் குகையின் முகங்களும், வங்கு முதலியனவும் போலும் தகைமையுடையன.'

அதாவது பொறிவகையால், விலங்கு ஒன்றுமுதல் ஐம்பொறி வரையிலும் அடையும்; மனிதர், தேவர், நரகர் ஆகியவர் ஐம்பொறியில் மாத்திரம் அடைவர். பிறப்பு வகையால் விலங்குகள், கருப்பம் ஸம்மூர்ச்சனம் ஆகிய இரண்டிலும் அடையும். மனிதர் கர்ப்பத்தில் மாத்திரம் அடைவர். தேவரும் நரகரும் உபபாதம் ஒன்றிலேயே அடைவர். மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஐம்பொறிகளையும் மனிதராகிய நாம் அடைந்துளோம் என்பது யாவரும் அறிந்த விஷயமே; இவ்வித ஐம்பொறிகளையும் அடைந்தவர்களே தேவர்களும் நரகர்களும்; விலங்கினம் மட்டிலும் நாலுகால் உடைய உயிர்களும, இரண்டு கால் முதலிய பல கால் உள்ள உயிர்களும் ஐம்பொறியெனவும், ஏனைய ஒன்று

முதல் நான்கு பொறி வரை அடைந்தன பல எனவும் கூறப் படும். ஐம்பொறி விலங்குகள் (பலவும்) நம்மைப்போலக் கர்ப்பத்தில் பிறந்தனவே. ஒன்று முதல் நான்கு பொறி வரையிலுமுள்ள உயிர்களும் ஐம்பொறி உயிர்களில் சிலவும் சம்மூர்ச்சனத்தில் பிறந்தனவாகும். அதாவது பிறப்பின் வகை மூன்று விதம்; கர்ப்பம், சம்மூர்ச்சனம், உபபாதம் என. அவற்றுள் கர்ப்பம் :—தாயின் சம்பந்தமான சுரோ ணிதத்தில் தகப்பன் சம்பந்தமான சுக்கிலம் (உயிருடன்) சேர்ந்து பிறப்பதாகும்; விதையினின்றும் உண்டாதலும் இதில் அடங்கும் என்ப.

சம்மூர்ச்சனம்: சுக்கில சுரோணிதமில்லாமலும், யாதொரு விதையும் இல்லாமலும், நிலம், நீர், நெருப்பு, காற்று இவைகளின் சம்பந்தத்தால் தானுகத் தோன்றுவது.

உபபாதம்: பெட்டியில் பிறத்தல்; அதாவது, மேலே (கர்ப்ப, சம்மூர்ச்சனங்களுக்குக்) கூறிய இரண்டு வகையு மின்றிப் பெட்டி போன்ற ஒரு பிறப்பு ஸ்தான (ஆவாச)த்தில் அந்தர் முகூர்த்தத்தில் அதாவது இரண்டு நாழிகையில் (பதினறு வயதுள்ள யௌவனம் பொருந்திய) உடல் நிறைந்து அப்பெட்டியினின்றும் வெளி வருதல். ‘ஆடு கூத்தரின் ஐயெனத் தோன்றினன்’ என்பர் சிந்தாமணி யாரும். மற்றும் அப்பெட்டியாகிய பிறப்புஸ்தானம் தேவர் களுக்குத் தாங்கள் வசிக்கும் விமானத்திலேயே உள்ளது; புதியனுகப் பிறக்கும் தேவன் அப்பெட்டியில் தோன்றி இரண்டு நாழிகையில் அப்பெட்டியினின்றும் வெளிவருதல் இயல்பு (தேவதேவியர்க்கும் அங்ஙனமேயாகும்). நரகர் களுக்கு (அங்ஙனமன்றிப்) பிறப்புஸ்தானமாகிய பெட்டி நரகலோகத்தின் மேற்பாகத்தில் மரம் முதலியவற்றில் தொங்கும் வவ்வாலைப் போலவும், மலையுச்சியின் விளிம்பு களில் கட்டிய தேன் கூடு போலவும் தலைகீழாகக் கவிழ்ந்து தொங்கிக்கொண்டிருக்கும். புதியவனுகப் பிறக்கும் நரகன் இரண்டு நாழிகையில் தன் உடல் நிறைந்து உடனே அப் பெட்டி திறக்க, அங்கு நின்றும் (பனம்பழம் பழுத்து விழுவதைப் போலத்) தலை கீழாய் விழுந்து, துன்புறுவது இயல்பு. இதனையே ஆசிரியர், ‘பேழைப்பிளவும் பிலத் தின் முகங்களும்’ என்றும்; 89-ல் ‘வழுவி’ என்றும்

கூறினர். பீழை - துன்பம். பாதகர் என்பது பதகர் என நின்றது விகாரம். (நரகர் நபும்சகர் ஆதலின், அங்குப் பெண்கள் இல்லையென்க.) 88

குழிபடு கும்பிக் கருவாய் பெருகி
அழுக லுடம்பிவை யங்கு நிறைந்தால்
வழுவி யனல்படு பாறைக்கண் வைகிப்
புழுவி னுருள்வ பொரிவ பொடிவ.

'சாக்கடைச் சேறொத்த குழி போலும் பெட்டியின் பிறப்புஸ்தானத்தே தோன்றிப் பருத்து, துர்க்கந்தமுள்ள அந்நரகர் உடல் நிறைந்தால், அங்கு நின்றும் நழுவித் தலைக்கீழாய் வீழ்ந்து, அனலைப் போலக் கொதிக்கும் பாறையினிடத்தே தங்கித் துடிதுடிக்கும் புழுவைப்போல உருண்டு பொரிந்து, தூள் தூள்களாகித் துன்புறுவர். 89

புழுவி னுருண்டு பொடிந்தவர் பொங்கி
எழுவர் புகையைந் தெழுந்தபின் மீட்டும்
வழுவிலர் வீழ்வர் [1]மறிந்துமவ் வாறே
ஒழிவிலா தேனை யுள்ளள வெல்லாம்

'அங்ஙனம் புழுவைப்போல உருண்டு பொடியாயினும் அந்நரகருடல் மீண்டும் ஒன்றாகக் கூடும் இயல்பினதாகலின், முன் போல ஒன்றாகக் கூடி, உடல் பருத்து நிறைந்து, மீட்டும் மேலே பொங்கி எழுந்து, ஐந்து யோசனைத் தூரம் சென்ற பின்னர், முன் போலவே தலைகீழாக விழுவர்; பின்னர் மீண்டும் அவ்வாறே, முதல் புரையிலுள்ள நரகர் தமக்குள்ள ஆயுட்காலம் வரையிலும் அங்ஙனமே எழும்பி விழுவர்.

(இவை ஏழாம் நரகத்தில் நரகசரீரத்தின் இயல்பான துன்பமாகும்.) அதனை, 'பாவை தான் அடித்த பந்திற் பாவி

பா - பே. 1. பெயர்த்து மவ்வாறே.

தான் புகையைஞ்ஞாற்றை யோவிலா தெழுந்து வீழ்ந்து' என்பர் வாமன முனிவர். நரகருடல் எழும்பி விழுதலாலும் பல ஆயுதங்களின் தாக்குதலினுலும் அவர்கள் உடல்பலதுணுக்காகச் சிதைந்தபோதிலும் நீர்க்கீற்று உடனே கூடுவது போலக் கூடுமியல்பினது. நீலகேசி தருமவுரைச் சருக்கத்தின் 93-ஆம் பாடலாகிய 'காளமான மெய்கடாம், வாள வாய்களாற் பல, கீளவாப வாயினுர், மீளுமேனி நீரினே.' என்னும் பாட்டின் கருத்தை உய்த்துணர்க. 90

**அந்தோ வறனே வெனவழைப் பார்களை**
**வந்தோ மெனச்சொல்லி வாங்குபவ ரில்லை**
**வெந்தே விளிந்து மொழியார் விழுத்துயர்**
**முந்தே வினைய முயன்றனர் புக்கார்.**

'முற்பிறப்பில் உயிர்களுக்கு எண்ணற்ற இன்னல் புரிந்து, வினை ஈட்டிய முயற்சியினுல் ஈண்டுப் பிறந்த அந்நரகர், தாம் எய்திய துன்பங்களைச் சகிக்க வியலாது 'அந்தோ! தர்மமே! என்னை இரட்சிப்பார் எவருமில்லையா!' என்று கதறின போதிலும், அவர்களிடத்து (மனமிரங்கி), 'இதோ வந்தோம்,' என்று தேறுதல் கூறி, அத்துன்பங்களை வாங்கிக் கொள்ளுமவர் எவருமில்லை; அதுவேயுமன்றி, கட்டின ஆயுள் முடியுமுன் (அவமிருத்தியு இல்லாத காரணத்தினுல், தேவர்களைப் போலவே நரகர்களும்) மரணமடைவதும் இல்லை; ஆதலின், அந்நரக துன்பத்தால் வெந்து மரணத்தறுவாய் எய்திய போதிலும், இறத்தல் இல்லை.

பொதுவாக மரணம் இரண்டு விதம்; அவை அவமிருத்தியு, கால மிருத்தியு என்பன. மிருத்தியு - மரணம். அவமிருத்தியு - (வாழை குலை தள்ளுவதற்கு முன் காற்றினுல் மடிவதுபோல) கட்டின ஆயுள் முடிவதற்கு முன் மரணமெய்துதல்; காலரா (விஷபேதி), அம்மை, விஷம்தீண்டல், இடியிலகப்படுதல், போரில் மடிதல் முதலியவற்றுள் (மரணமடையுமிடத்து), அவமிருத்தியு மரணம் உண்டு எனக்

கூறலாம். ஆயினும், அது, அவமிருத்தியுதானு, அல்லது காலமிருத்தியுதானு என்பது (அவதிஞான முனிவர்களுக்குத் தெரியுமே தவிர) நம்மால் நிச்சயமாகத் தெரிந்து கூற வியலாது. அதாவது, காலரா முதலியவற்றில் மரணமெய்துதலே காலமிருத்தியுவாக இருக்கவுமகூடும். மற்றுங் காலமிருத்தியு, அவமிருத்தியு இரண்டும் நிச்சயமாக மனிதர்க்கும் விலங்கிற்குமே உண்டு. தேவர்களுக்கும் நரகர்களுக்கும் காலமிருத்தியு உண்டே தவிர அவமிருத்தியு இல்லை. ஆதலின், 'வெந்தே விளிந்தும் ஒழியார்' என்றனர் ஆசிரியர். 91

**அன்னணம் வேதனை [2]யெய்து மவர்களைத்**
**துன்னி யுளர்சிலர் தூர்த்தத் தொழிலவர்**
**முன்னதிற் செய்த வினையின் முறைபல**
**இன்னண மெய்துமி னென்றிடர் செய்வார்.**

'மேற்கூறியவாறு முன்னரே பிறந்துள்ள புராதன நரகர் 'பவப்ரத்யயம்' என்னும் அவதி ஞானம் (முற்பவத்தில் நிகழ்ந்ததை அறியும் அறிவு) உடையராதலின், தூர்த்தத் தொழிலராகிய நூதன நரகர்களை, அவர்கள் முற்பவத்தில் வினை ஈட்டியதற்குக் காரணமாகிய செயல் முறைகளை முறையாகக் கூறி, 'அவற்றிற்குத் தக்கவாறு இவ்விதத் துன்பங்களை எய்தக் கடவீர்,' என்று துன்புறுத்துவர்.

அவதி ஞானம் - முற்பவ உணர்வு, முறை - செயல், 'தூர்த்தத் தொழிலராகிய புராதன நரகர்' எனினும் அமையும். சம்யக்ஞானங்கள் ஐந்து வகை: அவை மதிஞானம், சுருத ஞானம், அவதி ஞானம், மனப் பர்யய ஞானம், கேவல ஞானம் என்பன. அவற்றுள் அவதி ஞானம், தேசாவதி, சர்வாவதி, பரமாவதி என மூன்று வகை. (சர்வாவதி, பரமாவதியென்னுமிரண்டும் தூய முனிவர்களுக்கே உண்டாவன வாகும்) தேசாவதி ஞானம் என்பது; குண ப்ரத்யயம் பவ ப்ரத்யயம் என இரண்டு பிரிவாகும். குணப்ரத்யயம் குணத்

---

பா - பே. 2. யெய்து பவர்களைத்.

த்தைக்குறித்து ஏற்படுவது; பவப்ரத்யயம் பவத்தைக்குறித்து ஏற்படுவது. குணப்ரத்யயம் மனிதர்களுக்கும் மனமுள்ள விலங்குகளுக்கும் ஏற்படுவது. பவப்ரத்யயம் தேவர்களுக்கும், நரகர்களுக்கும் ஏற்படுவதாகும். அதனால், தேவ, நரகர்கள் முற்பவநிகழ்ச்சிகளை அறிந்துகொள்வார்கள் ஆதலின், 'முன்னதிற் செய்தவினையின் முறைபல, இன்னண மெய்துமின' என்றார். மற்றும், ஞானவிசேஷங்களை விவரமாக அறியவேண்டின் 'ஞானார்ணவம்' என்னும் நூலினுள் கண்டு தெளிக. 'பவத்தைச் சார்ந்தெழுந்தவோதி' என்பர் வாமன முனிவரும். 92

தங்கிருட் போதிற் றலைச்சென் றயன்மனை
அங்கு மகிழ்ந்தா ளவளிவள் காணெனச்
செங்கன லேயென வெம்பிய செம்பினிற்
பொங்கனற் பாவைகள் புல்லப் புணர்ப்பார்.

'அங்ஙனம் துன்புறுத்தத் தொடங்கிய அவர்கள், 'நீ இருள் மிக்க இரவில் பிறர் மனைவியிடத்துச் சென்று கூடி மகிழ்ந்த அவளே இவள்,' என்று கூறி, சிவந்த அனல் போலக் காய்ந்த செப்புப் பாவையைத் தழுவச் செய்து துன்புறுத்துவர்.

போது - காலம். 93

கொள்ளு மிவையெனக் கூட்டில் வளர்த்ததம்
வள்ளுகிர்ப் பேழ்வாய் ஞமலி வடிவுகள்
அள்ளிக் கதுவ வலறி யயலது
முள்ளிற் புனைமர மேற முயல்வார்.

'கூரிய நகமும் பிளப்புவாயுமுடைய வேட்டை நாய்களை முன்னர்க் கூட்டில் வளர்த்த விலங்கினங்களைக் கொல்ல ஏவிய தீவினையால், புராதன நரகர் தம் விகுர்வணையால் நாய் வடிவு கொண்டு அழுந்தக் கடிக்க அதற்கு ஆற்றாது அலற, பின்னர்ப் பக்கத்தேயுள்ள முள் மரத்தில் ஏற முயலுவர்.

அணிமா முதலிய எண்வகை விகுர்வணைகள் தேவர்களுக்கு இருப்பது போல நரகர்களுக்கும் உண்டு, ஆயினும் அவை, நரகர்களுக்குத் துன்பத்திற்கே காரணமாகி மிளிர்கின்றன ; அதாவது, இதர நரகர்களைத் துன்புறுத்துமிடத்து வேண்டிய உருவு கோடலும் நினைத்த ஆயுதம் பெறலுமாம். 'கூட்டில்' என்பது சிறந்த பாடம்.

அலறி - அலற: 94

மேயப் பருவம் விரும்பிய மீனினங்
காயப் பெருந்தடி காண்மி னிவையெனத்
தீயைப் பருகிய செப்புத் திரளவை
வாயைப் பெருகப் பிளந்து மடுப்பார்.

'நீவிர் இச்சித்த தக்க பருவமுள்ள மீனினங்களின் பருத்த உடம்பாகிய மாமிசத் துண்டங்கள் இவை காண்மின்,' என்று புராதன நரகர் கூறி நன்றாகப் பழுக்கக் காய்ந்த செப்புக் குழம்பைக் குறடாவினால் அந்நரகன் வாயைப் பிளந்து வழியுமாறு ஊற்ற அவன் அலறுவான்.

செப்புக்குழம்பு காய்ந்து நீராயோடிய அதே சமயத்து வாயில் ஊற்றுதலின், 'தீயைப் பருகிய செப்பு' என்றார். 95

மறிப்பல கொன்று மடப்பிணை வீழ்த்துங்
கறிப்பல வெஃகிக் கறித்தவர் தம்மை
உறுப்புறுப் பாக வரிந்தரிந் தூட்டி
ஒறுப்பர் சிலரை யவரு மொருபால்.

'புராதன நரகர் மற்றொரு பக்கத்தில், ஆட்டுக்கடா முதலிய பல ஊமைப் பிராணிகளைக் கொன்றும், பெண் மான் முதலிய உயிர்களை வதைத்தும், அவற்றின் ஊனைப் பச்சையாகக் கடித்துத் தின்றும், வேக வைத்துத் தின்றும், மற்றும் பல விலங்குகளின் மாமிசங்களை உண்டும் ஈட்டிய அத்தீவினைகளால் பிறந்த சில நரகர்களின் உடலுறுப்புக்களையே

சின்னஞ்சின்னமாக அரிந்து, 'நீவிர் முன்னர்த் தின்ற மறி முதலியவற்றின் மாமிசத் துண்டங்களே இவை, இவற்றைத் தின்னுங்கள்,' என்று துன்புறுத்தித் தின்னச் செய்வார்கள்.

பல என்பதனை எவ்விடத்தும் கூட்டுக: அரிந்தரிந்து - அடுக்குச் சொல். அவரும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. 96

[1]இடைப்பல சொல்லி யெளியவர் தம்மை
[2]உடைப்பொருள் வெஃகி யொறுத்த பயத்தான்
முடைப்பொலி மேனியை முண்மத் திகையாற்
புடைப்ப நடுங்கிப் புரள்வ ரொருசார்.

'ஒரு சிலர் எளியவர்தம்மை அவர்களுடைய பொருள்களை விரும்பிப் பற்பல வஞ்சனைகளைக் கூறி அபகரித்துத் துன்புறுத்திய தீவினைப் பயனால், துர்நாற்றமுள்ள நரகராய்ப் பிறக்க, அவர்கள் உடலைக் கூரிய முட்களையுடைய இரும்புச் சம்மட்டியினால் புராதன நரகர் அடித்து நொறுக்க, நடுநடுங்கிப் புரள்வார். 97

வெறுப்பன வேசெய்து மேலா யவரைக்
குறிப்பல சொல்லிய நாவைக் கொடிற்றுற்
பறிப்பர் பரிய வயிரமுட் கொண்டு
செறிப்ப ருகிர்வழி யேறச் சிலரே.

'மற்றும் சிலர், முனிவர் முதலிய பெரியோர்களைக் கண்டார் வெறுக்கத் தக்க தீய செயல் புரிந்தும் பழி முதலிய தீய மொழிகள் கூறியும், அத்தீவினைகளினால் நரகராய்ப் பிறந்தவர்களின் நாவைக் குறடாவினால் அறும் வண்ணம் இழுப்பர்; அதோடு நில்லாது, கூரிய வயிரம் போன்ற முட்களை அவர்கள்

பா - பே. 1. இடைப்பிற. 2. புடைப்பொருள்.

நகக் கண்களிற் செருகி ஏறச் செய்து அடிக்க அலறு வார்கள். 98

**பொரிப்பர் சிறைசெய்து பொங்கெரி மாட்டிக்**
**கரிப்பர் கனல்படு காரக லேற்றித்**
**திரிப்பர் பலரையுஞ் செக்குர லுட்பெய்(து)**
**உரிப்ப ருடலை யவரு மொருபால்.**

'மற்றொரு பக்கம், பலர் சேர்ந்து புதிய நரகரைத் தடுத்துப் பிடித்து, மிக்க அனலிலே தள்ளிப் பொரிப்பர்; தீயில் காய்ந்த ஆழமும் அகலமும் உள்ள இரும்பு அகலில் தள்ளிக் கரியாக்குவர்; மற்றும் பல நரகர்களைக் கற்செக்கிலிட்டு அரைப்பர்; மற்றும் சிலர் உடலின் தோலை உரித்துத் துன்புறுத்துவர். 99

**பழுப்பல பற்றிப் பறிப்பர் பதைப்ப**
**மழுப்பல கொண்டவர் மார்பம் பிளப்பர்**
**கழுப்பல வேற்றி யகைப்பர் கடிதே**
**விழுப்பெரும் பூணோய் வினையின்விளைவே.**

'பயாபதி வேந்தே, மற்றும் பலர் அந்நரகர் துடிதுடிக்கப் பழு எலும்புகளைப் பற்றிப் பறிப்பர்; பலர் கோடரி கொண்டு மார்பைப் பிளப்பர்; பலர் கழு மரத்திலேற்றி உடனே இழுத்து வதைப்பர்; தீவினையின் விளைவு இவை போன்றதேயாம். 100

**பறிப்பர் பலரவர் கைகளைப் பற்றிச்**
**செறிப்பர் விரல்களைச் சீவுவர் மேனி**
**நெறிப்ப ரெலும்பு நிரந்துடன் வீழ**
**மறிப்பர் மலைமிசை மற்று மொருசார்.**

'மற்றும் ஒரு பக்கத்தே பலர், அந்நரகர்களின் கைகளைப் பற்றிக் களைவர்; விரல்களைத் தறிப்பர்; மேனியையும் சீவுவர்; எலும்புகள் ஒன்றன்பின்

ஒன்றாகச் சரிந்து விழ நொறுக்குவர்; மலைமிசை ஏறச் செய்து தள்ளுவர். 101

சாவ நலிந்திடுந் தண்ணீர்ப் பிணிபெரி(து)
ஆவென் றலறு மவரை யருநஞ்சின்
வாவிகள் காட்டலின் மண்டி மடுத்துண்டு
நாவு மழுக நரல்வ ரொருசார்.

'மற்றும் ஒரு பக்கத்தே அந்நரகர், நாவறட்சியால் இறந்து படும் தன்மையைத் தரும் தண்ணீர்த் தாகத்தால், ஐயோவென்றலறுகின்றாரை, பழைய நரகர்கள் அந்நஞ்சுள்ள நச்சுப் பொய்கையைக் காட்டக் கண்டு, அதனுள் புகுந்து நீரை வாரியுண்டு, அது நஞ்சானதால் நாவும் அழுகத் துன்பத்தால் அலறுவர். 102

அழலிவை யாற்றே [1]மெனவழன் றோடி
நிழலிவை யாமென நீள்பொழிற் புக்காற்
[2]றழல்வளி தாமே தலைவழி சிந்தக்
கழல்வனர் வீழ்ந்து கரிவ ரொருசார்.

'மற்றும் சில நரகர் அழலுக்கு ஆற்றாராகி, சோலையின் நிழலிடத்தே புக, அதன் இலைகள் நெருப்புக் காற்றோடு கூடி ஆயுத மயமாய் வீழ்ந்து அவர்கள்மேல் தாக்க, உறுப்புகள் கழன்று சரியத் துன்புறுவர்.

தீவினையினால் பொழில் உண்டாதல் மரபு. 103

முல்லை முகைமலர்த் தாரோய் முதற்புரை
அல்ல [3]லெனைப்பல வாயிர கோடிகள்
எல்லையி றுன்ப மிவற்றி னிருமடி
புல்லினர் கீழ்க்கீழ்ப் புரைபுரை தோறும்.

---

பா - பே. 1. மெனாநவின்றோடி. 2. றழலவைதாமே. 3. எனப்பல.

'புதிய மலராலாகிய முல்லை மாலையணிந்த வேந்தே, இவண் கூறிய முதல் புரையிலுள்ளார் எய்தும் எல்லையில் துயர், இவை போன்ற பல்லாயிரங் கோடியாகும்; மற்றும், ஏழு நரகங்களிலும் கீழ்க் கீழ்ப் புரைதோறும் அடைந்த நரகரின் ஓயாத தொல்லைகள் ஒன்றற்கொன்று இரட்டித்த அளவாகும்.

அதாவது, முதற்புரையிலிருந்து கடைசிப் புரை வரையிலும் துன்பங்கள் ஒன்றற்கொன்று இரட்டித்தனவாகும். 104

**விளிவி றுயரொடு மேற்பொங்கி வீழும்**
**அளவு மவர்கண் முறையும் பிறவும்**
**அளவில கீழ்க்கீ ழிரட்டி யறைந்தேன்**
**உளரொளி ஞானமஃ தொன்று மொழித்தே**

' இத்தகைய அழியாத துயரோடு, மேலே பொங்கி எழுந்து தலை கீழாக விழும் அளவும், மற்றும் பிறவும், ஏனைய அளவும், பவ ப்ரத்யயமாகிய அவதி ஞானம் ஒன்றைத் தவிர, ஏனைய ஒவ்வொரு நரகத்தும் கீழ்க் கீழ்ப் புரையிலுள்ளார்க்கு இரட்டித்த அளவேயாகும்.

ஒளி ஞானம், 92-ஆம் கவியின உரையில் கூறியது; விளிதல் - சாதல்; ' அளவில் இரட்டி, அளவில ' என்பதிலுள்ள ' அ ' அசை. 105

**பெய்யா வருநஞ்சும் பேரழற் குட்டமுஞ்**
**செய்யாக் குழிகளுஞ் சீநீர்த் தடங்களு**
**நையா நரக ரிடமிவை நாறினும்**
**உய்யா பிறவுயி ரோசனைக் கண்ணே.**

' பிறரால் பெய்து உண்டாக்காத நச்சுப் பொய்கையும், மிக்க அழல் குவியல்களும், பிறப்பு இடங்களும், சீ நீர் முதலியன நிறைந்த தடாகங்களும் வருத்தம் மிக்க நரக லோகத்தே ஒருவரால் உண்டு பண்ணாமல் இயற்கையாயமைந்துள்ளன. மற்றும்,

அந்நரக பூமியின் துர்நாற்றம் ஒரு யோசனைத் தூரம் வீசும்; அது வரை பிறவுயிர்களுள் எதுவும், உயிர் வாழாது இறந்து படும். 106

**எழுவின் முழமுன் றறுவிர லென்ப**
**வழுவின் முதலதன் கீழ்ப்புரை வாழ்வார்**
**ஒழிவில பொங்குவ ரோசனை யேழ்மேன்**
**முழுவிலைஞ் ஞூற்றெடு முக்கா வதமே.**

'முதல் நரகத்துக் கீழ்ப்புரையாகிய பதின் மூன்றும் புரையில் வாழ்வார் உடலின் உயரம், ஏழு வில்லும் மூன்று முழமும் ஆறு அங்குலமும் ஆகும். (அதாவது ஏழே முக்காலே வீசம் வில் உயரமாகும்) மற்றும் அவர்கள் தங்கள் வாழ்நாட்களில் ஒழிவில்லாத வராய் வான்மேல் எழும்பித் தலை கீழாக விழும் உன்னதம், ஏழு யோசனையும் மூன்று காதமும் ஐஞ் ஞூறு வில்லுமாகும் (அதாவது ஏழேமுக்காலேவீசம் யோசனையாகும்.)

24 தேவ அங்குலம் கொண்டது ஒரு முழம்; நான்கு முழம் கொண்டது ஒரு வில்; ஐஞ்ஞூறு வில் கொண்டது ஒரு குரோசம; நான்கு குரோசம (இரண்டாயிரம் வில்) கொண்டது ஒரு காதம்; நான்கு காதம (எண்ணாயிரம் வில்) கொண்டது ஒரு யோசனை இதனை,

'' அங்குல மறுநான் கெய்தி னதுகரம் கரமோர் நான்கு
தங்குதல் தனுவென் றுரும் தனுவிரண் டதுவோர் தண்ட
மிங்குறு தண்ட மான விராயிரங் குரோசத் தெல்லை
பங்கமில் குரோச நான்கோர் யோசனைப பால தாமே.'

என்று கூறுவதனுலறிக.

**ஆண்டுச் சிறுமை பதினை யிரமுள**
**[1]நீண்டவர் வாழ்நா ணிறைவு கடலெல்லை**
**ஈண்டிதன் கீழ்க்கீழ்ப் பெருகி வருமெங்கும்**
**வேண்டிற் சிறுமைதம மேலோர் நிறைவே.**

---

பா - பே. 1. வாண்டவர் வாழ் நாள்.

'அம்முதல் நரகத்து முதற்புரையிலுள்ளார்க்குக் குறைந்த வாழ்நாள் (ஜகன்ய ஆயுஷ்யம்) பதினாயிரம் வருஷமாகும்; முதல் நரகத்துப் பதின்மூன்றும் புரையிலுள்ளார்க்கு அதிகமாகிய வாழ்நாள் (உத்க்ருஷ்ட ஆயுஷ்யம்) ஒரு கடலாகும்;* இதன் கீழ் உள்ள ஏனைய நரகங்களின் கீழ்ப்புரையிலுள்ளார்க்கு உயரமும், எழும்பி விழுதலும் ஒன்றற்கொன்று இரட்டித்த அளவாகும்; (அடுத்த செய்யுளில் கூறியவாறு) ஆயுஷ்யமும் பெருகி வரும்.

அதாவது, நரகம் இரண்டாவதில் பதினைந்தரையே அரைக்கால் வில் உயரமும், பதினைந்தரையே அரைக்கால் யோசனை எழும்பி விழுதலுமாகும்; இம்முறையே (அதாவது, நரகம் 2-ல், 15 $\frac{10}{16}$; 3-ல் 31¼; 4-ல், 62½; 5-ல், 125; 6-ல், 250; 7-ல், 500 என) ஒன்றற்கொன்று இரட்டித்த அளவாகச் சென்று, ஏழாம் நரகத்தில் ஐஞ்ஞூறு வில் உயரமும், ஐஞ்ஞூறு யோசனை எழும்பி விழுதலுமாகும். ஏனைய நாற்பத்தெட்டுப் புரையிலுள்ளார்க்கும் ஜகன்ய

* "அதாவது உத்க்ருஷ்ட ஆயுஷ்யம் வரிசைக் கிரமமாய் (முதல் நரகத்து) முதல் புரையில் தொண்ணூறாயிரம் வருஷங்களாகும்: இரண்டாம் புரையில் தொண்ணூறு லக்ஷம் வருஷங்களாகும்; மூன்றும் புரையில் அஸங்யாத பூர்வகோடி வருஷங்களாகும்; நாலாவது புரையில் ஒரு கடலில் பத்திலொரு பாகமாகும்; ஐந்தாம் புரையில் ஒரு கடலில் பத்துப பங்கில் இரண்டு பங்காகும்; ஆறும் புரையில் ஒரு கடலில் பத்தில் மூன்று பங்காகும்; ஏழாம் புரையில் ஒரு கடலில் பத்தில் நான்கு பங்காகும்; எட்டாம் புரையில் ஒரு கடலில் பத்தில் ஐந்து பங்காகும்; ஒன்பதாம் புரையில் ஒரு கடலில் பத்தில் ஆறுபங்காகும்; பத்தாவது புரையில் ஒரு கடலில் பத்தில் ஏழு பங்காகும்; பதினொன்றாவது புரையில் ஒரு கடலில் எட்டுப் பங்காகும்; பன்னிரண்டாவது புரையில் ஒரு கடலில் ஒன்பது பங்காகும்; பதின்மூன்றாவது புரையில் ஒரு கடல் சரியாய் ஆகும்." (மே. ம. பு. பக் 441.)

ஆயுஷ்யம் தெரிய வேண்டின், மேற்புரையிலுள்ளாரின் உத்க்ருஷ்டாயுஷ்யமே கீழ்ப்புரையிலுள்ளார்க்கு ஜகன்ய ஆயுஷ்யமாகும்.

'அவர் நீண்ட வாழ்நாள்' என்றியைக்க. கடல் ஆயுளின் அளவைச் சூளாமணி 137-வது கவியின் உரையில் காண்க. 108

மூன்றுமொ ரேழு மொழிபஃதும் பத்தினே
டேன்றநல் லேழு மிருபத் திரண்டுமென்
றுன்ற வலைகடன் முப்பத்து மூன்றுமென்
றூன்றின கீழ்க்கீ ழுயர்ந்தன வாழ்நாள்.

'ஏனைய நரகத்தும் கீழ்ப்புரையிலுள்ளார்க்கு உத்க்ருஷ்ட ஆயுஷ்யம் எத்துணை என்னில், நரகம் இரண்டாவதில் மூன்று கடலும், மூன்றாவதில் ஏழு கடலும், நான்காவதில் பத்துக் கடலும், ஐந்தாவதில் பதினேழு கடலும், ஆறாவதில் இருபத்திரண்டு கடலும், ஏழாவதில் முப்பத்து மூன்று கடலுமாகும். (இவை ஒவ்வொரு நரகத்தும் கீழ்ப்புரையிலேயே ஆகும்.)

மொழிதல் - கூறுதல், ஏன்ற - இசைந்த, கடல் என்றதற்கேற்ப, 'அலைகடல்' என்று அடைமொழி தந்தார்; 'குருதிக் கோட்டுக் குஞ்சர நகரம்' என்றாற்போல. கடல் என்பதனை ஒவ்வொன்றிற்கும் கூட்டுக. 109

முடைகொண் முழுச்செவி மொண்பற் பதகர்
உடையந் தலியிருப் புண்பது நஞ்சே
புடையவர் காணிய போர்நனி மூட்ட
மிடைவர் படுகொண்டு வேதனை மிக்கார்.

மற்றும் 'முடைநாறும் நீண்டு தொங்கிய காதும் ஒளி தங்கிய வலிய பல்லும் உடைய பாதகராகிய அந்நரகர்கள் ஆணும் பெண்ணும் அல்லாத அலிகளாவார்.

கள்; அவர்கள் உணவு நஞ்சேயாகும்; அதுவேயுமன்றி, நமக்குக் கீழும் நரகலோகத்திற்கு மேலுமுள்ள பவண தேவர்கள் நரகலோகத்தே சென்று, ஒருவரோ டொருவர் போர் செய்வதைக் காணும் விருப்பத்தினுல் அவர்களுக்குள் முற்பவ நிகழ்ச்சிகளைக் கூறிக் கலகம் மூட்டிவிட, அதனுல் போர் செய்து படுவேதனை கொண்டு துன்புறுவர்.

பவணதேவர் கலகம் மூட்டுவதனை, 'முனை மூட்டுவர் கீழுள தேவரிவன், உனை முன்னின செய்தன னென் றுரையா' என்று (மே. ம. பு. 943 ல்) கூறியதாலு முணரலாகும். 110

**வேவா ரழலுள் விளியா ரளற்றினுள்**
**ஓவார் புகையு ளுகையா வுழல்பவர்**
**ஆவா வளிய நரகர் படுந்துயர்**
**ஏவார் சிலையா யிரங்குந் தகைத்தே.**

'அம்பொடு பொருந்திய சிலைத்தொழில் வல்ல வேந்தே, அழலுள் வேகாதவராயும், சேற்றில் முழுகி யும் இறவாதவராயும், எந்திரப்புகை முதலியவற்றுள் இடைவிடாது உழல்பவராயுமுள்ள எளிமையான அந் நரகர் படும் துயர், ஆ! ஐயோ! நாம் இரங்கும் தன்மையதே! 111

இருகவியும் ஒருதொடர்

**ஆங்குண் டெனப்படு மாழ்துயர் வீழ்பவர்**
**தேங்கொண்ட பைந்தார்த் திறன்மன்ன யாரெனிற்**
**றுங்கொண்ட தார மறுத்துப் பிறன்வரைப்**
**பூங்கொண்டை மாரைப் புணரு மவரும்.**

**உள்ளங் கொடியா ருயிர்க்கொலை காதகர்**
**வெள்ளங் கொடியன மேவிப் பிறன்பொருள்**
**கொள்ளுங் கொடுமைக் குணத்தின் மனித்தரும்**
**நள்ளலர்ச் சாய்த்தோய் நரக மடைவார்.**

'தாரணிந்த வேந்தே, பகைவரை வென்ற வேந்தே, சொல்லற்கரிய பெருந்துயர் உண்டெனக் கூறப்படும் அந்நரகத்தே பிறந்து வருந்துபவர் யாவரென வினவில், தாம் மணந்துகொண்ட மனையாளை வெறுத்துவிட்டு, அன்னியன் மணந்த மாதரை விரும்பிப் புணருகின்றவர்களும், கொடிய உள்ளமுடையவர்களும், உயிர் வதை புரியும் பாதகர்களும், பற்பல கொடிய செயலையும் மேவிப் பிறன் பொருள்களைக் கைக்கொள்ளும் கடின சித்தமுள்ள நீசர்களும் நரகமடைவார்கள்.

'புணரு மவரும்' என்பது அடுத்த செய்யுளில் 'அடைவார்' என்பதனோடு முடியும.

'மணமாகுங் காலத்தில் மணமகன், 'தர்மத்தினாலும், பொருளினாலும், காமத்தினாலும் உன்னை இரட்சிக்கிறேன்,' [தர்மேண அர்த்தேன காமேன பாலயாமி] என்று மணமகளுக்கு உறுதி கூறி அக்கினியை வலம் வருதல் மரபு. 'பிறன் பொருள் கைக்கொள்ளலாம்,' என்றெண்ணும் கொடுமைக் குணமுடையாரும் எனினும் அமையும்.

112—113

இரு கவியும் ஒரு தொடர்

நல்லறங் காய்ந்து நலிந்து பொருள்படைத்(து)
இல்லறஞ் செய்யா திருகு பவர்களும்
புல்லறம் புல்லாப் புலவரை வைதுரைத்(து)
அல்லறஞ் செய்யு மறிவில் லவரும்.

தெண்டிரை வாழுந் திமிலுங் கலங்களுங்
கொண்டிரை யாக வுயிர்கொல்லுஞ் சாதியுங்
கண்டிடு [2]காதனை நின்னூற் செயப்படுந்
தண்டிக டம்மொடுஞ் சார்த்தினை கொண்ணீ.

---

பா - பே. 1. சோதனை.

'அறிவின்மையால் நல்லறத்தை மிகக் காய்ந்து, கஷ்டப்பட்டுப் பொருளை ஈட்டிக் காப்பாற்றி இல்லறத்திற்கு வேண்டிய அறத்தையும் செய்யாத உலோபிகளும், பொய்ம்மார்க்கம் சேராத புலவர்களை வசை கூறி அறமல்லனவற்றில் நிகழும் அறிவிலிகளும், கடலில் வாழும் திமிங்கிலம் முதலிய பெருமீன்களை ஊன் உணவிற்காக மரக்கலம் ஏறிச்சென்று கொலை புரியும் செம்படவர் முதலிய கொலைஞர்களும், பஞ்சமா பாதகங்களைக் கண்டுபிடித்து நின்னால் ஏவப்படும் தண்டனைக்குள்ளான பாவிகளும், இவை போலும் மற்றும் பல தீய செயலுடையாரும், அந்த ஏழாம் நரகத்துச் சேர்பவர்களென்பதை நீ தெரிந்து கொள்வாயாக.

புல்லா - புல்லி. திமில்-மஹா மஸ்யமுமாம். இறுகுதல்- பொருள் பற்று; மிகுபொருள் விரும்புதல். "அஞ்சுமின் அதிலோபம் இல்லோர்களும்" என்றார் நரி விருத்தத்திலும்.

114—115

**ஆரு நரக வழலினு ளாழ்பவர்**
**தேரு திருவறந் தேறினு நல்வத**
**மேரு சிலர்நனி யேறினு நில்லலர்**
**வேரு யினிச்சொல்ல வேண்டுவ துண்டோ.**

'அழல் போலும் துன்பமுடைய ஆறும் நரகத் துன்பக்கடலில் ஆழ்ந்து மூழ்குபவர். திருவறத்தைத் தெளியார்; ஒருக்கால் தெளிந்த போதிலும், துறவு மேற்கொள்ளார். ஒரு சிலர் துறந்த போதிலும், அதிலேயே நிலைத்து நிற்கமாட்டார்; இதைத்தவிர்த்து இன்னும் கூறவேண்டுவதுளதோ? இதுவே போதும்.

எனவே, ஏழாம் நரகத்தினின்றும் போந்தவர் விலங்காகவே பிறப்பரெனவும், ஐந்தாம நரகத்தினின்றும் போந்தவர் முத்தியெய்தாவிடினும் துறவு மட்டும் மேற்கொண்டு நிகழ்வர் எனவும, ஏனைய நான்கு நரகத்தினின்றும் போந்தவர் முத்தியடையவும் பெறுவர் எனவும் அறிக.

"மீனும் பெண்ணும் நாற்காலுங் காலிலவும்
வான்மேல் வருவ தவழ்வ குறியிலவும்
மேன்மேல வேழ்நரகின் கீழ்ச்செல்லா மேற்செல்லும்
மேனன்கு வீடுதவம் விரதம்விலங் காமுறையே."

என்ற மேருமந்தர புராணச் செய்யுள் (78) ஈண்டு ஒப்பு நோக்கி அறிதற்பாலது. வதம் - விரதம். 116

விலங்குகதித் துன்பம்

விலங்குடன் சாதி விரிப்பிற் பெருகும்
உலங்கொண்ட தோண்மன்ன வோரறி வாதி
புலங்கொண்ட வைம்பொறி [1]யீருப் புணர்ந்த
நலங்கொண்ட ஞாலத்தி னுடி யுணர்நீ.

'உலம் பொருதோள் மன்னவ, இனி, விலங்கினங்களையும் விரித்துக் கூறுமிடத்து, அவையும் பல பிரிவாகப் பெருகியுள்ளன; நன்மையைக் கொண்ட இப்பூமியில், புலன்களை விஷயமாகக் கொண்ட ஓரறிவு முதல் ஐயறிவு வரை பெற்றுள்ள (அதாவது ஒரு பொறி முதல் ஐம்பொறி ஈறுகப் பெற்றுள்ள) விலங்கினம் பல்வாகப் பொருந்தியுளதென நீ நன்குக ஆராய்ந்துணர்வாயாக.

நாற்கதிகளுள்ளும் முத்தியடையும் கதி மனிதப் பிறவியேயாதலின், மனிதர் வசிக்கும் இடமாகிய இப்பூமியினை, 'நலம்கொண்ட ஞாலம்' என்றார். இனி ஐம்பொறி விலங்கினம் உள்ள இடத்தைக் குறிப்பிட்டார் எனினுமாம். 117

நிகோதத்துப் பிறக்கும் சூக்ஷ்ம ஜீவன்களாகிய ஓரறிவு உயிர்களைக் கூறுகின்றார் :

நின்று வருந்து நிகோதப் பிறவியுள்
ஒன்றறி வெய்தி யுழக்கு முயிர்பல
அன்றிச் சிறிதுண் டவற்றினு மவ்வழிச்
சென்று பெயர்வ சிலவுள கண்டாய்.

பா - பே. 1. ஈருய்ப் புணர்த்த.

'பல ஊழி காலங்கள் (சென்றுபோதிலும் வேறு பிறவியில் திரும்பி வாராமல்) நின்று வருந்தும் நிகோதம் என்னும் விலங்குப் பிறவியுள், தொட்டால் அறிந்துகொள்ளும் (ஸ்பர்ஸநேந்திரியம் என்னும்) ஓர் அறிவைமட்டும் உடையனவாகச் சுழலும் உயிர்கள் எண்ணற்றனவாகும்; அவையன்றிச் சிறிது விசேஷமுமுண்டு; அஃது யாதெனில், அந்நிகோதப் பிறவியிலுள்ள ஓரறிவு உயிர்களிலுங்கூட, அவ்விடத்தினின்றும் மீண்டு வந்து வேறு கதியில் பிறக்கும் ஜீவன்களும் சில உண்டு.

முக்தியை எய்திய வுயிர் எங்ஙனம் மீண்டும் பிறவாதோ, அங்ஙனமே நிகோதத்துச் சென்ற உயிரும் திரும்பி வருதல் அருமை; ஆயினும், ஏதோ ஒரு காலத்தில் (உலையில் அன்னம் கொதிக்குமிடத்து ஒவ்வோரவிழ்து பொங்கி வெளி வருவது போல) ஒவ்வொரு ஜீவன், மீண்டும் வரும். ஓரறிவு உள்ள உயிர்களில் நுண்மையன (சூக்ஷ்ம ஏகேந்திரியம்) என்றும், ஸ்தூலமாவன (பாதரேகேந்திரியம்) என்றும் இரண்டு விதம் உண்டு. அவற்றுள் நுண்மையது, கண்ணிற்குப் புலப்படாததும், ஸ்தூலம் - புல் பூண்டு மரம் முதலியனவுமாகும். நிகோதத்துப் பிறக்கும் உயிர் யாவும் நுண்ணிய ஓரறிவு உயிர்களே. அந்நிகோதத்துச் சேர்வார் யாவரென்பதை 131-வது கவியில் கூறுகின்றார்.

நமக்குக் கீழ் உள்ள பூமியை ஏழு பாகமாகப் பிரித்து அவற்றின் அடியிலுள்ள ஒரு பாகத்தை நிகோதமென்றும் அதன் மேலேயுள்ள ஆறுபாகத்தில் ஏழு நரகங்களும் பவண தேவரின் உலகமும் உள்ளன என்றும் நூல்கள் நுவலும்.

'நிகோதமே நிரையங்க ளஞ்சு தன்னிடை
பகாதள வகலமோர் கயிற்ற வாகுமே
மிகாதொரு கயிறுதான் மேரு வெய்திடா
பகாநர கிரண்டுமேற் பவணம் பத்துமாம்.'

என்பர் வாமன முனிவர். கண்டாய் - முன்னிலை அசை. 118

ஓரறி வாகி யுழக்கு முயிர்களைப்
பேரறி வாரும் பிறரில்லை யின்னவை
யாரறி வாரழி யுந்திறம் யாதெனிற்
கூரறி வில்லவர் கொன்றிடு கின்றார்.

'இங்ஙனம் ஓர் அறிவு உள்ளனவாகித் துன்பத்தால் உழலும் தன்மையுள்ள ஐவகை ஏகேந்திரிய உயிர்களையும், அவைகளின் பெயர்களையும் இறைவனன்றி அறிபவர் பிறர் இல்லை. இத்தன்மையை வேறு யாவர் அறிவார்? அவை அழியும் வகை யாதெனில், நுண்ணறிவு இல்லாத மாந்தர்களால் அவை அழிகின்றன. 119

உயிர்த்தொகை யாறனு ளொன்றொழித் தேனைப்
பெயர்த்தொகை பெற்ற பிறவிக டம்மைப்
பயிர்த்தலு மின்றி யுலகம் பதைப்பச்
செயிர்த்தவர் போலச் செகுத்திடுங் கண்டாய்.

'மண், நீர், நெருப்பு, காற்று, புல், மரம் முதலிய (ஒற்றை காயமாகவுடைய) ஓரறிவு உயிர்களின் வகை ஐந்தும், (ஓர் இடம் விட்டு ஓரிடம் நகரும் தன்மையுள்ள ஏனைய) இரண்டறிவு முதல் ஐயறிவு எல்லையாகவுள்ள (த்ரஸகாயம் என்னும்) உயிர்களின் வகை ஒன்றும் ஆகிய ஆறு வகைகளில், ஓரறிவு உயிர்கள் நீங்கலாக ஏனைய (நந்து சிப்பி சங்கு முதலிய இரண்டறிவு உடையனவும்; எறும்பு கறையான் செந்தேள் பட்டுப் பூச்சி முதலிய மூன்றறிவு உடையனவும்; அந்து, தும்பி, வண்டு முதலிய நான்கறிவு உடையனவும்; பறவை, நாற்கால் மிருகம் முதலிய ஐயறிவு உடையனவும் ஆகிய) பிறவிகளைப்பெற்ற விலங்கினங்களைக் கதறுவண்ணம் அமுக்கி, உயர்ந்தோர் கண்டு மனம் பதைபதைக்க அவ்விலங்கினங்களே ஒன்றையொன்று பகைத்தவர் கொல்வது போலக் கொன்றிடுகின்றன.

இவ்வறுவகை ஜீவன்களையும் வடநூலார், (நிலம்) ப்ரத்வீகாயம், (நீர்) அப்காயம், (நெருப்பு) தேஜஸ்காயம், (காற்று) வாதகாயம், (மரம்முதலிய) வனஸ்பதிகாயம், (நகரும் தன்மையுள்ள) த்ரஸகாயம் என இவை ஷட்ஜீவ நிகாயம் (ஆறு) என்பர். இனி, ஓரறிவு உயிர்களைச் சூக்ஷ்ம ஏகேந்திரியம், பாதரேகேந்திரியம் என இரண்டாக்கி, (அதாவது நிகோத ஜீவன்களாகிய சூக்ஷ்ம ஜீவன் வகை ஒன்று, மரம் புல்பூண்டு முதலிய ஸ்தூல ஜீவன் வகை இரண்டு) இரண்டறிவு, மூன்றறிவு, நான்கறிவு, ஐயறிவு ஆகிய ஆறு வகைகளையும், 'உயிர்த் தொகை ஆறு' என்று கூறினரெனினும் அமையும். அங்ஙனம் கூறும்பொழுது, 'ஒன்றொழித்து' என்பதனை 'நிகோதஜீவன் ஒன்றொழித்து' என்று கூற அமையும். இனி, ஏகேந்திரியம், த்வீந்திரியம், த்ரீந்திரியம், சதுரேந்திரியம், அஸக்ஞி பஞ்சேந்திரியம், சக்ஞி பஞ்சேந்திரியம் என ஆறுகப்பிரித்து, ஏகேந்திரியம் ஒன்றை ஒழித்து ஏனைய ஐந்துவகை உயிர்களை வதைத்தல் எனினுமாம். மேலேகூறிய (ப்ரத்வீகாயம் முதலிய ஜீவன்கள்) நிலம் நீர் முதலிய உயிர்கள், மண்ணில் நாகப்பூச்சி முதலியனவும், நீரில் மீன் முதலியனவும் உள்ளவற்றை இங்குக் குறிக்கவில்லை. அவை, மண் நீர் நெருப்பு காற்று ஆகிய இவைகளையே சரீரமாக உடைய சூக்ஷ்ம உயிர்கள் என்றறிக. ஏகேந்திரியத்தின் பிரிவாகிய நிலம், நீர், நெருப்பு, காற்று, புல் அல்லது மரம் ஆகிய இவ்வைந்தும் ஸ்தாவர காயமென்றும், (அதாவது இடம் பெயர்ந்து செல்ல இயலாத ஜீவன்கள் என்றும்), ஏனைய இரண்டிந்திரியம் மூன்றிந்திரியம் நான்கு இந்திரியம் ஐந்திந்திரியம் ஆகிய உயிர்கள் த்ரஸகாயம் என்றும் கூறப்படும்: பயிர்த்தல் - ஒலித்தல், உலகம் என்பது உயர்ந்தோர்மரட்டு. 120

ஏனை யொழிந்த வியங்குநற் சாதிகள்
ஆனை முதலா வளிய விலங்குகண்
[1]மானுயர் பற்றி வலிந்து நலிந்திட
ஊனெய் யுருகு முழக்கு மொருபால்.

'ஐந்து வகையாகிய ஓரறிவு உயிர்கள் நீங்கலாக, ஏனைய இயங்கும் ஜாதிகளாகிய யானை முதலிய அளிய விலங்குகளை மனிதர் பிடித்து வலிந்து வருத்த, ஊனும் உதிரமும் உருகத் துன்பமுறும் ஒவ்வோர் பக்கத்திலென்க.

அளிய - அளிக்கத் தக்க உயிர்கள். 'மனமுருகும்' எனலுமாம். 121

ஊர்ந்து முழுது முறுபார மேந்தியுஞ்
சாய்ந்த விலங்குக டாளுடைந் தாழ்தர
ஈர்ந்து மறுத்து மிறைச்சி யுவப்பவர்
தேர்ந்து செகுப்பவுந் தேயுஞ் சிலவே.

'மற்றும், அவ்விலங்கினங்களில் (குதிரை, எருது முதலியன) சில வண்டி யிழுத்தும், ஏர் உழுதும், (யானை முதலியன) சுமை சுமந்து (தாங்கியும்) நிலை தளர்ந்து முயற்சி கெட்டு (அல்லது காலோய்ந்து) துன் பத்தி லாழ்ந்து வருந்தியும், புலால் உண்ணுமவர்கள் தமக்கு விருப்பமான உடம்பு முதலியவற்றையும் தேர்ந்து (தெளிந்து) வாள்கொண்டு வெட்டியும் அறுத் தும் கொலை புரியத் தேய்ந்தும் அழியாநிற்கும். 122

தடிவிலை வாழ்நர் தடிந்திடப் பட்டும்
முடிவிலை வாழ்நர் முருக்க முரிந்துங்
கொடுவி லெயினர் கொல்லக் குறைந்தும்
விடலில வேதனை வேந்த விலங்கே.

---

பா - பே. 1. மானிடர்.

'வேந்தே, அவ்விலங்குகள், மாமிசங்களை விலைக்கு விற்று வாழும் பாவிகளால் கொல்லப்பட்டும், விற்போர் கூறி முடிந்த விலையைக் கொடுத்து வாங்கி உயிருடன் கழுத்தை முரிக்க முரிந்தும், வளைந்த வில் கைக்கொண்டு வேடர்கள் வேட்டையாடித் தாம் கண்ட பல்வற்றைக் கொன்றுவிடக் குறைந்தும், இடைவிடாத துன்பமுறுகின்றன. 123

**அந்தோ வளிய விலங்குகள் யார்கண்ணும்**
**நொந்தோ மெனச்சென்று நோக்கி னுனிப்பொடு**
**வந்தோ மெனநின்ற மாண்புடை யார்களும்**
**உய்ந்தோய்ந் தொழிய முயன்றிடு கின்றார்.**

'அந்தோ! அளிக்கத்தக்க அவ்விலங்குகள் யாவர் மாட்டும் 'யாம் மிக நொந்தோம்!' என்று கூறுபவை போல, கனிந்த பார்வையாகக் கூர்ந்து நோக்கிக் கதறின போதிலும், 'யாம் உயர்ந்த மானிடராகப் பிறந்து வந்துள்ளோம்,' என்று பெருமை பேசிக் கொள்ளும் (கர்வமுள்ள) அவ்வர்கள், அவை தப்பி ஓடினபோதிலும் அவிந்தொழியுமாறு முயன்று கொல்கின்றனர்.

மாண்பு - இகழ்ச்சிக் குறிப்பு. 'கதறுகின்ற அவ்வுயிர்களின் துன்பங்களைக் கண்டு இதோ வந்து உம் துன்பத்தை நீக்குகின்றோம் என்று வருபவர்களில்லை,' எனலுமாம். 124

**கன்னியர் வேட்கை கடவு ளரும்பிணி**
**துன்னிய துன்ப விலங்கின் சுடுதுயர்**
**என்னு மிவற்றினை யெம்போல் பவரன்றி**
**[1]மன்ன வறிபவர் மற்றில்லை [2]மன்னே.**

பா - பே. 1. மண்ணுமறிபவர். 2. மன்னு.

'வேந்தே, மற்றும் அவ்விலங்கினங்கள், (புலாலைப் பக்குவம் செய்துண்பிக்கும்) பெண்களின் புலால் விருப்பத்தினாலும், நம் உடம்பிலே ஏற்படும் வெக்கை முதலிய நோய்களாலும், மற்றும் அவைகளே ஒன்றை யொன்று பகைகொண்டழிக்கும் துன்பங்களாலும், சூடு போடுதல் காதறுத்தல் முதலியவற்றாலும் ஏற் படும் துன்பங்களை எம்போல்வாரன்றி வேறொருவர் அறிபவரில்லை.

மன், ஓ இரண்டும் ஈற்றசைகள், கடம் - உடல். இனி, கடவுளரால் ஏற்படும் துயருமாம். சுடு துயர் - கொடுந்துய ருமாம். இனி, யாகத்தில் ஏற்படும் துயருமாம். மருந்துக் காகக் கொல்லுதலுமாம். 125

வலிய முழங்கினு நாறினும் வட்கி
நலியு மிவையென நையு மொருபாற்
பலிபெறு தெய்வங்கண் மேலிட்டுப் பாற்றுங்
கலியவர் கையுட் கழியு மொருபால்.

ஒரு பக்கத்தே சிங்கம் முதலியன முழங்கும் கர்ச் சனையைக் கேட்டும், அவைகள் உள்ள இடத்தை மோப்பத்தால் அறிந்தும், உள்ளங் கலங்கி உடல் மெலிந்து 'இவை நம்மை வருத்துமே!' என்றஞ்சி, நரி, மான் முதலியன வருந்தும்; மற்றொரு பக்கத்தே, உயிர்ப் பலி பெறும் துர்த்தேவதைகள் பெயரால் ஜனங்களை ஏமாற்றிக் கொலை புரியும் துர்ப்புத்தி யுடைய பூசாரி முதலிய தீயோர் கையினால் கோழி முதலியன மாண்டு அழிந்து குறையும். 126

கண்களி ஞேக்கியுங் காதலி னுள்ளியும்
மண்க ளிடைவிட்டு வைகியும் புல்லியுந்
தண்கமழ் தார்மன்ன தாயர் வளர்ப்புழி
எண்களை யின்றிட ரெய்து மொருபால்.

'தார் வேந்தே! ஒரு பக்கத்தே, பெண்கள், கிளி முதலியவற்றைக் கொணர்ந்து கூட்டிலடைத்து வளர்க்குமிடத்துக் காதல் நோக்கத்தோடு தழுவித் தாயைப்போல வளர்த்த போதிலும், அப்பறவையினம் தாம் வசித்த தடம் முதலியவற்றை (விட்டு இவ்விடம் வந்து தங்கினேமே என்று) தம் கண்களால் நோக்கியும், தம் இனத்தை உள்ளத்தால் கருதியும் எண்ணற்ற துயரம் எய்துகின்றன.

**இன்றி இடர் என்பது இன்றிடர் என நின்றது திரிதல் விகாரம்.** 127

**இன்னன துன்பமோ டிவ்விலங் காகுநர்**
**என்னவ ரென்னி னிவைநனி கேளினி**
**மன்னிய மாதவ மேற்கொண்டு மாயங்கள்**
**பின்னை முயல்வார் பிறப்பு மதுவே.**

'இவையும், இவை போல்வனவுமாகிய பல துன்பங்களையுடைய விலங்கினங்களிலே பிறப்பவர் யாவரென நீர் கேட்குமிடத்து யாம் கூறுமிதனைக் கேட்பீராக; அஃதியாதெனில், நிலைபெற்ற மேற்கதியை யெய்துவிக்கும் சிறந்த துறவை மேற்கொண்டு, பின்னர் மாயமான நடவடிக்கையுடன் நிகழும் முனிவர், மறுமையில் செல்லும் கதியும் அவ்விலங்கினமேயாம்.

**மேலுக்குத் துறவி போல வேடம் பூண்டு மாயமாக நடப்பவர் விலங்காகுவர் என்க.** 128

**பொருளிடை மாயம் [1]புணர்த்தும் பிறரை**
**மருளிக ளாக மயக்கு மவரும்**
**இருளுடை யுள்ளமோ டேதங்க ளெண்ணு**
**அருளி லவரு மவைநனி யாவார்.**

'வஞ்சனை மாயம் முதலியவற்றால் பொருள் சேகரிப்பவர்களும், பிறர் மயங்கும் வண்ணம் பொய்வேதம்

பா - பே. 1. புணர்ந்தும்

முதலியவற்றைக் கூறி அயலாரை மயக்குபவர்களும், (கிருஷ்ண, நீல, கபோதமென்னும்) இருள் போலக் கறுத்த தீய எண்ணங்களோடு பிறருக்குத் துன்பம் செய்யக் கருதிய கருணையற்ற அறிவிலிகளும், பெரும் பாலும் அவ்விலங்கினங்களிலேயே பிறப்பார்கள்.

புணர்த்தல் - சேர்த்தல். மனிதனுடைய உள்ளத்தே நிகழும் எண்ணங்களைப் பொதுவாகக் கருமை, வெண்மை யென இரண்டு விதமாகவும், விரிவாக ஆறு வகையாகவும் பிரித்துரைத்து நம் மனத்தே பதியும் வண்ணம் அவற் றிற்கு நிறத்தைக் கற்பித்து மேலோர் ஆகமங்களுள் கூறியுளர்.

அவை :—க்ருஷ்ண லேஸ்யை (மிகு கறுப்பு), நீல லேஸ்யை (ஓரளவு கறுப்பு), கபோத லேஸ்யை (வெண்மை கலந்த கறுப்பு), பீத லேஸ்யை (மஞ்சள் கலந்த வெண்மை), பத்ம லேஸ்யை (மங்கலான வெண்மை), சுக்ல லேஸ்யை (தூய வெண்மை) என்பன. லேஸ்யை என்பது எண்ணம். அவற்றுள் மறுமையில், கிருஷ்ண லேஸ்யை நரகத்திலும், நீல லேஸ்யை நரகத்தும் விலங்கினும், கபோத லேஸ்யை விலங்கினும், பீதலேஸ்யை மனிதப் பிறவியினும், பத்ம லேஸ்யை மனிதரிலும் தேவரிலும் செலுத்துவன. சுக்ல லேஸ்யை வீடுபேற்றை எய்துவிப்பது. ஆகவே, ' இரு ளுடை உள்ளமோடு ' என்றார் ஆசிரியர். எண்ணு - எண்ணி.

129

பற்ருெடு பற்றி முனிந்தார் பலபல
செற்ற நவின்ருர் செறுப்பொடு சென்றவர்
சுற்ற மழிக்குந் துவர்ப்பகை துன்னினர்
மற்றிவ் விலங்கெய்து மன்னுயிர் மன்ன.

'மன்னுயிர்களைக் காவல் புரியும் காவலரே, ஆசை யோடு வெறுத்துத் துறவுபூண்ட மித்தியா தபஸ்வி

களும், பற்பல செற்றம் வருவதற்குக் காரணமான தீய புராணங்களைக் கூறியவர்களும், வைரத்தோடு நிகழ்ந்தவர்களும் அல்லது தற்கொலை செய்து கொள்ளு மவரும், தம்மையே யன்றிச் சுற்றத்தையும் அழிக்கும் துவராகிய காம, குரோத, லோப, மோக, மத, மாத்சரியம் (பொறாமை) என்னும் உட்பகை ஆறினையும் உடையவர்களும், மறுமையில் விலங்காகப் பிறப்பார்கள். 130

**இல்லையுயி ரென்று மில்லைபிறப் பென்றும்**
**நல்லன தீயன நாடி லிலவென்றும்**
**பல்லன சொல்லிப் [1]படுத்துண்ணும் பாவிகள்**
**நில்லாது செல்வர் நிகோத கதியே.**

'ஆராயுமிடத்து இவ்வுடல் பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்டதேயன்றி, உயிர் என்பது ஒன்று இல்லை எனவும், இறந்தால் மறுபடி பிறப்பது இல்லையெனவும், (சுக துக்கத்திற்குக் காரணம் அவரவர் முயற்சியே தவிர) புண்ணிய பாவம் என்பன இல்லையென்றும், மற்றும் இவை போல்வனவாகிய பற்பல தீய மொழிகளைப் புகன்று, பலரைத் தம் வசப்படுத்திப் பிற வுயிர்களை வருத்தி, அவற்றின் ஊன் முதலியவற்றை உண்டு போகத்திலழுந்தும் பாவிகள், நாம் வசிக்கும் இப்பூமியின் கீழ் உள்ள நரகம் முதலியவற்றிலும் நில்லாதவராகி, அந்நரகத்திற்கும் கீழே (உலகத்தின் அடிப்பாகத்திலுள்ள) நிகோதமென்னும் விலங்கு கதியை அடைந்து திரும்பி வாராமையாகிய மித்யாத்வ கர்மத்தால் அவ்விடத்தே தங்கித் துயர் புறுவர்.

நிகோதப் பிறவியிலுள்ள ஓரறிவு உயிர்களும் விலங்கின் இனத்தனவாதலின், அவற்றையும் ஈண்டு ஒருங்கு கூறினர் என்க. 'அண்ணுத்தல் செய்யாதளறு' என்பர் தேவரும். 131

---

பா - பே. 1. பகுத்துண்ணும்.

மக்கட்கதித் துன்பம் :

மாக மழைவண்கை மன்னவ மக்களும்
ஏக கதியின [1]ரேய விகற்பினர்
சேகர் மிலேச்சர் மனிதர்க டிப்பியர்
போக மனித ரெனப்பொருட் பட்டார்.

'வான் மழை போலும் தியாகம் கொடுக்கும் வள்ளலாகிய மன்னவரே, மனிதர் பலரும் ஒரு கதியினரேயாயினும், பொருந்திய விகற்பமுடையவர்; அவர், சேக மனிதர், மிலேச்சமனிதர், மனிதர், திவ்ய மனிதர், போகபூமி மனிதர் என (ஆகமத்துள்) ஐந்து வகையாகக் கூறப்படுவர்.

மாகம் - ஆகாயம், ஏகம் - ஒன்று, விகற்பம் - பிரிவு, திப்பியர் - திவ்வியர் - (காப்பியம் - காவியம் என்பதுபோல) மனிதர்கள், கள் - விகுதி மேல் விகுதி. 132

பத்து வகைய பரதவி ரேவதத்
தத்தகு கால விழிவி னகத்தவர்
சித்தந் தெளிவிலர் சீல மடைவிலர்
செத்த வறிவினர் சேக ரவரே.

'பத்து வகையான பரத ஐராவதத்து ஆறுங் காலத்துச் சித்தம் தெளிவில்லாதவர்களாயும், சீலாசாரம் இல்லாதவர்களாயும், அறிவற்றவர்களாயும் உள்ள அவர்களே சேகர் எனப்படுவார்கள்.

நாம் வசிக்கும் பூமியாகிய இது 'ஜம்பூ த்வீபம்' எனப் படும். இது தட்டையாயும், வட்டவடிவமாயும் இலட்சயோசனைப் பரப்புள்ளதாயும் இருக்கிறது. இந்த ஜம்பூ த்வீபத்தைச் சுற்றிலும் இலவண (உப்பு) சமுத்திரம், ஆரக்கால் நீங்கிய வண்டிச்சக்கர வட்டையின் வளையம்போல இரண்டுலக்ஷ யோசனைப் பரப்பில் சூழ்ந்திருக்கிறது; இங்ஙனமே ஒன்றை

---

பா - பே. 1. ரனேக

ஒன்று சூழ்ந்து, ஒன்றற்கொன்று இரட்டித்த அளவுள்ளன வாகி 1. ஜம்பூத்வீபம், இலவண சமுத்திரம், 2. தாதகி ஷண்டத்வீபம், காளோதக சமுத்திரம், 3. புஷ்கரவரத்வீபம், புஷ்கரவர சமுத்திரம், 4. வாருணிவரத்வீபம், வாருணி வர சமுத்திரம் என இவ்வாறு எண்ணற்ற பல த்வீபங்களும் பல கடல்களும் உள்ளன. அவைகளின் கடைசியிலுள்ளது சுயம்பு ரமணத்வீபமும் சுயம்பு ரமணக் கடலுமாகும்.

16 லக்ஷ யோசனை அகலமுள்ள புஷ்கரவர த்வீபத்தின் (வெளிப்) பாதியில் 8 லக்ஷ யோசனை அகலத்தில் சுற்றிலும் மானுஷோத்தரபர்வதம் (என்னும் மலை) வளைந்திருப்பதனுல், மனிதர் வாழும் இடம்; ஜம்பூத் வீபம் 1. தாதகி ஷண்ட த்வீபம் 1, புஷ்கரார்த்த த்வீபம் (அர்த்தம்-பாதி, $\frac{1}{2}$ ஆக $2\frac{1}{2}$ இரண்டரை த்வீபமும் (லவண காளோதகமென்ற இரண்டு சமுத்திரமும் ஆகிய 45 லக்ஷ * யோசனை) ஆகும்.

வட்டமாகவுள்ள ஜம்பூத்வீபத்தைச் சூழ்ந்துள்ள தாதகி ஷண்ட த்வீபமும் புஷ்கரார்த்த த்வீபமும் ஆகிய இரண்டின் தெற்கிலும் வடக்கிலும் இக்ஷ்வாகாரம் என்னும் நான்கு மலைகள் தெற்கு வடக்கு 24 லக்ஷ யோசனை நீளம் நீண்டு வளர்ந்திருப்பதனுல், அவற்றுள் ஒவ்வொன்றும் இரண்டிரண்டு பாகமாகப் பிரிந்து ஜம்பூத்வீபத்தோடு ஐந்து பிரிவு ஆகின்றது. அவ்வைந்திலும் மகமேரு என்னும் பொன்மலைகள் ஐந்து, மையத்தில் அமைந்திருக்கின்றன.

மற்றும் ஜம்பூத்வீபம் முதலிய ஐந்திலும் ஹிமவான், மஹாஹிமவான், நிஷதம், நீலி, ருக்மி, சிகரி என்ற ஆறு

* லவண சமுத்திரம் 2 லக்ஷம், தாதகி ஷண்டத்வீபம் 4 லக்ஷம், காளோதக சமுத்திரம் 8 லக்ஷம் புஷ்கரார்த்தம், 8 லக்ஷம், ஆக $2+4+8+8=22$. ஒரு பக்கத்திற்கு 22 லக்ஷம்; 2 பக்கத்திற்கு $22+22=44$. இதனேடு ஜம்பூத்வீப விஸ்தாரம் ஒரு லக்ஷம் சேர 45 ஆக நாற்பத்தைந்து லக்ஷ யோசனை.

(குலகிரி) மலைகள் குறுக்கே வீழ்ந்து அதனால், பரதம், ஹைமவதம், ஹரிவர்ஷம், விதேகம், ரம்யகம், ஹைரண்ய வதம், ஹைராவதம் என ஏழு நாடாகப் பிரிந்து ($5 \times 6 = 30$ மலைக்கு $5 \times 7 = 35$) நாடுகள் முப்பத்தைந்து ஆயின.

அவற்றுள் தெற்கில் உள்ள ஐந்து பரதமும் வடக்கில் உள்ள ஐந்து ஐராவதமும் மத்தியிலுள்ள ஐந்து விதேகமும் ஆகிய 15 நாடுகளும் 'கர்மபூமி' என்றும், ஏனைய 20 நாடுகள் 'போகபூமி' என்றும் வழங்கப்படும்.* அவற்றுள்ளும் விதேகநாடு ஐந்தும் எக்காலத்தும் கர்ம பூமியாகவே இருக்கின்றன; பரதம் ஐராவதம் ஆகிய 10 நாடுகள் மட்டிலும் சிலகாலம் கர்மபூமியாகவும், சில காலம் போக பூமியாகவும் விளங்குகின்றன.

சந்திரன் தன் கலைகளின் வளர்ச்சி தேய்வுகளால் பூர்வ பக்ஷம் அபரபக்ஷம் என இரண்டாகப் பிரிவதுபோல, காலமும் மனிதரின் ஆயுள், பலம் முதலியவற்றின் வளர்ச்சி தேய்வு களால் உத்ஸர்ப்பிணி, அவசர்ப்பிணி என இரண்டு பிரிவை அடைகிறது.

அவற்றுள் ஒவ்வொன்றும், 10 கோடா கோடி நிலையினையுடைத்தாகி ஆறு பிரிவினையுடையது. அப் பிரிவுகள், 1. தீத்தீக்காலம், 2. தீக்காலம், 3. தீநற்காலம், 4. நற்றீக்காலம், 5. நற்காலம், 6. நன்னற்காலம் என ஆறு வகை ஆகும். இவை உத்ஸர்ப்பிணியின் கால பேதமாகும்.

---

* நல்வினையின் பயனால் ஐம்பொறிகளினாலும் நுகரும் போகப் பொருள்களை, 10 வகைக் கற்பக விருக்ஷத்தின் தயவினால் அவைகளிடம் பெற்றுப் போகங்களையெய்தும் காரணத்தினால் போக பூமியென்றும்; உயிர்கள் தாம் ஈட்டிய புண்ணிய பாவ வினைகளுக்கிடாகப் பொறிகளால் நுகரும் பொருள்களைத் தமக்குத் தாமே எய்தி நுகரும் காரணத்தினால் கர்ம பூமியென்றும் கூறப்படுகின்றன.

இவைகளையே நன்னற்காலம் முதலாக, தீத்தீக் காலம் வரை வரிசையாகக் கூற அவசர்ப்பிணியின் பேதமாகும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | நன்னற்காலம் | 4 | கோடா கோடிகடற் காலம் |
| 2. | நற்காலம் | 3 | ஷை |
| 3. | நற்றீக் காலம் | 2 | ஷை |
| 4. | தீ நற்காலம் | 1 | 42000 வருஷம் குறைந்த ஒரு கோடா கோடி. ஏனைய இரண்டிற்கும் 21000, 21000 வருஷங்களாகும் என்க. |
| 5. | தீக்காலம் | | |
| 6. | தீத்தீக் காலம் | | |
| | ஆக | 10 | கோடாகோடி கடற்காலம். |

உத்சர்ப்பிணியின் முதல் காலமாகிய தீத்தீக் காலத்திலும், அவசர்ப்பிணியின் ஆறுங்காலமாகிய தீத்தீக் காலத்திலும் வாழுகின்ற மானிடர்களையே சேகர் என ஆசிரியர் குறிப்பிட்டார்.

உத்ஸர்ப்பிணி அவசர்ப்பிணி இரண்டிலும் நிகழும் நற்றீக் காலம், நற்காலம், நன்னற்காலம் ஆகிய 18 கோடாகோடி கடற்காலமும் போக பூமியாகவும், ஏனைய 2 கடற்காலங்கள் கர்ம பூமியாகவும் விளங்குகின்றன. 133

தீவினுள் வாழுங் [1]குமானுடர் தேசத்து
மேவி யுறையு மிலேச்ச ரெனப்பெயர்
ஆவ ரவருண் மிலேச்ச ரவரையும்
வீவருந் தாரோய் விலங்கினுள் வைப்பாம்.

'தாரோய், இலவண காளோதகம் என்னும் இரண்டு சமுத்திரங்களின் கரையோரங்களிலுள்ள தொண்ணூற்றாறு அந்தர த்வீபமாகிய குமானுஷ்ய தீவுகளில் வாழ்பவர் மிலேச்சர் எனவும், எண்ணூற்றைம்பது மிலேச்ச கண்டங்களில் வாழ்பவர் தேச மிலேச்சர் எனவும் மிலேச்சர் இருவகையராவர். அவருள், குமானுஷ்ய தீவுகளில் வாழும் மிலேச்சர் விலங்கினங்களோடொத்தவர் என்பதனைக் கூறுவாம்.

---

பா - பே. 1. குமானுய தேசத்து

லவண காளோதகம் என்னும் இரண்டு கடலின் கரையோரங்களில் (ஒரு கரைக்கு இருபத்து நாலாக, நான்கு கரைக்கும் (24 × 4 = 96) தொண்ணூற்றாறு திவுகள் உள்ளன. அவை குமானுஷ்ய திவுஎனவும், அவற்றில் வசிப்பவர் குமானுஷ்யர் (குற்சிதமனுஷ்யர்) என்னும் மிலேச்சர் எனவும் கூறுவர்.

" ஆரியர் மிலேச்ச ராவர் மானவ ரறத்தை யோர்வார்
ஆரியர் தரும கண்டம் நூற்றெழு பத்தி னுவார்
வாரியுட் டிவு தொண்ணூற் றாறுமற் றைக்கண் டத்துஞ்
சேருந ரறத்தைச் சேரார் மிலேச்சராய்ச் செப்பப் பட்டார்."

என்னும் மேரு மந்தரபுராணம் 1227-ஆம் செய்யுள் இங்கு ஒப்பு நோக்கற்பாலது. மிலேச்சகண்டம், 850 ஆவன :—ஒரு விதேக க்ஷேத்திரத்திற்கு 32 நாடுகளாக, 5 விதேகத்திற்கும் (5 × 32 = 160) நூற்றறுபது நாடுகளாகும். பரதம் 5, ஐராவதம் 5, ஆக 10 ம் சேர்ந்து 170 நாடுகளாகும். அவற்றுள் ஒவ்வொன்றும் வெள்ளியம்பெருமலைகளாலும் இரண்டிரண்டு நதிகளாலும் ஆறு ஆறு கண்டங்களாகப்பிரிந்து, அவைகளுள் தர்ம கண்டம் 170 எனவும், மிலேச்ச கண்டம் 850 எனவும் கூறப்படும்.

அவைகளின் விவரம் பின் வருமாறு :— ஹிமவான் முதலிய ஆறு மலைகளின் மேல் (மத்தியில்) 1. பத்மை, 2. மஹாபத்மை, 3. திங்கிச்சை, 4. கேசரி, 5. புண்டரீகை, 6. மஹாபுண்டரீகை என்னும் ஆறுபொய்கைகள் உள்ளன. தெற்கில் உள்ள பத்மையென்னும் பொய்கையில் மூன்று நதிகளும், வடக்கில் உள்ள மஹாபுண்டரீகை என்னும் பொய்கையில் மூன்று நதிகளும், ஏனைய நான்கு பொய்கைகளில் இரண்டிரண்டாக எட்டு நதிகளும் உற்பத்தியாகி,முன் சொன்ன பரதம் முதலிய ஏழு நாடுகளிலும் இரண்டிரண்டாக (கிழக்குமேற்காக)ச் சென்று, இலவணகாளோதகம் என்னும் கடல்களில் கலக்கின்றன. அவை :- கங்கா, சிந்து, ரோஹிது, ரோஹிதாஸ்யா, ஹரித், ஹரிகாந்தா, சீதா, சீதோதா,

நாரி, நரகாந்தா, சுவர்ணகூலர், ரூப்யகூலா, ரக்தா, ரக்தோதா என்னும் மஹாநதிகளாகும்.

மற்றும், ஐந்து விதேக க்ஷேத்திரத்தின் மையத்தில் உள்ள ஐந்து மகமேருவின் நான்கு மூலைகளிலும் (யானைத் தந்தம் போலும் சிறிது வளைந்துள்ள) கஜதந்தம் என்னும் நான்கு மலைகள் நிஷதம் நீலி என்னும் பர்வதங்கள் வரை தொடர்ந்துள்ளன; ஆதலின், ஒவ்வொரு மகமேருவின் நான்கு பக்கங்களுள்ளும் மேருவின் கிழக்கிலும் மேற்கிலும் உள்ள பத்துப்பாகங்களும் (வனவேதிகையோடு கூடிய) வனங்களாகவும், தெற்கிலும் வடக்கிலும் உள்ள பத்துப் பாகங்களும் உத்தமபோக பூமியாகவும் பிரிந்து விளங்குகின்றன. வனங்களின் பெயர் தேவாரண்யம், பூதாரண்யம் (என்பனவாகும்.) இவ்வண்ணம் மகமேருவும் (போக பூமிகளும்) வனங்களும் மத்தியிலிருப்பதனால், விதேக க்ஷேத்திரம் இரண்டு பாகமாகப் பிரிகின்றது; அவ்விரண்டும், முன் சொன்ன சீதா, சீதோதா என்னும் மஹாநதிகள் இரண்டும் மேருவின் கிழக்கு மேற்காகச் செல்வதனால், விதேக க்ஷேத்திரம் நான்கு பாகமாகப் பிரிகின்றது. (மரத்துண்டு ஒன்றில் எழுநூல் போட்டுப் பிளந்தால் எட்டுப் பலகையாவது போல) பாகம் ஒன்றுக்கு நான்கு வக்ஷார பர்வதங்களும் மூன்று விபங்க நதிகளும் ஆகிய ஏழும் குறுக்கே வீழ்ந்து எட்டு நாடுகளாகப் பிரிக்கின்றன; இவ்வண்ணமே நான்கு பாகத்திற்கும், பதினாறு வக்ஷார பர்வதங்களும் பன்னிரண்டு விபங்கநதிகளும் தெற்கு வடக்காகக் குறுக்கே வீழ்ந்திருப்பதனால்: ஒரு விதேகத்திற்கு 32 நாடுகளாகப் பிரிகின்றன.

'நாலுமுன் னதியினும் நாலுநால் வரையினும்
நாலுநா லிரட்டியாய் விதேகநாடு நின்றவே.'

(மேரு 1243.) என்பர் வாமன முனிவரும். வக்ஷார பர்வதங்களும் விபங்க நதிகளும் நிஷதம் நீலி என்னும் பர்வதங்

களிலிருந்து ஆரம்பமாகி, சீதா சீதோதா நதி வரையில் தொடர்ந்துள்ளன. இம்முறையே 5 விதேகத்திற்கும் 160 நாடுகளாகி, பரத ஐராவத நாடுகள் பத்தும் சேர்ந்து 170 நாடுகளாகின்றன. அந்த 170 நாடுகளையும் 170 வெள்ளி யம் பெருமலை கிழக்கு மேற்காகக் குறுக்கே வீழ்ந்து முந்நூற்று நாற்பது கண்டங்களாகப் பிரிக்கின்றன. அந்த முந்நூற்று நாற்பதிலும் இரண்டிரண்டு சிறு நதிகள் தெற்கு வடக்காகச் செல்வதால் ஆயிரத்து இருபது கண்டங்களாகப் பிரிகின்றன. (அதாவது 170 நாடுகளுள் ஒவ்வொன்றையும் வெள்ளியம் பெருமலையும் இரண்டு நதிகளும், ஆறு கண்டங்களாகப் பிரிக்கின்றன.) அவற்றுள் ஒன்று தர்ம கண்டமும், ஐந்து மிலேச்ச கண்டமுமாகும். ஆதலின், 'தேசத்து, மேவியுறையும் மிலேச்சர்' என்று குறிப்பிட்டார் ஆசிரியர். 134

**வாலு நெடியர் வளைந்த வெயிற்றினர்**
**காலு மொரோவொன் றுடையர் கலையிலர்**
**நாலுஞ் [1]செவியர் நவைசெய் [2]மருப்பினர்**
**சீல மடைவிலர் தீவினுள் வாழ்வார்.**

'அந்தரத்தீவினுள் வாழும் மிலேச்சர்கள் (மனிதரைக் காட்டிலும் மிக்க) உன்னதம் (உயரம்) உடையவர்கள்; அவர்களுட்சிலர் வாலுடையராயும், சிலர் வளைந்த பற்களை உடையவராயும், சிலர் ஒருகால் மட்டும் உடையவராயும், கலை ஞானமே சிறிதும் இல்லாதவராயும், சிலர் தொங்கும் காதுடையவராயும், சிலர் துன்பம் தரும் கொம்பு உடையவராயும், ஒழுக்கமும் கல்வியும் இல்லாதவராயும் இருப்பர். 135

**மக்கட் பிறப்பெனு மாத்திர மல்லது**
**மிக்க வெளிற்று விலங்குக ளேயவர்**
**நக்க வுருவினர் நாணு வொழுக்கினர்**
**தொக்கனர் மண்ணே துளைத்துண்டு வாழ்வார்.**

---

பா - பே. 1. செவியினர். 2. விருப்பினர்.

'மற்றும், அந்த மிலேச்சர் மானிடப் பிறவியினர் என்று கூறப்பட்ட போதிலும், சிங்கம் புலி பன்றி முதலிய மிருகங்களின் முகத்தைப் போலும் முகமுடையவர்களாகிய அவர்களை விலங்குகளென்றே கூறிவிடலாம்; அதுவேயுமன்றி, அவர்கள் ஆடை அணியாத நகுதற்குக் காரணமான உருவுடையவர்கள்; வெட்கம் என்பதே இல்லாத ஒழுக்கமுடையவர்கள்; மண்ணை உணவாகத் துளைத்து உண்டு வாழ்பவர்கள்.

"ஒன்றர்தாம் காலர் வாலர் கொம்பர்தாழ் செவியர் சீயம்
பன்றிமான் குரங்கு கிரி யொட்டகங் கரடி யாதி
ஒன்றலா முகத்தர் பல்ல மரயுகங் காத மோக்கம்
தின்றிடா பழத்தை மண்ணை முழஞ்சிலு மரத்துஞ்சேர்வார்."

என்னும் மேருமந்திரச் செய்யுள் ஈண்டு ஒப்புநோக்கி அறிதற்பாலது. 136

பூவும் பழனு நுகர்ந்து பொழின்மர
மேவி யுறையு மிலேச்சர் மிகப்பலர்
ஓவலர் வாழ்வ தொருபளி தோபமென்
றேவல் சிலைமன்ன வெண்ணி யுணர்நீ.

'வில்வித்தையில் சிறந்த மன்னவரே, பூவும் பழமும் புசித்து, சோலையின் மரப்பொந்துகளிலே வசிக்கும் மிலேச்சர் பலராவர். அவர்கள் இடை நடுவில் இறத்தல் அன்றி வாழும் நாள் ஒரு பல்லம் என்று நீர் எண்ணி உணர்வீராக.

எண்பத்துநான்கு இலட்சம் வருஷம் கொண்டது ஒரு பூர்வாங்கம் எனப்படும்; எண்பத்து நான்கு பூர்வாங்கம் கொண்டது ஒரு பூர்வம் எனப்படும்; இங்ஙனமே இதனை இருபத்து ஏழு தரம் பெருக்க ஒரு பல்லம் என்பதாகும்; பல்லம் பத்துக்கோடா கோடிகொண்டது ஒரு கடல் எனப்படும்; ஆதலின், ஒரு கடலில் பத்துக்கோடாகோடியில் ஒரு பாகமான ஒரு பல்லம் ஆயுளையுடையவர் மிலேச்சர் ஆவர்.

[1]தேச மிலேச்சரிற் சேர்வுடை யாரவர்
மாசின் மனிதர் வடிவின ராயினுங்
கூசின் மனத்தர் கொடுந்தொழில் [2]வாழ்க்கையர்
நீச ரவரையு நீரி னிழிப்பாம்.

'(பரதம் ஐராவதம் விதேகம் என்னும் மூன்றிடமாகிய பதினைந்து தேசங்களிலும் உள்ள [170×5 =850] எண்ணூற்றைம்பது மிலேச்சக் கண்டங்களில் வசிக்கும்) மிலேச்ச மனிதர் கொம்பு, வால், வளைந்த பல் முதலியன உடைய மிருகங்களோடொத்த உருவம் இல்லாமல் மனிதராகிய நம்மைப்போன்ற குற்றமற்ற வடிவம் உடையவராயினும், நாணம் இல்லாத உள்ளத்தராயும், கொடுந்தொழில் புரியும் வாழ்க்கையுடையவராயும், நீசராயும் உள்ள அவர்களையும், குணத்தால் இழித்துக் கூறுவோம்.

தேசமிலேச்சர் குமானுஷ்ய மிலேச்சரைப்போல வடிவம் இலராகியும், குணத்தால் இழிந்தவர்களேயர்வார்கள் என்க. கூசுதல் - நாணுதல். கொடுந்தொழில் - நீசத்தொழில், நீர் - குணம். 850 மிலேச்சகண்டவிபரம் 134-ஆம் கவியின் உரையில் காண்க. 138

கூடன் மிலேச்சர் [3]குமானுட ரென்றிவர்
ஏடவிழ் தாரோ யெவரா பவரெனிற்
கோடிக் குதர்க்க முரைத்துக் குணங்களை
நாடினர் கொள்ளா நலமி லவரும்

'முறுக்கவிழ்ந்து மலர்ந்த மலர் மாலையணிந்த வேந்தரே, மேலே எண்ணிக்கையில் கூட்டிக் கூறிய தேசமிலேச்சராகவும், குமானுஷ்ய த்வீபம் என்னும் அந்தர த்வீபங்களில் உள்ள மிலேச்சராகவும் பிறப்பவர் யாவரென வினவுமிடத்து, முறை கெட்ட பற்பல

---

பா - பே. 1. தேச மிலேச்சரெனப்படுவாரவர். 2. வாட்கையர். 3. குமானுயரென்றிவர்.

வீண் குதர்க்கங்களைப்பேசி நற்குணங்களை ஆராய்ந்து கைக்கொள்ளாத நன்மையற்ற மாந்தர்களாவார்கள்.

இது முதல் மூன்று கவி ஒரு தொடர். 'நலமிலவரும்,' என்பது (கவி 141ல்) 'ஆபவர்' என்பதனோடு முடியும். 139

அடங்கா மரபி னவர்கட் கடங்கார்
விடங்கார் மணந்த விடக்கும் பிறவு
முடங்காய்ந் துணக்கொடுப் பாரு முயர்ந்தோர்
தொடங்கா வினைக டொடங்கு மவரும்

'-நன் மரபிலுதித்து ஐம்புலன்களில் மனம் செல்லவொட்டாது தடுக்கும் நற்குணவான்களுக்கும் அடங்காதவராகியும், பிறர்களுக்கு இன்னல் தரும் விஷம் போலும் கருமை சேர்ந்த உள்ளத்துடன் இடக்கான வார்த்தை பேசுமவரும், பிற தீய செயல் புரியுமவரும், கோபத்தால் உயிர்ப்பிராணிகளை வதைத்து அவைகளின் உறுப்புக்களைப் பிறர்க்கு உண்ணக் கொடுக்குமவரும், உயர்ந்தோரால் தொடங்காத தீய செயல்களைப் புரியுமாறு பிறர்களையும் தூண்டித் தாங்களும் செய்யுமவரும்

அடங்கா - அடங்கி, எச்சத்திரிபு, இனி, ' தாம் அடங்காதவராகியும், நற்குணவான்களுக்கும் அடங்காதவராகியும் ' என்றுரைப்பினும் அமையும். விடக்கு - ஊன் எனலுமாம். காய்ந்து - காய்த்து எனலுமாம். 140

அன்ன பிறவியு ளாங்கவ ராபவர்
இன்னுஞ் சிலவ ரிழிகதிப் பாற்பட்டுத்
துன்னிய போழ்தே சுருங்கி யொழிபவர்
என்னும் [1]பிறர்க ளறிவிற் கிகந்தார்.

---

(பா - பே.) [1] 'பிறர்கள் பிறவியிகந்தார்'

— 'முன் சொன்ன இருவகை மிலேச்சப் பிறவியுள் (மேற்கூறியவர்களே) பிறப்பார்கள்; மற்றும் சில நபர் நீசத் தொழிலுடைய நீசக் கதியினர்பால் அகப்பட்டு அவர்களைச் சேர்ந்தபொழுதே அறிவு ஆசாரம் முதலியன குறைந்து அழிவார்கள். அவர்களைக் கூறப்புகின் அவர்கள் நம் அறிவிற்கு மீறி நடந்தவர்களாவார்கள்.

'வில்லின் மாகொன்று......அரிதே,' என்றார் சிந்தாமணியாரும். என்னும் - சிறிதும். 141

மக்கள் வதியு மிரண்டரைத் தீவினுள்
தக்க நிலத்துப் பிறந்தவர் தம்முளும்
முக்குலத் தாரொடுங் கூடா முயற்சியர்
ஒக்கலைப் போல்வார் பலரு முளரே.

'மனிதர்கள் வசிக்கும் (ஜம்பூத்வீபம், தாதகிஷண்டத்வீபம், புஷ்கரார்த்தத்வீபம் என்னும்) இரண்டரைத் தீவினுள் தக்க நிலமாகிய நூற்றெழுபது கர்ம கண்டங்களில் பிறந்தவர்களுள்ளும், (செந்தண்மை பூண்டு ஒழுகும் அறவோராகிய) அந்தணரும், அரசரும், வைசியரும் என்னும் முக்குலத்தாரோடும் கூடாத (தீய மார்க்கத்தில்) முயற்சியுள்ளவர்களாகி உறவினரைப்போலச் சகோதர பாவம் காட்டும் நீசர் பலரும் உளர்.

வதிதல் - தங்கல்; வசித்தல், தக்கநிலம் - ஞானிகள் பிறக்கும் இடம், ஒக்கல் - உறவினர். பேச்சளவில் உறவினரேயன்றி நற்காட்சியின் செயலில் மாறுபட்டவர். 142

முக்குலத் தாரொடு மூடத் தொழுதியர்
தக்க தகாவென்ப தோராத் தகையவர்
மக்க ளெனப்படு வாரலர் மற்றவர்
பக்கங் கிடக்கும் பதரெனக் கொண்ணீ.

'முக்குலத்தாரோடு ஏனைய குலத்தவர்களும் மூடத்தினால் செய்யத்தக்கது இன்னது, செய்யத்தகாதது இன்னதென்று அறியாத அக்கூட்டத்தினர் மாக்களேயன்றி மக்களெனப்படுபவர் அல்லர்; அவர்களை நெல்லின் எதிரேசென்று நிற்கும் பதர் என்றுநீர் அறிந்துகொள்க.

நெல்லோடு கலந்த பதர் பார்வைக்கு நெல்லைப் போலத் தோன்றினும் பயனற்றதாதலின், அதுபோலும் லோகமூடம் தேவமூடம் பாஷண்டிமூடம் ஆகிய மூடச் செயலில் நிகழ்ந்த கூட்டத்தார், உத்தமர்களுடன் கலந்திருந்த போதிலும் பயனற்ற மாந்தர் ஆவர் என்பது கருத்து. 143

நல்ல நிலங்க ணலங்கொள் வடிவுகள்
[1]இல்லை யமர்ந்துழித் தோன்ற லெனவிவை
எல்லையில் யோனிக ளெல்லா மிகந்தெய்தல்
அல்லியந் தாரோ யரிது பெரிதே.

'மலர்மகள் மகிழும் மாலையணிந்த மார்பரே. எல்லையிலா யோனிகளெல்லாம் கடந்து உத்தமமானிடப் பிறவி யெய்தல் அருமையாகும். அதுவும் 170 தர்ம கண்டங்களில் நன்மையைக் கொண்ட உத்தம இலக்ஷணங்களுடன் திருவறம் நிறைந்த இடத்தே பிறத்தல் யாவர்க்கும் எளிதில் கிடைப்பது இல்லை. அது மிகவும் அருமை. 144

அண்ணை யலிகுரு டாதி யவர்களை
மண்ணுயர் ஞாலத்து மானிட ராகவைத்
தெண்ணு நர் யாருள ரெல்லா மமையினும்
பெண்ணின் பிறவியும் பீடுடைத் தன்றே.

'உன்மத்தர், பேடிகள், நபும்ஸகர், குருடர், மற்றும் செவிடர் ஊமையர் முதலிய மாந்தர்களுள்

(பா - பே.) 1. 'இல்ல மமைந்துழி'

இவ்வுலகத்து உத்தம மனிதர்களோடு சமமாகவைத்து எண்ணப்படுபவர் யாவருளர்? எவருமில்லை. பேடியர் முதலியவருள்ளும் நீங்கி, நல்ல வடிவும் குலனும் பிறவும் எய்திப் பெண்ணாய்ப் பிறந்த போதிலும், அப் பெண் பிறவியும் பெருமையுடைத்தன்று.

பெண்டிரும் ஆடவரைப் போலவே நற்காட்சி பெறும் சத்தியுடையராயினும், அந்தப் பிறவியிலேயே முக்தியடையும் பற்றற்ற உருவமாகிய நிர்க்கந்தத் தவம் கைக்கொள்ள இயலாதவராதலாலும், மற்றும் சில காரணங்களாலும், 'பெண்ணின் பிறவியும் பீடுடைத்தன்று' என்றார் ஆசிரியர்.

'அரிது அரிது மானிடராகப் பிறத்தலரிது; மானிடராகப் பிறந்த காலையும், கூன் குருடு செவிடு பேடு நீக்கிப் பிறத்தலரிது,' என்னும் ஔவையார் வாக்கு ஈண்டு ஒப்பு நோக்கி அறிதற்பாலது. பேடு - பெண். 'செறியச் சொன்ன பொருள் தெளிந்தார், சேரார் விலங்கிற் பெண்ணாகார் குறுகார் நரகம் ஓரேழும் கீழ்முத்தேவர் குழாம் தீண்டார்' என்று கூறிய சிந்தாமணியார் வாக்கும் ஈண்டு ஆராயத்தக்கது. 145

எண்பத்து நான்கெனு நூரு யிரமுள
பண்பொத்த சாதிப் பதமென்ப மற்றவை
கண்பற்றுந் தாரோய் களிப்பதோர் நல்வினைத்
திண்பற் றுடையவ ரிவ்வுடல் சேர்வார்.

'கண்கவர் தாரினை உடையவரே, எண்பத்து நான்கு இலட்சம் யோனி பேதங்களில் நற்பண்புகள் வாய்ந்த உத்தம மானிடப் பிறவியும் இலட்சணமமைந்த ஆணுடலும் அறிவும் பெறுவார், கண்டோர் காதலிக்கும் ஒப்பற்ற புண்ணிய வினையின் வலிமையினால் திருவறப் பற்றுடையவரேயாவர்.

"தவமும் தவமுடையார்க்காகும்; அவமதனை அஃதிலார் மேற்கொள்வது," என்னும் தேவர் வாக்கு ஈண்டு

ஒப்பிடற்பாலது. கள் - தேன் சொட்டும் தார் எனலுமாம். எண்பத்து நான்கு இலட்சம் பேதமாவன :—நித்யநிகோதம், சதுர் கதி நிகோதம், ப்ரத்வீகாயம், அப்காயம், தேஜஸ்காயம், வாதகாயம், வனஸ்பதிகாயம், ஆகிய ஏழு பிரிவிற்கும் ஒவ்வொன்றிற்கு ஏழு லட்சம்; விகலேந்திரியம் ஒன்பது லட்சம்; தேவகதி, நரககதி, விலங்குகதி ஆகிய மூன்றிற்கும் ஒவ்வொன்றிற்கு நான்கு லட்சம்; மனுஷ்யகதிக்குப் பதினான்கு லட்சம், ஆக. ($7 \times 7 = 49 + 9 = 58$. $4 \times 3 = 12 + 14 = 26$. $58 + 26 = 84$) எண்பத்து நான்கு லட்சம். 146

சார்ந்த பொழுதே தலைநாட் கருவினுள்
வார்ந்து வழுவா தமைந்து வளரினு
மீர்ந்தண் கமழ்நறுந் தாரோ யிடர்பல
கூர்ந்து வருபயாங் கூற வுலவா.

'மிகவும் குளிர்ந்த வாடைவீசும் தாரினையுடையீர், மானிடப் பிறவி எய்தவேண்டிய உயிர், கர்ப்பத்துச் சார்ந்த காலத்தே கெடினும் கெடும்; அங்ஙனம் கெடுதலின்றி நிறைந்து உருத்தவறாது அமைந்து வளரினும் பத்து மாதம் நிரம்புவதற்குள் பல இடர் தொடர்ந்து வருவனவுமாம்; அவை இத்துணையென்பது யாம் கூற வியலாது. 147

குழவி யருஞ்சுரஞ் சென்று குமர
அழுவ வடவி யரிதி னிகந்தாற்
கிழவெனு மெல்லை கெழீஇயினர் சார்ந்து
வழுவினர் செல்வது மற்றோர் கதியே.

'பின்னர்க் குழவிப் பருவமாகிற அரிய காட்டு வழியே சென்று, யௌவனமாகிற காட்டையும் அரிதினில் கடந்தால், மூப்பெனும் எல்லையை அடைந்து, ஈட்டிய வினைகளுடன் இறந்து, எதிர்கதி அடைதல் நிச்சயம். 148

யானை துரப்ப வரவுறை யாழ்குழி
நானவிர் பற்றுபு நாலு மொருவனோர்
தேனெயி னழிதுளி நக்குந் திறத்தது
மானுய ரின்ப மதித்தனை கொண்ணீ.

யானை துரத்திவரப் பயந்து ஓடுங்கால் சர்ப்பங்க ளுறையும் பாழ்ங்கிணற்றில் தவறி விழுமொருவன், நாணற்புல்லைப் பற்றித் தொங்க (பற்றிய புல்லை கருமையும் வெண்மையுமான இரண்டு எலிகள் கடித்து அறுக்க, தேனீக்கள் தொடர்ந்து மொய்க்க,) அந்தச் சமயத்தே மேலிருந்து விழும் தேனின் ஒரு துளியை நக்கும் தன்மையதே மானிடர் இன்பம் என்பதை நீர் மதித்து அறிவீராக.

'யானை துரத்துவது காலன் தொடருவது போலும்; அரவு உறை ஆழ்குழி நரக ஆவர்சம் போலும்; (எலிகள் இரண்டும் இரவும் பகலும் போலும்.) யானையால் அசைத் தாட்டப்பட்ட மரத்தினின்று விழும் தேன் துளி மானிடர் இன்பம் போலும்,' என்று எண்ணி அறிக என்பது கருத்து.

பல்வேறு துன்பங்களுள் சிறிதளவே இன்பம் என்பார், 'துளி என்றார். தேனீக்களின் உணவு முதலியவற்றிற்குக் காரணமான தேன்கூட்டை அழிக்க அழிந்து அதினின்றும் சொட்டும் சிறு துளி என்க.

துரப்ப - செலுத்த, குழி - பாழ்ங்கிணறு, நால் நவிர் - தொங்கும் நாணற்புல், நாலும் - தொங்கும், மானுயர் - மனிதர். 149

அன்பும் பிறவு மமைந்தாங் ககத்திருந்
தின்பங் கருது மிருவர்க் கிடைபல
துன்பங்க டோன்றுந் தொடர்ப்பா டுளவெனில்
முன்பவை யில்லெனின் முற்றுந் தொழிலே.

'அன்பும் ஏனைய இல்லறம் புரிதல் சுற்றந் தழுவு தல் முதலிய பலவும் இல்லறத்தார்க்கு அமைய வேண்டிய முறைப்படி அமைந்து இல்லாளகத்திருந்து சிற்றின்பத்தை விரும்பும் தம்பதிகள் இருவர்க்கிடை யிலே ஆயுள் முடியும்வரை அவ்வில்லறத் தொடர்ப் பாடு நீளுமாயின் அவர்கட்கு இம்மை மறுமையிலே பல துன்பங்கள் தோன்றுதல் இயல்பே; அங்ஙன மன்றி, முதுமை வருமுன் முறைப்படி துறந்து பற்றற்ற நிலையில் அவ்வில்லறத் தொடர்ப்பாடு நீங்கு மாயின், பேரின்பத்திற்குக் காரணமாகிய அத்துறவு, வினை முற்றுந் தொழிலேயாகும். 150

**இன்ன நிலைமை யிதனுட் பிறந்தவர்**
**மன்னுமொன் றுண்டு வரத்தாற் பெறுவது**
**பொன்னியல் சேர்கற்ப போக நிலங்களிற்**
**றுன்னு முயற்சி துணியுந் திறமே.**

'மேலே கூறிய நிலையாமையை நிலையாகவுடைய இம்மானிடப் பிறவியிலே பிறந்தவர், மிக்க வரத்தால் (புண்ணியத்தால்) பெறுவது ஒன்று உண்டு; அஃது யாதெனின், இயல்பினல் அடைவிக்கும் தேவருலகங் களிலும் போக பூமிகளிலும் அடையும் முயற்சியில் துணிந்து நிகழும் தன்மையாகும்.

பொன் - தேவருலகம். 'பொன்உலகு' என்பர் பிறரும். கற்பம் - கற்பக மரத்தின் இன்பம் நுகரும் இடம். துணியுந் திறம் - துன்பத்திற்குக் காரணம் பிறவியென்றறிந்து வெறுத்து மனம் வேறு வழியில் செல்லவொட்டாது தடுத்துத் துறக்கும் தன்மை.

'நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை'

என்றார் தேவரும். 151

துன்னு முயற்சி துணியுந் திறமிவை
பன்னி யுரைப்பிற் பலவாய்ப் பெருகினுந்
தன்னிய ருனந் தவமொடு பூசனை
என்னுமிந் நான்கென வெண்ணி யுணர்நீ.

'மேற்கூறிய துணியுந்திறம் யாதென ஆராய்ந்துரைப்பின், அவை பல விதமாகப் பெருகுமாயினும், அவற்றைத் தொகுத்து ஆகமத்து அறிவு காட்சி மயமான சீலமும், தானமும், தவமும், பூஜையும் என நான்கு வகையாகக் கூறப்படுமென்பதை எண்ணி யுணர்வீராக.

இயற்கையாலமைவது சீலம்; செயற்கையாலமைவன தானம், தவம், பூஜை என்க. உஷ்ணமும் ஒளியும் சூரியனுக்கு இயல்பாய் அமைந்துள்ளமை போல, அறிவும் காட்சியும் உயிர்களுக்கு இயல்பாகிய குணம். அவ்வியல்பில் பொருந்தி வேறு பற்றற்று நிகழ்வது சீலம் என்க. இனி, செயற்கை எனினுமாம். 'திடனுகத் தெண்மட்டுந் தீந்தேனும் உயிர்க்குழாமீண்டி நிற்றற்கு இடனுகும் ஊனுமிவை துறந்தலே சீலம்,' என்ருர் திருத்தக்கதேவரும். தானம்: நான்கு விதம். அவை, ஆஹாரதானம், ஔஷத தானம், தயா தானம், சாஸ்த்ர தானம் என்பனவாம். 152

தலையு மிடையுங் [1]கடையுமாச் சாற்று
நிலைமைய தான நிழன்மணிப் பூணேய்
உலைவிலேற் போனுட னீபவ னீயு
மலைவில் பொருளின்ன மாட்சிய மன்னே.

'பூண் ஒளி பரவிய வேந்தரே, தானம் என்பது, உத்தமம், மத்திமம், ஜகன்யம் என மூன்றுவிதமாகக் கூறும் நிலைமையது. மன்னவரே, அந்தத் தானமும், ஏற்பவன், கொடுப்பவன், மாறுபாடில்லாத பொருள்

(பி - ம்.) 1. 'கடையு மெனவிங்'

என்னும் இம்மூன்றும் மாட்சிமை தங்கியனவாக நேர வேண்டும்.

மலைவில் பொருள் - நீதியுடன் சம்பாதித்த பொருள். (தானம் கொடுக்க யோக்கியமான பொருள்.) அவை நாற்பத்திரண்டு வகைக் குற்றங்களிலிருந்து நீங்கிய பொருள் என்பர் மஹாபுராண ஆசிரியர். தானத்தின் விவரம் மேருமந்தர புராணம் மூன்றாவது சருக்கத்திற் காண்க. 153

ஐம்மை யமைந்தார்க் கெழுமை யமைந்தவர்
இம்மை நினையா ரிமைப்பத மீவழி
மும்மைக்கு மும்மடங் காய முறைமையிற்
பொய்ம்மையில் புண்ணியம் போர்க்கும் புகுந்தே.

'ஐம்பொறிகளையும் வென்று இயற்கைக் குணம் அமைந்த துறவிகளுக்கு ஸ்ரத்தை முதலிய எழு வகைக் குணங்கள் நிறைந்த இல்லறத்தார் (சிராவகர்) இல்லற இன்பங் கருதாது பற்றற்றவராகி, நவ புண்ணியக் கிரமத்திஞல் ஆஹாரதானம் கொடுத்தால், அவர்களிடத்துத் தர்மானுபந்தி புண்ணியம் வந்து நிறையும்.

ஐம்மை அமைதல்-பொறிவாயிலைந்தவித்துப் பொய்தீர் ஒழுக்க நெறி நிற்றல். எழுவகைக் குணம் 156 - ஆம் கவியில் கூறுகின்றார். இமை பதம் - சிறிதளவு உணவு, பதம் - உணவு. மும்மைக்கு மும்மடங்கு - ஒன்பது வகை (தானம் கொடுக்கும்) முறை; அவை:—1. முனிவர்களை எதிர்கொண்டழைத்தல், 2. அவரை உயர்ந்த இடத்தில் அமரச் செய்தல், 3. அவர் பாதம் கழுவுதல், 4. பாதங்களில் அர்ச்சித்தல், 5. அவரை நமஸ்கரித்தல், (6 முதல் 9 வரை) மனம், வசனம், உடல், உணவு ஆகிய இந்நான்கும் சுத்தமாக இருத்தல் என்ற ஒன்பதுமாகும். 'எதிர்கொளல் இடநனி காட்டல்' என்ற (சிந்தாமணி) நச்சினார்க்கினியர்

உரை பார்க்க. பொய்ம்மையில் புண்ணியம் - முத்தியை அடையும் வரை நிலைத்திருக்கும் புண்ணியம். 154

**துறவி யடக்கை பிறர்க்குநன் றாற்றல்**
**உறவினர்க் கோம்புதன் மெய்த்தலைப் பாடென்று**
**அறிவ ரறைந்தாங் கறைந்தனன் றானங்**
**குறைவில னேற்பவற் கேற்ற குணனே.**

'ஆகமத்துக் கூறும் முறைகளில் குறைவிலராகி, தானம் ஏற்பவர்க்கு (வாங்குபவர்களுக்கு) ஏற்ற நற்குணங்கள் யாவையெனின், உடல் உள்ளம் ஆகிய இரண்டின் சம்பந்தமான பரிக்ரஹங்களைத் துறத்தல், அறுவகைப் பிராணி சம்யமம் அறுவகை விஷய சம்யமம் ஆகிய விரதங்களில் பொருந்தல், பிறர்க்கு நன்மைதரும் திருவறத்தைக் போதித்தல், உயிர்களைப் பாதுகாத்தல், உண்மைத் தவத்தின்பால் நிற்றல் முதலியனவுமாகும்.

துறவு - துறவியென நின்றது. (மணிமேகலை 26 : 58.) சம்யமங்களின் விவரம் முத்திச் சருக்கத்தில் கூறப்படும். உறவி - உயிர்கள்; துறந்தவர்களுக்கு உறவினர் என்பது இல்லையாதலின் சகல உயிர்களும் உறவேயென்க. 155

**போதிசை வாற்றல் பொன்றுதறு கட்பம்**
**ஈதற் கிவறுத லேற்பவர் மாட்டெழு**
**காதல் கழிபற்றி லாமை தெரிந்தறிவு**
**ஏதமின் றீவான் குணமிவை யேழே.**

'முனிவரர், உணவு ஏற்க வருங்காலத்து, ஸ்ரத்தையுடன் காத்திருத்தலும், முனிவரர் வந்தால் தன்னுடைய சக்திக்குத் தக்கவாறு தானங் கொடுத்தலும், தானம் கொடுக்க நேராவிடின் பொறுமையுடன் இருத்தலும், நேர்ந்தால் அவர்பேரில் பக்தியுடன் கொடுத்தலும், அவர்மீது உண்டாகும் கருணையும்,

தானம் கொடுப்பதனல் இவ்விதப் பலன் கிடைக்க வேண்டும் என்றெண்ணும் (மிகுபற்றென்னும்) லோப மின்மையும், தானம் கொடுக்கும் முறையைக் கூறும் நூல்களைத் தெளிந்துணரும் தூய ஞானமும் என்னும் குற்றமற்ற இவை ஏழும் தானம் கொடுப்பவனுக்கு உரிய குணங்களாகும். போது - காலம். 156

தானு மடங்கி யடங்கினர்க் கேந்திய
ஊன முயிர்களுக் கெல்லா முணர்வது
ஞான வொழுக்கம் பெருகு [1]நலத்தகை
[2]ஈனமி லின்ப நிலங்கட்கு வித்தே.

'மக்கள், (ஐம்பொறிகளில் மனம் செல்லாமல்) அடங்குவதும், அங்ஙனம் அடங்கினோர்க்கு ஈந்த தானமும், ஓரறிவு உயிர் முதலியவற்றிற்கு ஏற்படும் துன்பத்தை உணர்தலும், ஞானமும் ஒழுக்கமும் பெருகும் காட்சியின் நலமும், ஆகிய இவைபோல்வன இன்ப நிலங்களுக்கு விதையாகும்.

'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்றார் தேவரும். நலம் - நற்காட்சி. 157

கடைநின் றவருறு கண்கண் டிரங்கி
உடையதம் மாற்றலி னுண்டி கொடுத்தோர்
படைகெழு தானையர் பல்களி யானைக்
குடைகெழு வேந்தர்க ளாகுவர் கோவே.

'கோவே, கடை வாயிலில் உணவு ஏற்கவந்தார் துன்பங்கண்டு மனமிரங்கி, தம் ஆற்றலுக்கு ஏற்ற வாறு உண்டி கொடுத்தவர், மறுமையில் ஆயுதம் தாங்கிய யானை முதலிய நால்வகைச் சேனைகளையும், ஒற்றைக் குடையினையுமுடைய அரசராவார்.

உறுகண் - வருத்தம். 158

---

(பா-பே.) 1. 'நலத்தது' 2. 'ஈனமில் போக நிலங் கட்கு வித்தே'

ஊறு பலசெய் துயிர்கட் கிடர்செயும்
வீறில் பொருளே வினையவர்க் கீந்தவன்
ஏறும் [3]பயனிஃ தென்றினி யான்சொல்லி
னூறிணர்த் தாரோய் நகுவ துடைத்தே.

'பூக்கள் மணம் வீசும் மாலைமார்பரே, உயிர்களுக்குப் பல இடையூறு செய்து இன்னல் தரும் ஊன் முதலிய பொருள்களைத் தீவினைஈட்டும் தன்மையரான தாபதர் முதலியோருக்குத் தானமாக ஈந்தவன் அடையும் பயன் யாதென யான்கூறின், அது ஏளனத்திற்குரிய தன்மையதாகும்.

இடையூறு செய்யும் பொருள்களாவன மண், பொன், பெண், கள், தேன் முதலியன. நகுதல் - ஏளனச் சிரிப்பு. 159

தன்கைப் பொருளு மிழந்து தனக்கொரு
புன்கட் கதிசெல்லும் வாயில் புணர்ப்பவன்
வன்கட் பதகர்க்கு வான்பொருள் கைக்கொடுத்
தென்கைப் பணிகொண்மி னென்பவ னொத்தான்.

'இம்மையில் தன்கைப்பொருளுமிழந்து, மறுமையில் துர்க்கதிக்குக் காரணமான (பொருள்களைத்) தானங்கொடுப்பவன், திருடர் முதலிய பாதகர்களுக்கு வருத்தத்துடன் தன் பொருளைக் காட்டிக் கொடுத்து, 'என் ஏவலையும் ஏற்றுக்கொண்மின்,' என்று வணங்குமவனையொப்பான். 160

ஒத்த குணங்க ளமைந்தாங் குறுவர்க்குத்
தத்துவந் தேறி யவன்செய்த தானங்கண்
முத்திறத் துள்ளும் படாது முடிமன்ன
உத்தம தேவரு ளுய்க்கு முணர்நீ.

---

(பா - பே.) 3. 'பயனிது வென்றினியான்

'முடியணிந்த மன்னவரே, தத்துவந் தெளிதலாகிய நற்காட்சியுடையவன், (நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகிய மும்மணிக்கும்) ஏற்ற குணங்கள் அமைந்த திகம்பர முனிவரர்களுக்குக் கொடுத்த தானப் பயனால், பவணர், வியந்தரர், ஜோதிஷ்கர் என்னும் கீழ்மூத்தேவர்களாகப் பிறவாதவனாகி, மேல் உலகத்து உத்தமத் தேவர்களாகவே பிறப்பான்.

தேறுதல் - தெளிதல். தத்துவந்தெளிதல் நற்காட்சி யெனப்படும்.

'இறைவனு முனியும் நூலும் யாதுமோர் குற்ற மில்லா
நெறியினைத் தெளிதல் காட்சி யாமது நிறுத்தும் வீட்டின்
இறுகும்எண் மயமும் மூட மாறுநீ வினையு மின்றி
நெறிவிளக் குறுத்த லாதி யெட்டங்கம் நிறைந்த வென்றான்'
என்பதும், (மேரு. 355)

உறுவர்ப் பேணல் உவர்ப்பின்மை
உலையா வின்பம் தலைநிற்றல்
அறிவர் சிறப்பிற் கெதிர்விரும்பல்
அழிந்தோர் நிறுத்தல் அறம்பகர்தல்
சிறியார் இனத்துச் சேர்வின்மை
சினம்கை விடுதல் செருக்கவித்தல்
இறைவ னறத்து ளார்க்கெல்லாம்
இனிய ராதல் இது தெளிவே.'
என்பதும்,

'செறியச் சொன்ன பொருள்தெளிந்தார்
சேரார் விலங்கில் பெண்ணாகார்
குறுகார் நரகம் ஒரேழும்
கீழ்மூத் தேவர் குழாம்தீண்டார்.'

என்ற (சிந்தாமணி 2816, 2817 ஆம் செய்யுட்களும் ஈண்டுக் கருதத் தக்கன. 161

**மிக்க விரதம் விரிபல வாயினுந்**
**தொக்கன வைந்திற் சொலுமூன்றி னுன்கில்**
**ஒக்க வவற்றி னுறுபயஞ் சொல்லிடில்**
**தக்கவர்க் கொத்ததிற் றன்னங் குறைவே.**

*'விரதங்களின் விரிவு மிகப்பலவாயிருந்தபோதி லும் அவற்றைத் தொகுத்து, அணுவிரதம் ஐந்து, குணவிரதம் மூன்று, சிக்ஷாவிரதம் நான்கு என்று ஆகமத்துள் கூறப்படும். அம்மூவகை விரதங்களையும் உடைய இல்லறத்தார் எய்தும் பலன் யாதெனக் கூறு மிடத்து, மஹாவிரதமுடைய யதிகளின் பலனுக்குச் சிறிதளவு குறைந்ததாகும்.*

*அவ்விரதங்கள் அஹிம்ஸை முதலியனவாகும். விரிவு, 'யதியாசாரம்' என்னும் நூலிற் கண்டுகொள்க. ஈண்டுக் கூறிய இல்லறத்தார் ஐந்தாவது குணஸ்தானமுடையவர். ',இயல்பினுன் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான் முயல் வாருள் எல்லார்ந்தலை,' என்ற தேவர்வாக்கு ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. ('தலை' என்றது ஈண்டு 'முதல்' என்னும் பொருளது.)* 162

**எல்லா விரத மியல்பொக்கு மாயினும்**
**அல்லா விரத மனையா யவர்கட்குக்**
**கொல்லா விரதங் குடைமன்ன வாமெனின்**
**வெல்லா வகையில்லை வீங்கெழிற் றேரோய்.**

*'ஒற்றைக் குடையையும் வலிய அழகிய கைகளை யும் உடைய மன்னவரே, விரதம் மேற்கொள்ளாதா ராகிய நற்காட்சியுடைய சிராவகர் முன்னர்க் கூறிய பன்னிருவகை விரதங்களையும் பொருந்தி நிகழ்ந்தா லும் நிகழாவிட்டாலும் கொல்லாத விரதமுடைய, நற் காட்சி(யுடையோர்க்குக் கூறிய இலக்கணம் மட்டிலும்) அமையும் எனின், வினைகளை வென்று முத்தியடை வது திண்ணம்.*

இயல்பு என்பது உயிரின் இயல்பாகிய நற்காட்சியினை. 'எல்லா விரதம்' என்றது மேற்கூறிய பஞ்சாணு விரதம் முதலிய பன்னிரண்டினை. சூரியனுக்கு உஷ்ணமும் ஒளியும் இயல்பாய் உள்ளவைபோல, உயிர்களுக்குக் காட்சியும் தரிசனமும் இயல்பாகும் என்க. 'ஒக்குமாயினும்' என்பதிலுள்ள உம்மை 'சேர்தல், சேராமை' என்னும் இரண்டினையும் குறிக்கும். மேருமந்தர புராணம் 76-ஆம் கவியில், 'நற்காட்சியுடை விலங்கும் மானிடரும் வதஞ் செறிந்தும்' என்பதிலுள்ள உம்மை போன்றது. ஆதலின், அது ஈண்டு ஒப்பு நோக்கி அறியத் தக்கது. அல்லா விரதம் - விரதமல்லாதது: (சம்யமம் - விரதம். அசம்யமம் - விரதமல்லாதது.) மனையாயவர் - இல்லறத்தார். நற்காட்சி - சம்யக்த்வம், அல்லது 'சம்யக்தரிசனம்' என்று வழங்கும். சம்யக்த்வம் பொதுவாக மூன்றுவகைப்படும்; அவை, உபஸம சம்யக்த்வம், வேதக சம்யக்த்வம், க்ஷாயிக சம்யக்த்வம் என்பன. உபஸம சம்யக்த்வம் என்பது, ஐயமின்மை முதலிய எண்வகைக் குணங்களையுடையதும், ஐயம் (சந்தேகம்) முதலிய இருபத்தைந்து குற்றங்களின் நீங்கியதுமாகும். வேதகம் க்ஷாயிகம் என்பன மேருமந்தரத்தில் கண்டுகொள்க.

எண்வகைக் குணங்களாவன:—1. ஐயமின்மை - திருவறத்தில் ஐயமின்றித் தெளிதல், 2. அவாவின்மை - பற்றில்லாமை, 3. உவர்ப்பின்மை - (முனிவரிடத்து) அருவருப்பு இல்லாமை, 4. மயக்கம் இன்மை – மூடச் செயல் கண்டு மருள் கொள்ளாமை, 5. செய் பழி நீக்கல் - பெரியோரின் பழியை மறைத்தல், 6. திரிந்தாரை நிறுத்தல் - நீதியினின்றும் நழுவினவரை முன்போல நீதியில் நடக்கச் செய்தல், 7. அன்புடைமை - பெரியோரிடத்து மிக்க அன்புடைமை, 8. அறவிளக்கம் செய்தல் - திருவறத்தை உபதேசித்தல் (போதித்தல்) என்பனவாகும். இவற்றை வடநூலார்; 1. நிச்சங்கை, 2. நிர்க்காம்க்ஷை, 3. நிர்விசிகித்ஸை,

4. அமூடத்ரஷ்டித்வம்' 5. உபகூஹனம், 6. ஸ்திதிகரணம், 7. வாத்ஸல்யம், 8. மார்க்கப்ரபாவனை என்பர். ஈண்டுக்கூறிய எண் வகைக்குணங்கட்கும் எதிரிடையான ஐயம் முதலிய குற்றங்கள் எட்டு; 1. (தாயின் சம்பந்தமான) பிறப்பு, 2. குலம், 3. வல்லமை, 4. செல்வம், 5. சிறப்பு, 6. வடிவழகு, 7. தவம், 8. ஞானம் ஆகிய இவற்றால் பெரியோம் யாம் என்று பிறரை இகழும் கர்வம் எட்டு; 1. உலகமூடம், 2. தேவமூடம், 3. பாஷண்டிமூடம் (உலகமூடம் :—கடல் ஆறு முதலியவைகளில் நீராடுவதனால் புண்ணியம் பெறலாம் என்பதும், வேள்வியில் ஆடு முதலியன பலியிடுதல் முதலியனவுமாகும். தேவமூடம் :—கடவுள் தன்மையற்ற சிறு தெய்வங்களை வணங்குதல், தேவதைகள் நம்மை காப்பாற்றும் என்று நம்பிப் பிரார்த்தனை செய்தல், பிள்ளை வரம் வேண்டல் முதலியனவும் இதில் அடங்கும். பாஷண்டி மூடம் : —பஞ்சாக்கினி மத்தியில் நின்று தவம் செய்பவர் முதலாகிய பாஷண்டிகளிடமிருந்து நாம் நன்மைபெறலாம் என்று மயங்கி விரும்புதல் முதலியன ஆகிய மூடம் மூன்று, பொய் வேதம் முதலியவற்றிற்கு வணங்குதலாகிய தீய சேவை ஆறு ஆக இந்த (8+8+6+3=25) இருபத்தைந்தும் நற்காட்சியினை எய்துவோர்களுக்குக் குற்றமாகும். மற்றும் உபசமசம்யக்த்ரஷ்டி என்பவன், 25 குற்றங்களின் நீங்கி, மேற்கூறிய எண் குணங்களுடன், ஆப்தன், ஆகமம், (ஆகமத்துக் கூறப்படும் ஏழுவிதத்) தத்துவப் பொருள்கள் ஆகிய இவைகளில் நம்பிக்கையுள்ளவனும், உபஸமபரிணாம (பொறுமையு) முடையவனும், தர்மங்களில் பற்று உடையவனும், கருணையுடையவனும், மது (தேன்), மத்தியம் (கள்), மாம்ஸம் இவைகளைப் புசியாதவனும், மற்றும் பல சிறந்த குணங்களுடையவனுமாகும். ஆதலின், ஈண்டுக் கூறிய நற்காட்சியுடையவனையே 'கொல்லா விரதம் உடையவன்' என்றார் ஆசிரியர். ஆயினும், அவன் ஏனைய ஒழுக்கங்கள்

நிறையாதவனாதலின், அந்தப் பிறவியிலேயே முத்தியை யெய்தாது நின்று, சிறிது காலம் பிறவியில் சுழன்றபோதி லும் ஒரு காலத்து முத்தியை அடைவது திண்ணமாதலின், 'வெல்லா வகையில்லை' என்றார். கொல்லாத விரதம் உடை யவர் என்பது பொதுவாகச் சமணர்களைக் குறிக்கும் சொல். 'கொல்லாத விரதத்தார்தம் கடவுளர் கூட்ட மொத்தார்' என்றார் கம்பரும். ஈண்டு ஜாதிபேதம் வேண்டப் படுவதில்லை. என்னை எனில், 'பறையன் மகனெனினும் காட்சியுடையான் இறைவனென வுணரத்தகும்,' என்ப தாகலின் என்க.

மற்றும், ஈண்டுக் கூறிய நற்காட்சி முதலியவற்றின் சிறப்பினையும், அவற்றை உடையார் எய்தும் நன்மையினையும் விரிவாக அறிய வேண்டின், 'நவபதார்த்த ஸ்வரூபம்' ஒன்ப தாவது கவியிலும், மேரு மந்தர புராணம் 160-ஆம் பக்கம் முதலியவற்றிலும், 'யசோதரகாவியம்' முதற்சருக்கத்திலும், 'பதார்த்த சாரம்' சம்யம மார்க்கணாதிகாரம் முதலியவற்றிலும் பார்த்தும், குருமூலமாகக் கேட்டும், பவ்வியர்கள் அறிந்து கொள்ள முயற்சி செய்வார்களாக, ஈண்டுக் கூறிய சிராவகன் நான்காம் குணஸ்தானவர்த்தி அசம்யத சம்யக்த்ருஷ்டி எனப்படுவன்; விவரம் மேருமந்தர புராணம் பக்கம் 160ல் காண்க. 163

தம்மை யுடையவர் தாங்குந் தவத்தியல்
எம்மை வினவி னெமக்கு முரைப்பரிது
உம்மை யுலகத் தொளிபடு மூக்கமொடு
இம்மை யிகந்தார்க் கிசையு மதுவே.

'தம் உயிரின் இயற்கைக் குணங்களாகிய (கேவல ஞானம், கேவலதரிசனம் பெறுதற்குக் காரணமாகிய) நற்காட்சி நல்லறிவு உடையவர்கள், ஏற்று நிகழும் தவத்தின் இயல்பு எத்தகையதென வினவின், அது

எம் போல்வார்கட்கு உரைப்பது அரிதாகும். அந்தத் தவம் ஆன்ம சோதியை எய்தி முத்தியையடைய முயலும் ஊக்கத்துடன் இல்லறப்பற்றினைப் பற்றறத் துறந்தவர்களுக்கே இசைவதாகும். 164

**தவஞ்செய்து வந்தார் தவநிலை நிற்பார்**
**அவஞ்செய்து வந்தார்க் கரிது பெரிதும்**
**பவஞ்செய்து மாக்கள் பரியு மதுதான்**
**எவன்[1]செய்து மென்னை யீர்மலர்த் தாரோய்.**

'மதுச் சொரியும் மலர் மாலையணிந்த மன்னவரே, முற்பிறப்பில் நல்வினைக்குக் காரணமாகிய தவம் செய்து வந்தவர்களே அத்தவநிலையில் நிகழ்வார்கள். முன்னர்ப் பாவகாரியங்களைச் செய்து வந்தவர்களுக்கு அத்தவநிலையில் நிற்பது மிகவும் அருமையாகும்; விலங்கோடொத்த அறிவிலா மக்கள், பாவத்திற்குக் காரணமான பிறவியைப் பெருகச்செய்து வருந்துவார் கள்; அப்பாவம் தளராது நிற்க எந்த நற்காரியம் செய்துதான் என்ன பயன்?

'தவமும் தவமுடையார்க்காகும்; அவமதனை அஃதி லார் மேற்கொள்வது,' எனறூர் தேவரும். இனி, பவம் செய்து என்பதற்கு பிறவிக்குக் காரணமான (பவத் தொடர்பு) பிற வித் தொடர்பு எனினுமாம்.

"அவஞ்செய்கின் றேனென்
றறிகின்ற தேயில்லை அந்தமில்லாச்
சிவஞ்சொல்கின் றனெங்கள்
தீர்த்தபி ரான்றிரு வாய்மொழிந்த
தவஞ்செய்கின் றயில்லை
தானஞ்செய் தர்யில்லை நீநடுவே
எவன்செய்கின் றய்இந்த்ரியம்
சொன்ன வாசெய்யு மென்னெஞ்சமே."

என்னும் திருநூற்றந்தாதிச் செய்யுள் ஈண்டு ஒப்புநோக்கி அறிதற் பாலது. 165

(பா - பே) 1. 'செய்து மெனை.'

தெருண்டவர் மேற்கொளுஞ் செய்தவச் செல்வம்
இரண்டும் பலவு மியலாய்ப் பெருகும்
மருண்டினி யென்னவை வந்த பொழுதே
[1]முரண்தரு தோண்மன்ன முற்ற வுணர்நீ.

' நூல்களைத் தெளிந்தவர் மேற்கொண்டு செய்யும் தவச் செல்வம், உடல் சம்பந்தமாகிய (பாஹ்ய) தவம் எனவும், உயிர் சம்பந்தமாகிய (ஆப்யந்தர) தவம் எனவும் இரண்டு விதமாகவும், அவ்விரண்டின் உட்பிரிவினால் பன்னிரண்டு விதமாகவும் இயல்பினால் பெருகும்; வல்லமை தங்கிய கைகளையுடைய மன்னவரே, அத்தவத்தின் பேதங்களைக்குறித்து நீர் மருள்வது ஏன்? அவை நிகழுமாறு வந்த காலத்து நீரே முற்ற உணர்வீர்.

பாஹ்யதவம் ஆறு, ஆப்யந்தரதவம் ஆறு ஆகத் தவம் பன்னிரண்டாகும். பாஹ்யதவத்தின் பிரிவும் அவற்றின் விவரங்களும் வருமாறு: 1. அனசனம்:—வினைகளும் வேட்கையும் விலகுவதற்கும், பொறிகளும் மனமும் வசப்படுவதற்கும், கொல்லாமையும் தியானமும் மிகுவதற்கும் காரணமாக நால்வகை உணவையும் துறப்பது, 2. ஆவமோதர்யம்:—உணவு மிஞ்சினால் ஐம்பொறி மிகும்; உணவு இன்றேல் உடல் நெகிழும்; ஆதலின், சிறிது சிறிதாக உணவு சுருக்கப்படுகுதல். 3. விருந்தி பரிசங்யானம்:—முனிவர் உணவு ஏற்கச் செல்லும்போது அவ்வுணவின்மேல் ஏற்படும் பற்று ஒழிவதற்காக, ' இன்றைக்கு இத்தனை தெருவிற்கு மேலும், இத்தனை வீட்டிற்கு மேலும் செல்வதில்லை,' என்றும், ' இன்று இத்தனை வஸ்துக்களுக்கு மேல் புசிப்பதில்லை,' என்றும், ' இத்தனை நாழிகைக்கு மேல் உணவு கிடைத்தால் உண்ணுவதில்லை ' என்றும், விதிக்கப்பட்ட நெறி

---

பா - பே. 1. ' முரண்டகு '

யினை அனுஷ்டித்தலாகிய * நியமவிரதம் ஏற்றுச் செல்லு தல் 4. இரசபரித்யாகம் :—சுக்கிலமும் பொறிகளும் விருத்தி யாவதற்குக் காரணமான நெய் எண்ணெய் முதலிய இரச வஸ்துக்களைப் புசியாது துறத்தல். 5. விவிக்தசய்யா சனம் :—தியானத்திற்குச் செல்லவொட்டாது தடுத்துக் காதலை விளைவிக்கும் மகளிர் முதலியோர் இல்லாதவிடத்துத் தனித்து வசித்தல். 6. காயக்லேசம் :—பனி, மாரி, கோடை, ஆகிய மூன்று காலங்களிலும் நிகழவேண்டிய முறைப்படி தவஞ்செய்து உடலைச் சுருங்கச் செய்தல்.

இனி, ஆப்யந்தரதவத்தின் பிரிவும் அவற்றின் விவரங்களும் : 1. பிராயச்சித்தம் :—(கழுவாய்) தம்மையறியாது நிகழ்ந்த குற்றங்களைப் பரிகரித்தல். 2. விநயம் :—நற்காட்சி முதலிய மும்மணிகளிடத்திலும், அவற்றை உடையாரிடத்திலும் வணக்கமாயிருத்தல். 3. வையாப்ருத்யம் :—இல்லறத்தார் துறவிகள் முதலானவர்களுக்கு நேர்ந்த நோய் முதலியவற்றைப் பரிகரித்தல். 4. ஸ்வாத்யாயம் :—வினைகள் விலகுவதற்குக் காரணமான நூல்களில் பழகுவதும், உபதேசிப்பதுமாகும் 5. வ்யுத்ஸர்க்கம் :—அகப்பற்று, புறப்பற்றுக்களை விடுதல். 6. தியானம் :—ஆர்த்தத்யானம், ரௌத்திரத்யானம் என்னும் இரண்டையும் விலக்கி, தர்மத்யானம் சுக்லத்யானம் என்னும் இரண்டிலும் பழகுதல், இவற்றை இன்னும் விரிவாக அறியவேண்டின், மேருமந்தர புராணம் 423-ஆம் செய்யுள் முதல் 434-ஆம் செய்யுள் வரை பார்க்க. 166

---

* விரதங்கள், இயமம், நியமம் என இருவகைப்படும். அவற்றுள் இயமம் காலவரையின்றி ஆயுள் உள்ளளவும் ஏற்று நிகழ்வது ; நியமம், குறித்த காலம் வரையிற் பொருந்தியிருப்பது. 'இயமங்கள் காலவரையறையில்லை, நியமங்களல்லாவதம்' (அருங்கலச் செப்பு. 102) என்பதறிக. யசோதரகாவியம் 31-ஆம் பக்கம் பார்க்க.

உலகங்கண் மூன்று முடைய பெருமாற்(கு)
அலகையில் பூசனை யாற்ற முயன்றால்
திலக மிவரெனத் தேவர்க ளாவர்
விலகுஞ் சுடரொளி வீங்கெழிற் றோளாய்.

'குறுக்காகச் சுடர்விட்டொளிரும் அழகிய ஆபரணம் அணிந்த தோள்களுடையவரே, அறவாழியால் மூவுலகும் ஆட்சி புரியும் பெருமானுக்கு அஷ்டவித அர்ச்சனாதிரவியங்களினால் அருச்சித்தல் முதலியன பூசை என்பதாகும்; அங்ஙனம் பூசை செய்தவர் மனோகரமான உத்தமதேவர் ஆவர் என்றுணர்க.

ஞான வழிபாடும், உத்ஸவாதிகளும், பிறவும் உளவாதலின், 'அலகையில் பூசனை' என்றார். ஈண்டு,

'ஓவாதி ரண்டுவவும் அட்டமியும்
பட்டினிவிட் டொழுக்கங் காத்தல்
தாவாத தவமென்றார் தண்மதிபோல்
முக்குடைக்கீழ்த் தாதை பாதம்
பூவே புகைசாந்தம் சுண்ணம்
விளக்கிவற்றால் புனைதல் நாளும்
ஏவா விவைபிறவும் பூசனையென்
றீண்டியநூல் கரைகண் டாரே.'

என்ற சிந்தாமணிச் (1547-ஆம்) செய்யுள் ஒப்பு நோக்கி அறிதற்பாலது. 167

புண்ணிய வாயி லெனநாம் புகழ்ந்துரை
கண்ணிய நான்கா யடங்கினுங் காவல
நுண்ணிய நூல்வழி நோக்கி நுனித்தவர்
எண்ணிய வாயில்க ளின்னு முளவே.

'காவலரே, இதுவரை நாம், புண்ணியம் வரும் வழி, சீலம் தானம் தவம் பூசை என நால்வகையாகத் தொகுத்துக் கூறிய போதிலும், நூலின் வழியே நுழைந்து நுட்பமாக ஆராய்வோர் ஆராய்ந்து நிகழும்

புண்ணியம் வரும் வழிகள் இன்னும் சிலவுள என்றனர். 168

[1]அருளுந் தெருளுங் குணத்தின்க ணார்வமும்
பொருளொன்று சேரும் புகழ்ச்சி நிகழ்வு
மருளில் தவமும் வாலிய ஞானமும்
இருளறு தியான நிகழ்வுமென் றேழே.

அவை, 'அருள், தெளிவு, ஆர்வம், அழகிய நிகழ்ச்சி, தவம், தூயஞானம், இருளறும் தியானத்தில் நிகழ்தல்' என ஏழாகும்.

தம் உயிரிடத்துப் பற்றும் புகழ்ச்சி தரும் நிகழ்ச்சி, வால் இயல்ஞானம் - தூய இயற்கையான ஞானம். கேவல ஞானத்திற்குக் காரணமான ஞானம்

" கற்றதனாலாயபய னென்கொல் 'வாலறிவன்'
நற்றாள் தொழாஅரெனின்."

என்றார் தேவரும். மயக்கமில்லாத தவம், இருளறு தியானம். எனவே ஆர்த்த ரௌத்ர த்யானம் நீங்கலாகக் கூறியவாறு. 169

அவ்வேழனையும் ஏழுகவிகளில் தனித்தனி கூறுவாராய் ஈண்டு அருளினது இயல்பு கூறுகின்றார் :

ஆருயிர் யாதொன் றிடருறு மாங்கதற்
கோருயிர் போல வுருகி யுயக்கொள்ள
நேரி னதுமுடி யாதெனி னெஞ்சகத்
தீர முடைமை யருளி னியல்பே.

'உலகின்கண் நிறைந்தவுயிர்கள் துன்பமடையுங் காலத்து, அவ்விடர் தமக்கெய்தியது போலக் கருதி உளங்கரைந்து அவ்வுயிர்கள் உய்யுமாறு அத்துன்பங்களை நீக்குதல் தமக்கு நேருமாயின் அது (அனுகம்பை என்னும்) அருளினது இயல்பாகும்; அங்ஙனம் அத்

(பா - பே.) 1. 'அருளுந் தெளிவுங்'

துன்பங்களைத் தம்மால் நீக்க இயலாத போது தம் நெஞ்சகத்தே (அத்துன்பம் நீக்கக்) கருதும் கருணையுடைமையும் அருளினது இயல்பாகும்.

'அருளினியல்பு' என்பது இரண்டிடத்தும் கூட்டப் பட்டது. துக்க ப்ரதீகார (பரிஹார)மாகிற கருணை அனுகம்பை எனப்படும். ஏனைய தயை, கிருபை, கருணை முதலியவற்றிற்கு அந்த நியமம் இல்லை. இதனை, 'பஞ்சாஸ்திகாயம்' 144-ஆம் காதையில் விவரமாக அறியலாகும். இதன் கருத்து என்னவெனில், தண்ணீர் தாகமுடையவன், பசியுடையவன், மற்றும் சில துக்கமுடையவன் ஆகியவர்களைக் கண்டு, அந்தத் துன்பங்கள் தாம் எய்தியது போல வருந்தி, அவர்களை அன்புடன் ஏற்று, அந்தத் துக்கங்களுக்குப் பரிகாரம் செய்தல் அனுகம்பையாகும். அங்ஙனம் தம்மால் இயலாதபோது மனத்தில் மட்டிலும் ஈரமுடைமை கருணையென்பதாகும். 170

வையினும் வாழ்த்தினும் வாளா விருப்பினும்
வெய்ய முனிதல் குளிர்தல் வெறுப்பொடு
மையன்மும் மூடப் பகுதி மயக்கின்மை
செய்ய மனத்தோர் தெருளின் றிறமே.

'ஒருவர் தன்னை வைதாலும், வாழ்த்தினாலும், (இவையிரண்டுமன்றி) வாளாவிருந்தாலும், முறையே அவர்களை முனிதலும், மகிழ்தலும், வெறுத்தலுமின்றி மயக்கம் தரும் மும்மூடப் பகுதியில் மயங்காத செவ்விய உள்ளமுடையோர் திறம் தெளிவு என்பதாகும்.

வெய்ய - வெதுப்பமாக. மையல் - மயக்கம், மோகநீய கர்மத்தினால் ஏற்படுவது. 'மையல்மும் மூடப்பகுதி மயக்கின்மை' என்பது, நற்காட்சியுடையாரைக் குறிக்கும் 163-ஆம் கவியின் உரையில் காண்க. தெளிவு - காட்சி. 'தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்,' என்பர் திருத்தக்க தேவரும். 171

அறிவ ரடிமுத லார்வம் பெருக்கல்
உறுவ ரொழுக்க முவத்தன் முதலா
இறுதியில் பல்குண நோக்கமென் றின்ன
செறிதலி லார்வங்கள் செல்வந் தருமே.

'அருகர், சித்தர், சாதுக்கள், திருவறம் ஆகிய நான்கு இடத்தும்பக்திசெய்தல், முனிவர் ஒழுக்கத்தினை விரும்பி நிகழ்தல் முதலாகப் பல சிறந்த நற்குணங்கள் மேற்கொள்ளல் என்ற இவை (குணானுராகம் என்னும்) ஆர்வம் எனப்படும்; இது ஞானச் செல்வத்தை நல்கும்.

காதி வினை மட்டும் நீங்கிய அருகர், காதி அகாதியாகிய இருவினையும்வென்று எண் குணமெய்திய சித்தர், அவ்வினை நீங்குவதற்குக் காரணமாகிய தவம் முதலியன சாதிப்பவராகிய சாதுக்கள், ('குழு' என்றார் சிந்தாமணியாரும் கவி 3ல்) அருகன் உரைத்தருளிய 'திவ்யத்வனி' என்னும் திருமொழி ஆகிய இந்நான்கிடத்தும் இரட்சணையாகப் பொருந்துவேன் என்னும் பொருள்பட வடநூலார், 'அரஹந்தே சரணம் பவ்வஜ்ஜாமி, சித்தே சரணம் பவ்வஜ்ஜாமி, சாஹூசரணம் பவ்வஜ்ஜாமி, கேவலி பண்ணத்தே தம்மோ சரணம் பவ்வஜ்ஜாமி' என்பர். ஆசார்யர், உபாத்தியாயர், சர்வ சாதுக்கள் ஆகிய மூவரையும் சாதுக்கள் என்று கூறுவது மரபு. அருகர் சித்தர் முதலியோர் குணங்களை யசோதரகாவியம் 53-ஆம் கவி முதல் 57-ஆம் கவி வரையில் கூறியிருப்பதனால் அங்குக் கண்டுகொள்க. இனி, 'செறிதலில்' என்பது 'வினைகள் சேராத' என்றுமாம். 172

ஆற்றல் வகையா லருந்தவ மேற்கொண்டு
நோற்று நுனித்த லொழுக்கந் தலைநிற்றல்
போற்றி யுரைத்தல் புகழ்ச்சி நிகழ்விஃது
ஏற்று மிருவிசும் பீர்மலர்த் தாரோய்.

'வேந்தரே, தன் சத்திக்குத் தக்கவாறு தவம் மேற்கொண்டு நோற்று, நூலாராய்ந்து, ஒழுக்கத்தில் சிறந்து நின்று, உயிர்களைப் பாதுகாத்து, அறமொழி புகன்று கீர்த்திபெறுதல், அழகிய நிகழ்ச்சியாகும்; இது தேவ இன்பம் முதலியவற்றை அளிக்கும்.

" ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்."

என்பர் தேவரும். ஈண்டு, 'ஆற்றல் வகையால் அருந்தவம் மேற்கொண்டு' என்பதனோடு, 'சக்திதஸ்த்யாகம் சக்திதஸ் தபஸ்' என்னும் தத்துவார்த்த சூத்திரத்தில் கூறியது ஒப்பு நோக்கியறியும் பகுதியுடையது. தவம் ஏற்று நிகழ்தல் அருமையாதலின், 'அருந்தவம்' என்றார். விசும்பு - வானுலகம். 173

அற்ற துவர்ப்பின ராகு மருநிலை
உற்றவர்க் கிவ்வா றொழுக்கந் தலைநிற்றல்
நற்றவ மென்றிங்கு நாங்கண் மொழிந்தது
மற்றிது வானுல காள்விக்கு மன்றே.

'மன்னரே, நகைப்பு, விருப்பு, வெறுப்பு, சோகம், அச்சம், அருவருப்பு என்னும் அறுவகைத் துவர்ப்பு அற்ற அரிய நிலையை அடைந்து, ஒழுக்கத்தில் தலைசிறந்து ஒழுகல் நற்றவம் என்று யாம் கூறியது; இது வானுலக ஆட்சியும் தரும்.

துவர்ப்பு அறுவகை யென்பதனை முக்திச் சருக்கத்தில் கண்டு தெளிக. 174

நூற்பொருள் கேட்டு நுனித்தோ ருணர்வது
மாற்படை கூட்டு மயங்கிருள் தீர்ப்பது
மேற்படை மெய்ம்மை விளக்கும் விளக்கது
நாற்படை யோய்நல்ல ஞான நிகழ்வே.

'நாற்படையுடையீர், அருகன் அருளிய நூல் பொருளை ஞானிகளிடம் கேட்டு ஆராய்ந்து நுட்பமாய் உணர்த்துவதும், உண்மையை அறியவியலாது மயக்கும் மித்யாஞானத்தில் கூட்டுவிக்கும் மயக்க இருளை நீக்குவதும், தன்மேல் படையெடுத்துவரும் ஊழின் உண்மையை விலக்குவதும், ஆன்ம ஜோதியைப் பிரகாசிக்கச் செய்வதும் ஆகிய அது ஞான நிகழ்ச்சி யெனப்படும்.

மால் படை - மயக்கம் தரும் படை, வினைப்பகையாம் படை, இனி, மேற்படை 'தர்மத்தியானம்' எனினுமாம். 175

சென்று பெருகுந் தியான நிகழ்ச்சியும்
ஒன்ற வுரைப்பி னொருநால் வகைப்படும்
நன்றியின் [1]மாற்றினைத் தருமிரண் டல்லவை
வென்றி விசும்பொடு வீடுந் தருமே.

'தியான நிகழ்ச்சியின் வகை, நூல்களில் பலவித மாகக் கூறியபோதிலும், பொதுவாக(ப் பொருந்த)க் கூறுமிடத்து, ஆர்த்தம், ரௌத்ரம், தர்மம், சுக்கிலம் என நான்கு வகை ஆகும். அவற்றுள், முதலிரண் டும் நன்மையற்ற பிறவிச் சுழற்சியினைத் தரும்; ஏனைய இரண்டும் தேவருலகத்தையும் வீடுபேற்றையும் தரும்.

தர்ம த்யானம் தேவ பதவியை எய்தச்செய்து, பின்னர் முக்தியையளிக்கும்; சுக்ல த்யானம் அதே பவத்தில் முத்தியை எய்தச் செய்யும் என்க. இந்தத் தியானங்களுள் ஒவ்வொன்றும் நன்னான்கு வகையாகப் பிரியுமாதலின், 'பெருகும்' என்றார். அவை வருமாறு: ஆர்த்த த்யானம் நான்கு வகை. அவை :—1. இஷ்ட வியோகம் - தனக்கு இஷ்டமான மனைவி, மனை முதலியவை கேடடையுங் காலத்து ஏற்படும் இடைவிடாத துன்பம், 2. அனிஷ்ட சம்யோகம் -

(பா - பே.) 1. 'மாற்றுத் தருமிரண் டல்லவை'

தனக்கு இஷ்டமில்லாத மனைவி, மனை முதலியன வாய்க்கு மிடத்து ஏற்படும் இடைவிடாத துன்பம், 3. லாபஜம் - லாபம் வரவில்லையே என்று சதாகாலமும் கருதி வருந்துதல், 4. ரோகஜம் - ரோகம் வந்துவிட்டதே என்று சதாவருந்துதல் என்பனவாம். இந்நான்கனுள் ஏதாவது ஒன்றில் இரண்டு நாழி பரிணமிக்குமிடத்து அது மறுமையில் விலங்குகதியில் சேர்ப்பிக்கும்.

ரௌத்ர த்யானம் நான்கு வகை. அவை:—1. ஹிம்ஸானந்தம் - உயிர்களை வதைத்தலில் ஏற்படும் மகிழ்ச்சி, 2. ம்ருஷானந்தம் - பொய்யுரைத்தலில் ஏற்படும் மகிழ்ச்சி, 3. ஸ்தேயானந்தம் - பிறர் உடைமைகளைத் திருடுவதில் ஏற்படும் மகிழ்ச்சி. 4. சம்ரக்ஷணானந்தம் - 'பெண்டு பிள்ளை முதலியவர்களை யானே காப்பாற்றுகிறேன்; யான் இல்லையேல் இவர்களைப் பிறர் இரட்சணை செய்ய இயலாது' என்று எண்ணும் மகிழ்ச்சி என்பனவாம். இந்நான்கு மகிழ்ச்சிகளுக்கும் விக்கினம் ஏற்படுமிடத்து ரௌத்திரம் உண்டாவதனால் ரௌத்ர த்யானம் எனப் பெயர் பெறும். இந்த நான்கினுள்ளும் ஏதாவதொன்றில் இரண்டு நாழிகை பரிணமிக்குமிடத்து அது நரககதியில் சேர்ப்பிக்கும்.

தர்ம த்யானம் நான்கு வகைப்படும். அவை:—1. ஆக்ஞா விசயம் - இறைவன் கூறிய அறமொழிகளை விசாரித்து அறிதல், 2. அபாய விசயம் - பிறவியின் அபாயங்களை விசாரித்து அறிதல், 3. விபாக விசயம் - 148 கர்மங்களின் அனுபாகம் முதலியவற்றை விசாரித்தறிதல், 4. சம்ஸ்தான விசயம் - மூவுலகங்களிலும் உத்தமர் பிறக்குமிடம் எவ்வெவ்விடங்களில் உள்ளதென விசாரித்தறிதல் என்பன. இவை தேவகதியில் சேர்ப்பிக்கும்.

சுக்ல த்யானம் நான்கு வகைப்படும். அவை:—1. ப்ருதக்த்வ விதர்க்க வீசாரம் - உயிர் உடல் வினை முதலியன வேறு வேறு தன்மையன என்று நன்றாகத் தர்க்கித்து அறிந்து நிகழ்தல்,

2. ஏகத்வ விதர்க்க விசாரம் - ஆன்ம ஸ்வரூபத்தை மட்டும் த்யானிப்பது. (இவையிரண்டும் காதி வினையை விலக்கும் தன்மையன.) 3. ஸூக்ஷ்மக்ரியா ப்ரதிபாதி - கந்தகுடி முதலிய விபூதிகளை நீக்கி, தனியவராகிய பின், மன வசன காய மென்னும் யோகங்கள் சூக்ஷ்மமாதல், 4. வ்யுபரத க்ரியா நிவ் ருத்தி - அகாதி வினையையும் வென்று முத்தியடைதல். ஈண்டுக் கூறிய சுக்ல த்யானம் நான்கனுள் சூக்ஷ்ம க்ரியா ப்ரதிபாதி, வ்யுபரத க்ரியா நிவ்ருத்தி என்னும் இரண்டும் உபசாரத்தால் கூறப்படும். அதாவது, காதி வினையின் பிரிவாகிய மோகனீயத்தை வென்ற அருகன் (இனி,) தியானிக்கவேண்டிய பிரமேயம் நிச்சயமாய் இல்லை. அகாதி வினை (கட்டுதற்கு இயலாத) வெந்த வைக்கோற்புரி போன்றது ஆதலின், மாற்று எனபதனை மேரு மந்தர புராணம் முதலியவற்றுள்ளும் கூறியவற்றாலுணர்க. 176

போற்றிய புண்ணியப் பொற்சுண்ண முன்புகழ்
வாற்றி [1]முயல்வார்க் ககநிகழ் வாமவை
மாற்றி யவற்றை மறுதலை யாக்கொளிற்
பாற்றி யுழப்பிக்கும் பாக நிகழ்வே.

'உலகோர் புகழும் புண்ணிய அணுத்திரள் உயிருடன் சேர்வதற்குக் காரணமான, மேற்கூறிய அருள் முதலிய ஏழனையும் தம் சத்திக்குத் தக்கவாறு ஆற்ற முயல்வார்க்கு அவ்வேழும் உள்ளத்தில் நிகழும் பரிணமமேயாகும். அவ்வேழுவிதத்திற்கு மாறாக (எதிரிடையாக) அருளின்மை, தெருளின்மை, ஆர்வமின்மை, அழகிய நிகழ்ச்சியின்மை, தவமின்மை, ஞானமின்மை, தியானமின்மை ஆகிய ஏழு வித எண்ணங்களில் முயன்று நிகழ்பவர் தீவினைகளின்

(பா - பே.) 1. 'முயல்வாரகத்த'

பாகம் சேர்ந்து நரகதிர்யக்குக் கதிகளிலே ஓடி உழல்வர்.

'அறத்தினூஉங் காக்கமு மில்லை அதனை
மறந்தலி னூஉங்கில்லைக் கேடு'

என்றார் தேவரும். பாற்றுதல் - நீக்குதல்; கெடுத்தல். பாகம் - அனுபாகமுமாம். 177

காட்சி யெனும்பெயர்க் கதிர்விளக் கேற்றிய
மாட்சி யுடையார் வதமில ராயினு
மாட்சி கரிதன் றமருல கல்லது
மீட்சியில் பேரின்ப வெள்ளத் துழவே.

'நற்காட்சி யென்னும் சம்யக் தரிசனமாகிய ஜோதியைப் பெற்ற பெருமையுடையார் விரதம் ஏற்று நிகழாதவராயினும், அவர்களை அந்நற்காட்சி, தீய கதிகளில் செலுத்தாமல் உத்தம தேவராக்குவது மன்றி, முடிவில் திரும்பி வாராமையாகிய அனந்த சுகத்திற்கும் காரணமாகிய முக்தியையும் அடைவிக்கும்.

'இவ்விவரம் 161-ஆங் கவியிலும் 163-ஆம் கவியிலும் முன்னர்க் கூறியிருப்பதறிக. 178

மெய்ப்பொரு டேறுதல் காட்சி விளக்கது
செப்படு மாயின் வினையெனுந் தீயிருள்
அப்படி மானு நிலையன் றதனை நின்
கைப்பொரு ளாக்கொள் கதிர்மணிப் பூணோய்.

'பயாபதி வேந்தரே, ஆகமத்துக் கூறும் தத்துவங்களின் உண்மைப் பொருள்களைத் தெளிந்து நம்புதல் நற்காட்சியின் ஒளியாகும். ஆத்துமனிடம் அவ்வொளி செவ்விதாக அமையுமாயின், தீவினை யென்னும் துன்பந்தரும் இருள் பொருந்துகின்ற நிலையின்றி மறையும். அந்நற்காட்சியினையே நீர் நும்

கைப்பொருளாகக் கொள்வீராக,' என்று பிஹிதாஸ்ரவர் கூறினரென்க.

'உள்பொரு ளிதுவென வுணர்தல் ஞானமாம் ;
தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்.'

என்பர் சிந்தாமணியாரும்.

'மெய்ப்பொருள் தேறுதல் நற்காட்சி யென்றுரைப்பர்
எப்பொருளுங் கண்டுணர்ந்தார்'

என்பர் ஆசிரியர்.

பொருள்கள் அறு வகை : அவை, உயிர், புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாசம், காலம் என்பன. (சூளா. துறவு. 66 உரை) இந்த ஆறு பொருள்களும் (வடநூலில்) 'ஷட்திரவியம்' என்றும், கடைசியிலுள்ள காலம் நீங்கலாக ஏனைய ஐந்தையும் 'பஞ்சாஸ்திகாயம்' என்றும் கூறப்படும். (அஸ்திகாயம் - முக்காலத்தும் அழியாவியல்புள்ளதும் பிரதேசத்தால் பரம்பியுள்ளதுமாகும்.) இந்த ஆறு பொருள்கள் உள்ள இடமே உலகம் என்னும் பெயர் பெறும். இந்த ஆறு பொருள்களும் அறியுந்தன்மையுள்ளது, அறியுந் தன்மை அல்லாதது என்ற பிரிவினல் இரண்டு தத்துவமாகும். அதாவது, (அறியுந்தன்மையுள்ள) உயிர்:—1. ஜீவதத்வமென்றும், (அறியுந்தன்மையல்லாத) புத்கலம் முதலிய ஏனைய ஐந்தும் 2. அஜீவதத்வம் என்றும் கூறப்படும். பொருள்கள், மலரின் மணமும், மணியின் ஒளியும் போலப் பிரிக்கவியலாத இயற்கைக் குணங்களையும் அவற்ரேடு கூடி நிகழும் நிகழ்ச்சிகளையும் உடையவாகலின், அவை தத்துவங்கள் எனப்பட்டன. பொருள்களின் உண்மைத்தன்மையும் ஒன்றன் பரிணிதியும் தத்துவம் எனப்படும். இதனை, 'வஸ்துக்களின் யாதாத்ம்யம் தத்வம்', 'தஸ்ய பாவம் த்த்துவம்' என்று பதார்த்த சாரம் கூறுவதனுலறியலாகும். இந்த இரண்டு தத்துவங்களும் சேர்தல் பிரிதல் காரணமாக ஏனைய ஐந்து தத்துவங்கள் ஏற்படுகின்றன.

அதாவது (ஆஸ்ரவம், பந்தம் என்னும்) ஊற்று, கட்டு ஆகிய இரண்டும் சேர்தல் காரணமாகவும், (சம்வரை, நிர்ஜ்ஜரை, மோக்ஷம் என்னும்) செறிப்பு, உதிர்ப்பு, வீடு ஆகிய மூன்றும் பிரிதல் காரணமாகவும் ஏற்படுகின்றன. அவை வருமாறு :—3. ஊற்று - வினைகள், உயிருடன் சேரவரும் வாயில், 4. கட்டு - வினைகள், உயிருடன் சேர்ந்து பிணிப்பன, 5. செறிப்பு - வினைகள் உயிருடன் சேரவரும் வாயிலைத் தடுப்பது, 6. உதிர்ப்பு - உயிருடன் முன்னரே சேர்ந்து பிணித்துள்ள வினைகளைச் சிறிது சிறிதாக நீக்குவது (கழிப்பது), வீடு - காதி அகாதி யென்னும் இரு வினைகளினின்றும் உயிர் நீங்கி எய்தும் நிலையான கைவல்யம். இந்தத் தத்துவங்களைத் தெளிந்துணர்வதும் மற்றும் பிறவும் நற்காட்சி எய்துவோர்க்குச் சாதகமாதலின், 'மெய்ப் பொருள் தேறுதல் காட்சி விளக்கு' என்றார். 179

தெய்வ மனித ரவரைத் தெளிவுறின்
ஐய விசயனு மாழி வலவனும்
எய்த விவர்முத லீரொன்ப தின்மரிவ்
வைய மருள வருந ருளரே.

'இனி, திவ்விய மனிதர் யாவரெனத் தெளிந்தறியுமிடத்து, உம் புத்திரர்களுள் ஐயனாகிய விஜய பலதேவனும், ஆழி ஏந்திய திவிட்ட நம்பியும் என்ற இவர் முதல் பதினெண்மர் இவ்வையகத்திலுள்ளார் மருளுமாறு தோன்றி வருவர்.

'வையம் அருளுமாறு வருநர்' என பிரித்துரைப்பினுமாம். பதினெண்மர், 9 பலதேவரும் 9 வாசுதேவரும். 180

ஆழி யிழந்த வயகண்ட னுதியாப்
பாழி வலவர் பகைவர்மும் மூவரும்
வீழ வுரைத்தேன் வியன்பெரு ஞாலத்துள்
ஊழிதொ றாழி யுலப்பில கண்டாய்.

'வெற்றியால் பெருமையுற்ற திவிட்டனைப் பகைத்து ஆழியிழந்த அஸ்வக்ரீவன் முதலாக ஒன்பது பிரதிவாசு தேவர்களும் இங்ஙனே ஊழ்முறையாக வீழ்வார்கள். பெருமை தங்கிய இப்பூவுலகத்து இந்தத் தெய்வ மனிதர்களைப் போலவே ஒவ்வோர் ஊழி காலத்துக்கும் தவறாது இருபத்தெழுவர் பிறந்து இன்புறுவர்.

ஆழியை வாசுதேவனிடம் இழந்தவன். ஊழி ஊழி - உத்ஸர்ப்பிணி, அவசர்ப்பிணி. அஸ்வக்ரீவன் முதலியோர் தீய கதியைச் சார்ந்த போதிலும், தெய்வ மனிதர்களே. என்னையெனின், 9 வாசுதேவர், 9 பலதேவர், 9 பிரதி வாசு தேவர், 12 சக்கரவர்த்திகள், 24 தீர்த்தங்கரர்கள் ஆகிய 63 பேர்களும் 'த்ரிஷஷ்டி சலாகா புருஷர்' என்று கொண்டாடப் படுதலால் என்க. சலாகா புருஷர் - சிலாக்கிய புருஷர். இந்த அறுபத்து மூவரிலும் முத்தியை எய்தியவர் போக, ஏனையோர்களும் முத்தியை எய்துவது நிச்சயம் என்று பரமாகமம் முறையிடும். 181

தேய வினைவெல்லுந் தெய்வ மனிதருள்
நீயு மொருவனை நின்குலத் தாதிக்கட்
பாய விழுச்சீர்ப் பரதனை யுள்ளுறுத்
தாய திகிரி யவரு மவ்வரே.

'வினைதேய வெல்லும் திவ்விய மனிதருள் நீரும் ஒருவர்; நும் குலத்து ஆதிபகவன் காலத்திருந்த சிறந்த புகழ் பரவிய பரத சக்கரவர்த்தி முதலாகிய பன்னிருவர் சக்கரவர்த்திகளும் திவ்விய மனிதர்களே.

தெய்வ மனிதர் - முத்தியை எய்தும் பக்குவமுடைய மனிதர். சக்கர இரத்தினத்தின் உதவியினால் ஆறு கண்டங்களையும் ஆட்சி புரிதலின் சக்கரவர்த்திகள் எனப் பட்டனர். 182

தீர்த்தஞ் சிறக்குந் திருமறு மார்பரும்
பேர்த்துப் பிறவாப் பெருமை பெறுநரும்
ஓர்த்திவ் வுலகினு ளுத்தமர் மற்றவர்
தார்த்தங்கு மார்ப தவத்தின் வருவார்.

'மாலை தங்கிய மார்பரே, தர்ம தீர்த்தத்தினைச் சிறப்பாக அளிக்கும் மார்பு முதலிய அவயவங்களில் மறு முதலிய ஆயிரத்தெட்டு இலட்சணமமைந்த இருபத்துநான்கு தீர்த்தங்கரர்களும், மீண்டும் பிறவியில் தோன்றாத முத்தியை எய்தும் இதர கேவலிகளும், ஆராயுமிடத்து இவ்வுலகினுள் உத்தமர்களாவார்கள்; இவர்களெல்லாம் பூர்வத்தில் செய்த தவத்தின் மகிமையினால் வந்து பிறப்பவர்களாவார்கள்.

*தீர்த்தம் - தர்மதீர்த்தம்; திருமொழி.* (ப்ரவசனசாரம் 1-வது காதை உரை பார்க்க.) 183

தக்கமிகு தானமுத லாயதலை நிற்கு
மக்களிவ ராவர்மத யானைமற வேலோய்!
புக்கவரு ளேபடுவர் போகநிலஞ் சார்ந்தார்
ஒக்கவவர் தன்மையு முரைக்கவுல வாவே.

'மதயானையும், பாவத் தொழில் புரியும் வேலாயுதமும் உடைய மன்னவரே, அருள்நிறைந்த உள்ளமுடையவராய், மறுமையில் போக பூமியில் சேர்ந்து பிறந்தார் யாவரெனின், நால்வகைத் தானங்களில் சிறந்த (உணவாகிய) ஆஹாரதானம் கொடுத்து ஏனைய குணங்களிலும் தலைசிறந்து நிற்கும் மாந்தர்களேயாவார்கள். அவர்கள் தன்மை முழுவதும் (ஒருங்கே) கூற இயலாதென்க.

*போக பூமி - ஹைமவதம் முதலிய க்ஷேத்திரம். 133-ஆம் கவி உரை காண்க.* 184

-த்தமர்க ளேனையிடை யோர்கள்கடை யோரா
மூத்தகைய ராவரவர் மூரிநெடு வேலோய்!
பத்துவகை பாதவ மியற்றிய பயத்தால்
அத்தகைய செய்கையு மவர்க்கனைய கண்டாய்.

'வலிய நெடுவேல் தாங்கிய மன்னவரே, போக பூமி மனிதர், உத்தமர், மத்யமர் (இடையோர்), ஜகன்யர் (கடையோர்) என மூன்று வகையினராவர்; அவர்கள் பத்து வகையாகிய கற்பக விருக்ஷம் கொடுக்கும் போக வஸ்துக்களைக் கொண்டு இன்பம் நுகர்வதனால் 'போக பூமி மனிதர்' எனப்படுவர். அவர் செயல் முற்றிலும் போகமாகவே திகழும்.

பாதவம் - கற்பக மரம், பயம் - பலன். 185

அங்கிருவர் தம்பதிகள் செய்கையை யறைந்தால்
இங்கிருவர் செய்கைதமை யெண்ணியறி வாய்நீ
தங்குரவ ரோடிருவர் மாறிருவர் தாமாய்
இங்கிருவர் தேவர்கள் வளர்ப்பவியல் கின்றார்.

'போக பூமியிலுள்ள தம்பதிகள் நுகரும் இன்பச் செயலைக்கூறுமிடத்து, அது இங்குள்ள தம்பதிகள் இருவர் நுகரும் இன்பம் போன்றதேயாம் என்று எண்ணி உணர்வீராக. அந்தப் போக பூமியில் தாங்கள் இரட்டைகளாகப் பிறந்ததும் தம் குரவர் இறந்துபடலின், தம் குரவரோடு மாறுபட்டார் போலத் தனியுவராகத் தம்மை இரண்டு தேவர்கள் வளர்க்க வளர்தல் இயல்பு.

போகபூமியின் தம்பதிகள், தங்கள் ஆயுள்வரை போகம் நுகர்ந்து அந்தியத்தில் கர்ப்பம் தரித்து இரட்டைக் குழந்தைகளைப் பெற்று, பெற்ற அப்பொழுதே (தாயும் தகப்பனுமாகிய தாங்கள்) இறந்து தேவ பதவி யெய்வதும், பின்னர் அக்குழந்தைகளும் தேவர்கள் வளர்க்க வளர்ந்து இன்பம் நுகர்ந்து கடைசியில் தம் குரவரைப்போலவே தாங்களும்

இரட்டைக் குழவிகளைப் பெற்றுவைத்து மரித்துத் தேவ பதவி யெய்துவதும் மரபு என்க. 186

நக்ககுழ விப்பருவ நாற்பதினொ டொன்பான்
ஒக்கவரு நாள்கள்கலை யோடுட னிறைந்தால்
மிக்கவொளி சூழ்ந்துமிளிர் மேனியவ ராகித்
தக்கவிள மைப்பருவ மெய்தினர்க டாமே.

'அங்ஙனம் பிறந்த குழந்தைகள் நாற்பத்தொன்பது நாட்களில் அறிவுக்கலை முதலியன நிறைந்து, மிக்க ஒளி சூழ்ந்து மிளிரும் மேனியுடையவர்களாகி, யௌவன பருவத்தையும் எய்தினர்கள் ஆவார்கள்.

போக பூமியில் 49 நாளில் யௌவனம் எய்தலியல்பு. 187

கொம்பழகு கொண்டகுழை நுண்ணிடை நுடங்க
வம்பழகு கொண்டமணி மென்முலை வளர்ந்தாங்
கம்பவழ வாயுளணி முள்ளெயி றிலங்கச்
செம்பவழ மேனியவள் கன்னிமை சிறந்தாள்.

'சிவந்த பவளமேனியளாகிய பூங்கொம்புபோலும் அழகிய போகபூமி மாதர், 49 நாளில், குழைந்த நுண்ணிய இடை அசைய, புதுமையான இயற்கை அழகு கொண்டவளாய், மாணிக்க மணி போலும் நிற முடையதும் மென்மையுடையதுமாகிய நகிலமும் வளர்ந்து, பவழம்போலும் வாயினுள் அழகிய முல்லை யரும்பு போலும் கூரிய பற்கள் விளங்க, கன்னிப் பருவம் கடந்து யௌவனமெய்திச் சிறப்புற்றாள்.

ஈண்டுப் பவளமேனி என்பது உத்தமபோக பூமியில் உள்ளாரைக் குறிக்கும். 188

நீல்மணி கண்டனைய குஞ்சிக ணிறைந்தான்
ஞாலமணி கொண்டநளிர் தாமரை முகத்தான்
கோலவணி மால்குவடு குங்கும மடுத்தாற்
போலுமணி மேனியொடு காளைபொலி வுற்றான்.

'நீல மணி போலும் கறுத்த தலை மயிர் நீண்டு நிறைந்தவனும், இவ்வுலகத்தே அழகு கொண்ட தாமரைபோலும் குளிர்ந்த முகமுடையவனும், மிக அழகியதொரு பர்வதசிகரத்தே குங்குமம் சேர்ந்தாற் போலும் மார்புடையவனும். பவழ மணியொத்த சிவந்த மேனியனுமாகிய காளையும் (49 நாளில்), யௌவனத் தால் சிறந்தான். 189

தாதுபடு சண்பக மிகந்த நறுமேனிக்
காதுபுனை காமர்குழை பொற்சுருளை மின்ன
மீதுபடு கற்பக விளந்தளிர் மிலைச்சிப்
போதுபுனை கோதையவள் பூம்பொழி லணைந்தாள்.

'மகரந்தம் மிக்கதாகிய சண்பக மலரின் வாடை யையும் வென்று மீறிய, (சண்பகம் கமழும் மேனி யளாய் இரண்டு காதுகளிலும் புனைந்த அழகிய குழை யும் பொன்றோலையும் ஒளிவிட, பின்னல் மீது கற்பக இளந்தளிரையும் கற்பக மலர்களையும் அழகு பெற அணிந்து, கோதை போல்வாளாகிய அம்மாது கற் பகப் பூஞ்சோலையை அடைந்தாள்.

மிலைச்சுதல் - அணிதல், சூடுதல். 190

பவழவரை யன்னதிர டோட்பரவை மார்பன்
தவழுமணி யாரமொடு தார்மணி தயங்கக்
கவழமனை மேவுகளி யானையென வந்தாங்(கு)
அவிழுமல ரீர்ம்பொழிலு ளையனு மணைந்தான்.

'பவழம்போலும் திரண்ட கைகளையும், வரை போலும் பரந்த மார்பினையுமுடைய அவ்வையனும்,

ஒளி தவழும் மணி மாலையோடு பூமாலையும் முத்துமாலையும் விளங்க, கவளத்தை இச்சிக்கும் களிப்புடைய ஆண் யானை வந்தாற்போல முருக்கவிழ்ந்து மலரும் புதிய மலர்களையுடைய கற்பகச் சோலையிடத்தே வந்து சேர்ந்தான்.

பவழம், கவழம் - ழகர ளகரப்போலி. தோளுடைய மார்பன் எனலுமாம். கவளம் - யானைக்கிடும் உணவு. 191

**கன்னியவண் மேலிளைய காளையிரு கண்ணு**
**மன்னுகமழ் தாமரையின் வாயித ழலங்கல்**
**பின்னியென வீழ்ந்தபிணை யன்னவவள் கண்ணுந்**
**துன்னுமிரு நீலமென வந்தெதிர் துதைந்த.**

'(அவ்விடத்தில் நின்ற) கன்னியின்மேல் இளைய காளையின் இருகண்களும் தாமரையிடத்தே நெருங்கி மொய்க்கும் வண்டுகள் போல வீழ்ந்தன; பிணையின் நோக்குடைய அவளிரு கண்களும் நீலமலர் போல எதிர் வந்து கலந்தன.

அலங்கல் - பூமாலை, பின்னுதல் - மொய்த்தல். மாலை மொய்த்தலெனவே வண்டாயிற்று என்க. 'தாமரையொத்த வாயினை உடைய காளை' எனினும் பொருள் சிறக்கும். 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனு மில' என்பது தேவர் குறள். 192

**நையுமென நின்றவிடை யாள்குணமோர் நான்கும்**
**வையமகிழ் காளையிவன் மாண்டகுண நான்கும்**
**ஐயென வகன்றன வணைந்தனர் கனிந்தார்**
**மெய்யுமிடை யுற்றவிது வால்விதியின் வண்ணம்.**

'(அங்ஙனம் இருவர் கண்களும் சந்தித்த காலத்தே), இடையை வருத்துவேமென மார்பிடம் முழுவதும் நகிலம் பரந்து நின்ற இளையாளின்

மகடூஉக் குணங்களாகிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்கும், உலகில் மகிழத்தக்க காளையின் பெருமை தங்கிய ஆடூஉக் குணங்களாகிய அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னும் நான்கும், அதி விரைவில் அகன்றன; தம்பதிகளிருவரும் இன்பம் கனிந்தணைந்து களித்தனர்; இருவருடலும் ஒருடலென அமுதக் காமக்கடலில் மூழ்கினர்; இதுவே நல்வினையின் தன்மை.

நாணம் - வெட்கம், மடம் - அறிந்தும் அறியாதார் போன்றிருத்தல், பயிர்ப்பு - அருவருப்பு, (குற்சிதம் என்பதும் இது), நிறை - அழிவின்மை, ஓர்ப்பு - மனத்திடன், கடைப்பிடி - கருமம் முடிக்கும் துணிவு, ஆல் - அசை. 193

அன்றுமுதன் மூன்றளவு பல்லமுடி காறுஞ்
சென்றுபெரு கிக்களிசி றந்துநனி காமம்
என்றுமிடை யின்றியிமை யாரினுகர் வார்க்கு
நின்றது பிராயமது வேநிழலும் வேலோய்!

'ஒளிரும் வேலோய், தம் வாழ்நாள் எல்லையாகிய மூன்று பல்லம் முடியுமளவும், இன்பக் களிப்பில் பெருகிச் சென்று, ஏனைய் சுகபோகங்களிலும் இடையீடின்றிச் சிறந்து தேவ தம்பதிகளைப் போல இன்பம் நுகர்வாராகிய அவர்களுக்கு ஆகமத்துக் கூறும் வாழ்நாளின் எல்லையும் (மேற்கூறிய 49 நாள் குறைந்த) மூன்று பல்லமேயாகும் என்க.

நனி - மிகுதி; பெருமையுமாம். 194

கங்குலவ ணில்லைகலி யில்லைநலி வில்லை
அங்கவர்க ளிடைக ழித்தமிழ் தயின்றல்
எங்குமில வின்பவெழி லெய்தறரு மீதாற்
தங்கிய தவத்தரசர்க் கீந்தபயன் றனே.

'மற்றும் அவ்விடத்தே உள்ளார்க்கு, (ஜோதிராங்கம் என்னும் கற்பகத்தருவின் ஒளியால்) இரவு என்பதே இல்லை; மற்றுமுள்ள கற்பகத் தருவின் உதவியினால் வறுமையும் இல்லை; நோய் முதலிய துன்பங்களும் இல்லை; அவர்கள் மூன்றுநாள் கழித்து போஜனங்கம் என்னும் கற்பகத் தருவினலீந்த அமிர்தம் புசித்து, வேறெங்கும் இல்லாத இன்பமும் அழகும் பெற அமைந்து இன்புறுவர்; இவை யாவும் ஒழுக்கத்தில் நிலைபெற்ற தவவேந்தர்க்கு அளித்த உத்தம தானப்பயனேயாகும். 195

அன்னமிகு போகமவ ரெய்திவிளை யாடி
முன்னமுடி பல்லமவை மூன்றுடன் முடித்தாற்
பின்னுமவர் தம்வழி பிறந்தவரை நோக்கி
மன்னுமினி தேறுவது வானுலக மன்னா!

'மன்னரே, அங்ஙனம் மிக்க இன்பத்தை எய்திய அவர்கள் மூன்று பல்லமளவும் காமராகத்தில் விளையாடிக் கழித்து, (மேலே 186ன் உரையில் கூறியவாறு) தம்மிடத்தே பிறந்த இரட்டைக் குழந்தைகளைக் கண்டு மரித்து, மறுமையில் அடைவது இனிய தேவர் உலகமேயாகும்.

போக பூமியிலுள்ள மனிதரும் விலங்குகளும் நற்காட்சியுடையராயின், மறுமையில் சௌதர்ம ஈசான கற்பத்திலும்; மோகனீயகர்மமுடையராயின், பவணர் வியந்தரர் ஜோதிடர் ஆகிய மூன்றுவகைத் தேவகதியிலும் பிறப்பார்கள். ஆதலின்,

"மன்னுமினி தேறுவது வானுலகம்"—என்றார்.

"போகநில விலங்குநரர் பொருந்தியநற் சாட்சியரேல்
நாகமுத லாம்சோத மீசானம் நண்ணிடுவர்
மோகமிச் சார்பவணர் வியந்தரர்சோ திடராவார்."
என்றார் மேருமந்தர புராண முடையார். 196

பல்லமுத லோர்பகுதி மூன்றிரண்டு மொன்றும்
அல்லவிரு வர்க்கமிர்து மம்முறையி னேறு
நல்லநிலங் காலமுயர் வென்றிவைக ளுடிச்
சொல்லவுல வாவிவர்கள் செய்கைசுடர் வேலோய்!

'வேலையுடையீர், உத்தம போகபூமியிலுள்ளார் ஆயுள் மூன்று பல்லமாகும். ஏனைய இருவர்க்கும் இரண்டும் ஒன்றுமாகும் (அதாவது இடையிலுள்ளார்க்கு இரண்டு பல்லமும், கடையிலுள்ளார்க்கு ஒரு பல்லமும் ஆயுளாகும்); அமிர்து புசிப்பதும் இம்முறையினதேயாகும் (அதாவது உத்தமர் மூன்று நாள் இடை விட்டும், மத்யமர் இரண்டுநாள் இடை விட்டும், ஜகன்யர் ஒருநாள் இடை விட்டும் அமிர்து புசிப்பர்); மற்றும் இவர்கள் செயல்முறையில் நிகழும் நல்ல நிலம், நற்காலம், இன்ப உயர்வு முதலியவற்றை ஆராய்ந்து வர்ணித்துக் கூற இயலாத இன்பமுளது. 197

செம்பவழம் வெண்பளிங்கு பைந்தளிர் சிறக்கும்
வம்பழகு கொண்டமணி மேனியவர் பூவார்
கொம்பவிழுஞ் சண்பகங்கண் முல்லையிணர்க் கோங்கம்
அம்பவழ வண்ணமுத லாமவர்மெய் நாற்றம்.

'அம்மூவரும், செம்மையான பவழ மணியும், வெண்மையான ஸ்படிக மணியும், பசுந்தளிரொத்த பச்சைமணியும் போன்ற புதுமையான அழகிய மேனியுடையவராவர்; பவழ வர்ணம் முதலான அவர்களின் சரீரவாடை (நறுமணம்) முறையே சண்பகம், முல்லை, கோங்கம் ஆகிய இம்மலர்களின் மணமாம்.

அதாவது, பவழவர்ணமும் சண்பகவாடையும் உத்தமர்க்கும்; ஸ்படிக வர்ணமும் முல்லை வாடையும் மத்யமர்க்கும்; பச்சை வர்ணமும் கோங்கின் வாடையும் ஜகன்யர்க்கும் ஆகும். கோங்கு வாசனை இன்மையை உணர்த்தும்.

'கோங்கெலாம் கமழமாட்டா குணமிலார் செல்வமேபோல்' என இந்நூல் இவ்வாசிரியரே கூறியது காண்க. 198

நலங்கண்மிகு நம்முலகி னன்மைமிகு நீராற்
புலங்கண்மிகு போகமொடு போகநிலத் துள்ளால்
விலங்கொடுள வாழ்பறவை யவ்வுடம்பு விட்டாற்
கலங்கண்மிகு கற்பநில மேறுவன கண்டாய்.

'நலம் மிக்க நம் உலகில் நற்குணத்தால் மிக்க தாகிய பஞ்சேந்திரிய போகத்தை மிகுதியாகவுடைய போக பூமியின்கண் வாழும் பறவை முதலிய விலங்கினங்கள் தம் யாக்கை நீங்கின் சிறந்த வானுலகம் அடையும்.

நம் உலகைக்காட்டிலும் ஐம்பொறிகளால் நுகரும் இன்பமொடு ஏனைய இன்பங்களும் மிகமிகப் பொருந்தி யிருப்பதனுல் போகபூமி என்னும் பெயர் பெற்றது. அவ் விடத்தேயுள்ள (மாந்தரேயன்றி) விலங்கினமும், பறவை யினமும், கோப தாபம் முதலிய தீய செயலின்றி இன்புற்று அவ்யாக்கையை விட்டால் மறுமையில் இன்பம் நிறைந்த தேவருலகத்தே தேவராகும் என்க. 199

### தேவர் கதித் துன்பம்

பூவிரியு நறுமேனிப் பொன்னிலங்கு நிமிர்சோதித்
தேவர்கடந் திறமுரைத்த றேவருக்கு மரிதெனினும்
நாவிரவி நாமுரைப்ப நால்வகையாய் விரியுமவை
ஓவரிய பெரும்புகழா யொருவகையா லுரைப்பக்கேள்.

'நீங்குதற்கு அரிய புகழுடையீர், இனி, மலர்ந்த பூமணம் மிக்க மேனியும், பொன் போன்றொளிரும் ஜோதியுமுடைய தேவர்களின் தன்மையை நாவினுல் வர்ணித்து உரைத்தல் எவருக்கும் அரிதாகும்; ஆயினும், நாம் அதனை உரைக்குமிடத்து அது நான்கு வகையாக விரியும். அவற்றை ஒரு வகையால் சுருங்க உரைக்கக் கேட்பீராக.

ஓவுதல் - நீங்குதல். 200

ஈரைவர் பவணர்களு மிருநால்வர் வியந்தரும்
ஓரைவர் சோதிடரு மொருபதின்மே லறுவரெனுங்
காரைய முறுவகையாய் கற்பகரு மீயுலகிற்
சீரைய மில்லாத திருமலர்த்தார்த் தேவரே.

'மேகமும் ஐயமுறும் வண்ணம் தியாகம் கொடுக்கும் வேந்தரே, சிறப்பால் எளிமையில்லாத திருத்தங்கிய தேவருள் பதின்மர் பவணரும், எண்மர் வியந்தரரும், ஐவர் சோதிடரும், மேலுலகிலுள்ள பதினறுவர் கற்பகரும் ஆவர். 201

உற்றவர்க்கு மேலவர்க ளொன்பதின்ம ரொன்பதின்மர்
மற்றவர்க்கு மேலவரை வகையரவர் மேலவர்கள்
இற்றவர தெண்வகையா மிவர்க்கென்று மில்லாத
செற்றநோய் செயிர்பகையென் றிவைமுதல செல
[வுணர்நீ.

'முன் கூறிய 16 கற்ப வுலகத்தார்க்கு மேலுள்ளவர் நவக்ரைவேயக தேவர் ஒன்பதின்மர் ; அதற்கு மேல் உள்ளவர் நவாணுதிசைத் தேவர் ஒன்பதின்மர் ; அதற்குமேல் உள்ளவர் பஞ்சாணுத்தரத் தேவர் ஐவர்; அதற்குமேலுள்ள இடம் அஷ்டம ப்ரத்வி, என்னும் (மோக்ஷத்தில் எண்வினைகளைக் கெடுத்து அதனல் எண் குணங்களையுமடைந்த) சித்த பரமேஷ்டிகளின் இடமாகும் ; இவர்க்கு என்றும் சினம் முதலியனவும், பிறவிப் பிணியும், துன்பந்தரும் வினைப்பகையும் இல்லாமை அமையும். 202

பவணர்

அருமணியி ஞெளிநிழற்று மாயிரமாம் பணமணிந்த
திருமணிசேர் முடியவருந் தீயொழுகு சிகையருமாப்
பருமணிய படலஞ்சேர் பவணத்துப் பதின்மர்களொண்
குருமணிகொ ணெடுமுடியாய் ! கூறுபா டுடையவரே.

'முடியுடையிர், படலங்களின் பிரிவால் பத்து வகையாகிய பவணருலகத்து, ஆயிரம் பணமணி யணிந்த ஒளிதங்கிய முடியுடைய நாக குமாரர் மற்றும் அக்கினி கக்கும் சிகையுடைய அக்கினி குமாரர் முதலாகப் பத்துவிதப் பிரிவினையுடையராகுவர்.

ஈண்டுக் கூறிய அக்கினி குமாரர்களும தேவர்களே. கணதரர் முதலியோர் முத்தி எய்தியவிடத்து அவர்கள் உடலை, அக்கினி இந்திரனது முடிமணியிலுண்டாகும் அனல் பொறியைக் கொண்டே தகனஞ் செய்வதனல் அவர்க்கு அப்பெயர் ஆயிற்று. குருமணி - செம்மணி. 203

வியந்தரர்

கின்னரர்கண் முதலாய வியந்தரரைக் கிளந்துரைப்பி
னின்னரருலகத்து ளெவ்வழியு முளராகி
மென்னரம்பி னிசைகேட்டும் வெறியயர்வு கண்டுவந்து
மன்னவரை வணங்கியுந்தம் மனமகிழ்வ ரொருசாரார்.

'கின்னரர் முதலிய எண்வகை வியந்தர தேவர்களின் தன்மையை உரைக்குமிடத்து அவர்கள், இம் மத்திம உலகத்துள் எவ்விடத்தும் உள்ளவராகி, சங்கீதம் கேட்டும், நாடகங் கண்டு உவந்தும், ஒருசிலர் ஆழி ஏந்திய அரசர்களை வணங்கி ஏவல் செய்தும் மகிழ்வர்.

கின்னரர், கிம்புருடர், கருடர், காந்தர்வர், யக்ஷர், ராக்ஷஸர், பூதர், பிசாசர் என வியந்தரர் எண்வகையர் என்க. 204

குலகிரியு மலையரசுங் குளிர்பொழிலு நளிர்கயமும்
பலகிரியுந் தீவகமும் படுகடலும் படிநகரும்
உலகிரிய வெளிப்பட்டு மொளிகரந்து முறைந்தியல்வர்
அலகிரியும் பலகுணத்தோ யமரர்களே லைப்பலரே.

'எண்ணற்ற நற்குணமுடையீர், கின்னரர் முதலிய அத்தேவர்கள்; பலரும் இமயம் முதலிய குலகிரிகளிலும், மேரு பர்வதங்களிலும், தேவாரணியம் முதலிய வனங்களிலும், பத்மை முதலிய தடாகங்களிலும், வெள்ளியங்கிரி, இக்ஷ்வாகாரம், வக்ஷார பர்வதம் முதலிய ஏனைய மலைகளிலும், எண்ணற்ற தீவுகளிலும், ஆழமாகிய கடல்களிலும், பெரிய நகரங்களிலும் உலகோர் கெட வெளித் தோற்றமாயும் மறைமுகமாயும் தங்கி வாசம் செய்வார்கள். 205

**சந்திரருஞ் சூரியருந் தாரகையு நாண்மீனும்**
**வெந்திறல கோள்களுமா மெனவிளங்கி விசும்பாரு**
**மந்தரத்தை வலஞ்சூழ்ந்து வருபவரு நிற்பவருஞ்**
**சுந்தரஞ்சேர் மணிமுடியாய்! சுடர்பவருஞ் சோதிடரே.**

'அழகு செறிந்த மணி முடியீர், சந்திர சூரியர்களும், தாராகணங்களும் அசுவினி முதலிய (27) நட்சத்திரங்களும், வெப்பத்தையும் விருப்பத்தையும் தரும் செவ்வாய் முதலிய ஏழு கிரகங்களும் என்ற ஐவகையராய் விளங்கும் ஜோதிஷ்க தேவர், ஆகாயமார்க்கமாக மகமேருவை வலமாகச் சுற்றி வருபவராயும் நிற்பவராயும் விளங்குவர்.

மானுஷோத்தரபர்வதத்தின் வெளிப்புறத்திலுள்ள சோதிடர் நிற்பவர் என்க. 206

**எண்ணியமுத் தேவர்களு மிவர்மடந்தை யவருமாய்க்**
**கண்ணியல்தூ நற்காட்சிக் கதிர்விளக்குத் தூண்டினுர்**
**நண்ணுப்வோ வெனினண்ணுர் நல்விரதந் தலைநின்று**
**புண்ணியங்கள் படைத்தாரக் குழுவினிடைப்**
**பொலிவாரே.**

'நற்காட்சியில் சிறந்தோர் (மேற்கூறிய மூவகைக்) கீழ் முத்தேவர்களாகவும் அவர் மனைவியராகவும் பிறப்பரோ எனின், பிறவார். நற்காட்சியின்றி

நல்விரதங்கள் மட்டிலும் ஏற்று நோற்ற புண்ணியத்தால் இம்மூவகைத் தேவராகவும் தேவியராகவும் பிறப்பர்.

அஹிம்ஸை முதலிய விரதங்களை, 'நல்விரதம்' என்றார். 207

**காதலரிற் பிழையாராய்க் கள்ளூன்றேன் கடிந்தகற்றி**
**ஈதலோ டில்லிருக்கு மிளம்பிடியர் முதலாயார்**
**ஓதினமுத் தேவரா யுயர்ந்தவர்க்கு ளுயர்ந்துளராய்ச்**
**சோதியும்பே ரெண்குணனுந் துப்புரவுந் துன்னுவரே.**

'கணவன் கருத்திற்கு மாறாத கற்புடையவராய், உயிர் வதையால் ஈட்டிய தேன், புலால், கள் ஆகிய மூன்றையும் (மரணத் தறுவாயிலும்) உண்ணாது நீக்கி, தானதர்மங்கள் செய்து, நீதி வழுவாத இல்வாழ்க்கை புரியும் மாதர் முதலியோர், மேற்கூறிய முத்தேவர்களாகவும் அவர்களின் மேன்மையரான இந்திரர்களாகவும் பிறந்து, அணிமா முதலிய எண் வகைச் சித்திகளையும் ஏனைய இன்பப் பொருள்களையும் எய்தி இன்புறுவர்.

எண் குணம் (சூளா. 217ல்) கூறப்படும். 208

**மந்தரமா நெடுமலையின் மத்தகத்து மேற்கூற்றின்**
**அந்தரப்பே ருலகத்து ளமரரைமற் றறையுங்கால்**
**இந்திரவில் லெனவெளிப்பட் டிமையவர்க டொழு**
**சுந்தரநன் மணிப்படிவ மெனச்சுடர்ந்து [தேத்தச்**
**[தோன்றுவரே**

'மகமேருவினுக்கு மேலேயுள்ள (அதாவது மகமேருவின் உயரமான தொண்ணூற்றொன்பதினாயிரம் யோசனைக்கு மேல் இடத்தே அந்தரவுலகம் வானுலகம் முதலிய பெயர்கள் பெற்ற) கற்பலோகத்து வாழும் வானவரின் பிறப்பு முதலியவற்றை யான் கூறு

மிடத்து, வானவில்போலப் பெட்டியினின்றும் வெளிப்பட்டு, மணியாலாய அழகிய உருவமெனப் பிறந்து, ஏனைய தேவர்கள் தொழுது பல்லாண்டு கூற அவதி ஞானத்துடன் விளங்குவர்.

மேருகிரி, மலையெல்லாவற்றினும் பெரியதாகையால் மகமேரு எனப்பட்டது. 209

அலர்மாரி மேற்சொரிவா ரமிழ்தநீ ராட்டுவார்
பலர்மாண்ட கலனணிந்து பலாண்டிசைப்பார் பாடுவார்
மலர்மாண்ட மணிக்கவரி மருங்கசைப்பார் மடந்தை
[யரைச்
சிலர்மாணச் சேர்த்துவார் தேவரா யதுபொழுதே.

'இயல்பான பதினறுவகை அணிகளுடன் பெட்டியில் தோன்றி தேவராய்ப் பிறந்தபொழுதே, சாமானிய தேவர் பலர், தூயமஞ்சன நீராட்டி, பூமாரி சொரிவார்; பல்லாண்டு கூறி ஆடிப்பாடுவார்; மலர் மழையினூடே கவரி வீசுவார்; மனைவியராகிய தேவமாதரை அவரருகில் சேருமாறு செய்து மகிழ்வார். 210

ஆடாது மொளிதிகழு மாரணங்கு திருமேனி
வாடாத கண்ணியினர் மழுங்காத பூந்துகிலர்
ஏடார்ந்த தொங்கலரா யின்பநீர்ப் பெருவெள்ள
நீடாரக் குளித்தாடு நிலைமையரே யவரெல்லாம்.

'புதிய இதழ் கலந்தியற்றிய அசையுமாலையுடையாய், அசையாது ஒளி திகழும் திவ்விய மேனியராகிய தெய்வத்தன்மை வாய்ந்த அத்தேவர் அனைவரும் வாடாத சிரோ மாலையும், மந்தாரமாலையும், மாசு படியாத பூந்துகிலும், அழகு பெற அணிந்து, இரவு பகலின்றி, இன்பக் கடலில் மூழ்கித் திளைத்து, காம போகம் நுகரும் தன்மையராவர்.

செயற்கை ஆபரணமணிந்தவர்க்கே அசைந்து ஒளி விடுதலியல்பு. 211

**பொன்மாட நெடுநிலத்தார் புகலமளி யணேமேலார்
கன்மாடு பொன்வளருங் கதிர்மணிக்குன் றதன்மேலார்
மின்மாடு மிளிர்ந்திலங்கு விமானத்தா ரெனினல்லால்
சொன்மாடு பிறிதில்லைச் சுவர்க்கஞ்சேர்ந் தவர்கட்கே.**

'சுவர்க்கத்தே பிறந்த தேவர்களுக்கு, பொன்னுலகத்து 'உயர்ந்த உப்பரிகையினிடத்தே இன்ப அமளியை விட்டுப் பிரியாது புகலாக அடைந்தவரும், பொன், மணி முதலியவற்றாலாய குன்றின்மேல் இன்பம் பொருந்த இருப்பவரும் ஆகிய மின்போலொளிரும் வைமானிகர்,' என்று புகழப்படுவதல்லது (இகழப்படும்) பிறிதொரு பக்கச்சொல் அங்கு இல்லை. 212

**கந்தருவக் கோட்டியுள்ளார் கண்கனிய நாடகங்கண்
டிந்திரனோ டினிதினிருந் திளம்பிடியர் பாராட்டச்
சுந்தரமா மணிமாடச் சூளிகைய ரெனினல்லால்
அந்தரமேற் பிறிதில்லை யமரருல கடைந்தவர்க்கே.**

'அமரருலகடைந்தவர்க்கு, 'சுந்தரமான உப்பரிகைகளையுடைய அரண்மனைகளில் இந்திராணியும் இந்திரனும் இனிது வீற்றிருந்து (நடனம் செய்யும்) கந்தர்வ கோஷ்டிகளிடையில் கண்கனிய இசை நாடகங்களைக் கண்டும் கேட்டும் பிடி போலும் வாரவிலாசினிகள் பாராட்டித் துதிக்க இன்புறுவர்,' என்பதல்லது தனிமைச் சொல் வேறொன்றும் இல்லை.

கோட்டி - கோஷ்டி, கூட்டம், கனிய - முற்றுப்பெற, இளம்பிடியார் - பிடிபோலும் நடையுடைய மாதர், சூளிகை - அரண்மனை, அந்தரம் - தனிமை. தனித்துத் தவம் முதலியன தாங்குவதும் அங்கு இல்லை. 213

**கந்தாரங் களித்தனைய பனிமொழியார் கண்கவர
மந்தார வனத்திடையா மணிமுழவி னிசையரங்க
மந்தார மணியரங்கி னெனும்வார்த்தை யவையல்லாற்
செந்தாரோய்! தேவர்கள்செய் திறற்றெழின்மற்
றுடையரே.**

'சிறந்த காரிகையுடையீர், தேவர்கள் காந்தாரம் என்னும் இசையமுதம் போலும் இனிய மொழி கூறும் தேவமாதரின் கண்கள் தம் உள்ளத்தைக் கவர, கற்பக வனத்திலுள்ள அரங்கத்திடத்தே இனிய முழவின் இசை ஒலியிட, மந்தாரம் மணி அரங்கு என்றிவை போன்ற நாடக ஒலிகளைக் கேட்டலே யல்லது வேறு தொழிலும் உடையர்.

அது பின்னர்க் கூறுகின்றார்.

எனவே, தேவர்கள் இனிய நடனம் காணுதல் மாதரோடு விளையாடுதல் முதலிய தொழிலையே முக்கியமாக உடையவர்கள். திவ்வியமான விளையாட்டினை உடையவராதலின், தேவர் எனனும் பெயர் பெற்றார் என்ற கருத்திற்கிணங்க, 'திவ்பந்தி க்ரீடந்தி தேவர்;' என்பர் வடநூலார். 214

**தீர்த்தங்க டிறந்தவர்க்குச் சிறப்போடு திசையெல்லாந்**
**தேர்த்தங்க ளொளிபரப்பச் செல்பொழுதுந் தம்முலகிற்**
**கார்த்தங்கு மயிலனையார் காமஞ்சேர் கனிகோட்டித்**
**தார்த்தங்கு வரைமார்ப! தம்முருவி னகலாரே.**

'மணமலர்மாலை பொருந்திய மலைபோலும் மார்பரே, அந்தத்தேவர்கள் தர்ம தீர்த்தமாகிய திருமொழியை உபதேசித்த தீர்த்தங்கர பரமதேவர்களிடம் அஷ்ட விதார்ச்சனைத் திரவியங்களோடு, எத்திசையும் தெளிவித்துத் தம் ஒளி பரவச் செல்கின்ற காலத்திலும்; தேவருலகமாகிய தம் விமானத்தே கார் கண்டு மகிழும் மயிலனைய தேவமாதர் காமக்கோஷ்டியிலுள்ள தம் உருவின் அகலார்.

தேவர் பல உருக்கொள்ளும் தன்மையராதலின், வேறு வேறு உருவம் அமைத்துக்கொள்வர் என்க. கார் - மேகம். 215

**இமையாத செங்கண்ண ரிரவறியார் பகலறியார்**
**அமையாத பிறப்பறியா ரழலறியார் பனியறியார்**
**சுமையாகி மணிமாலை சுடர்ந்திலங்கு நெடுமுடியார்**
**அமையாத நல்லுலகி னகைமணிப்பூ ணமரரே.**

'தீவினையாளருக்கு அமையாத திவ்விய வுலகின் தேவர்கள் இமை கொட்டாத செங்கண்ணுடையவர்; கற்பகத்தருவின் ஒளியால் இரவு பகலென்பதேயறியார்; அமையாத பிறப்பு அறியார்; அழல்பனி முதலியனவும் அறியார்; மணி மாலை முதலியனவே கழுட்ட முடியாத சுமையாகிச் சுடர்ந்து விளங்கும் முடியணிந்தவர் இன்பப்பெருக்கு உடையவராவர். அமைந்த பிறப்பு உடையார் அதாவது கருவு நிறைதல் வளர்தல் முதலியன இன்றி ஷோடச ஆபரணமுடன் பிறத்தலைக் குறிக்கும். 216

**அணுவளவாய்ச் சிறுகுதன்மற் றதிநுட்ப மிகப்பெருகல்**
**நணியவர்போ னினைத்துழியே நண்ணுறுதல்**
**[விழைத்தகைமைப்**
**பணியினமைத் திடல்குறிப்பிற் பலவுருவு நனிகோடல்**
**துணிவமையு நெடுவேலோய்! சுரருடைய குணங்களே.**

'துணிவுடன் பகைவெல்லும் நெடுவேலினையுடையீர், தேவர்களின் குணங்கள், 1. அணுவளவாய்ச் சிறுகுதல் (அணிமா), 2. அதிநுட்பமாதல் (இலகிமா), 3. மிகப்பெருகல் (மகிமா), 4. நணியவர்போல் நினைத்துழியே நண்ணுறுதல் (வசித்துவம்), 5. விழை தகைமை (பிராகாமியம்), 6. பணியினமைத்திடல் (ஈசத்துவம்), 7. குறிப்பிற் பல வுருவும் நனிகோடல் (பிராப்தி), 8. துணிவமைதல் (கரிமா) என எண் வகையாகும்.

அவைவருமாறு :—

| | | | |
|---|---|---|---|
| 1 | அணிமா | ...அணுவளவாய்ச் சிறுகுதல் | ...அணுவளவாதல் |
| 4 | லகிமா | ...அதிநுட்பமாதல் | ...பஞ்சினும் நொய்தாதல் |
| 2 | மகிமா | ...மிகப் பெருகல் | ...மிகவும் பருத்தல் |
| 8 | வசித்துவம் | ...நினைத்துழி நணியவராதல் | ...யாவரும் வணங்கிநிற்றல் |
| 6 | பிராகாமியம் | ...விழைதகைமை | ...குறைவின்றியிருத்தல் |
| 7 | ஈசத்துவம் | ...பணியின் அமைத்திடல் | ...யாவர்க்கும் தேவனாதல் |
| 5 | பிராப்தி | ...குறிப்பிற்பலவுருவுகோடல் | ...வேண்டுவன அடைதல் |
| 3 | கரிமா | ...தணிவமைதல் | ...இருப்புமலையினுங்கனத்தல் |

'அணிமா மஹிமாச் சைவ கரிமா லகிமா ததா
ப்ராப்தி ப்ரகாம்ய மீசத்வம் வசித்வம் சாஷ்ட பூதய:'

என்பது அமரம். 217

அளிதருஞ்செங் கோலுடையோ யமரருக்கு மந்தரமுண்
டொளியோடு பேரின்ப முயந்தவர்க்கே யுயர்ந்துளவாந்
தெளிதருநற் காட்சியது திருந்தியமே னெடுந்தகையோர்க்
கெளிதகவும் பெரும்பாலும் பெறலேனோர்க் கரியவே.

'கருணையுடன் செங்கோலோச்சும் வேந்தரே, தேவர்களுக்கும் ஆயுள் முடிவடைந்து மறு பிறவி எய்துதல் உண்டு; கேவல ஞான தரிசன ஜோதியோடு அனந்த சுகமெய்திய சித்த பரமேஷ்டிகளுக்கே அந்தரமின்றிச் சிறந்துள்ளன; நூற்பொருளைத் தெளிந்து நம்பும் நற்காட்சியின் சிறப்படைந்த சான்றோர்க்கு (க்ஷாயிக சம்யக்த்ரஷ்டிகளுக்கே) பேரின்பம் எய்தல் மிக எளிய தன்மையதாகும்; ஏனோர், பெரும்பாலும் அத்தகுதியைப் பெறுதல் அருமை.

அந்தரம் - முடிவு, பேரின்பம் - கடையிலா இன்பம், ஏனோர் - க்ஷாயிகம் எய்தாதவர். 218

கனைகதிராக் கதிர்கலந்து கண்ணிலங்கு திருமூர்த்தி
புனைகதிரொண் மணிப்படிவம் பொழிந்ததுபோற்
[பொலிந்ததன்மேல்
வனைகதிரின் மணிமுடியும் மாணிக்கக் கடகமுமென்
றினமுதலாச் சுடர்ந்தினிதி னியல்பாய்நின் றெரியுமே.

'ஞாயிற்றினது ஒளி போலும் ஒளி பரந்து, கண்டோர் மகிழும் அழகிய உடல்; பதுமராகமணியின் உருவம், கிரணஞ் சொரிந்தாலொப்ப விளங்கும் அழகிய மணி முடி, மாணிக்கக் கடகம் என்றிவை முதலிய பதினாறு ஆபரணங்களும் இயல்பாய்ப் பொருந்தி நின்று ஒளிரும்.

உடல் தோன்றிய காலத்தே அவ்வுடலோடு உடன் தோன்றும் பதினாறு வகை ஆபரணம் என்க. 219

செழுந்திரட்பூம் பாவைகளுந் திகழ்மணியின்
[சுடர்க்கொழுந்தும்
எழுந்திலங்கு மேனியரா யெரியுமணிக் கலந்தாங்கி
மொழிந்துலவாக் காரிகையார் முலைமுற்ரு விளமையார்
அழிந்தலராக் காரிகைமா ரமரரசர் தேவியரே.

'அமரர் தேவியர், பூம்பாவையை யொப்பக் கிரணம் பொருந்திய சிவந்த மேனியராய், அழகிய ஆபரணம் தாங்கி, வருணித்துக் கூற இயலாத யௌவன அழகுடையராய், ஆயுள் முடிவு வரை முதுமை எய்தாத இளமையுடையராய், கற்பழியாத தன்மையும் உடையவராவர். 220

இன்பமே பெரிதாகி யிடையறவின் றிமைப்பளவுந்
துன்பமொன் றில்லாத துறக்கத்திற் பெறுஞ்செல்வம்
மன்பெருமா தவத்தினல் வருமொருநா ளீறுடையது
அன்பதன்கண் [1]மிசையே யைந்தடிகடரு பொரு
[டெளிந்தார்.

பா - பே. 1. மிசையே யென்றடி கடரு பொருடெளிந்தார்.

'தேவ தேவியர்களுக்கு, இன்பமே பெரிதாகி, அவ்வின்பம் ஆயுள் முடிவு வரை நழுவுதலும் இன்றி, ஒரு கண நேரமும் துன்பம் சிறிதும் இல்லாத துறக்கத்திற் பெறும் செல்வம், நற்குண நற்செயல் களில் பொருந்திய மிக்க தவத்தினுல் அமைவதாகும்; ஆயினும் அது, ஆயுள் முடியுங்காலத்து நீங்கும் தன் மையதே; மற்றும் இறைவன் உரைத்த நூற்பொருள் தெளிந்த சான்றோர், அச்சுதகல்ப தேவமாதர்களின் ஆயுள் ஐம்பத்தைந்து பல்லம் என்று அருளிச் செய்தார்.

சௌதர்மேந்திரனுடைய தேவியர்களுக்கு ஐந்து பல்ல மும், அதற்குமேலுள்ள பதினொரு கல்பாமர தேவியர்களுக்கு இரண்டிரண்டாக ஏறி, சஹஸ்ரார கல்பாமர தேவியர்களுக்கு இருபத்தேழு பல்லமும்; அதற்கு மேலுள்ள நான்கு கல்பா மர தேவியர்களுக்கு ஏழு ஏழாக ஏறி அச்சுத கல்ப அமர தேவியர்களுக்கு ஐம்பத்தைந்து பல்லமும் உத்தம ஆயுள் என்க.

'மன்பெரு மாதவத்தினுல் வரும்' எனவே, மாதவத் தில் குறைந்த ஏனைய தேவதேவியர்களுக்கு, ஆயுள் குறைவு என்றுணர்க. இனி, இந்திரன் அல்லாத ஏனையோர்க்கு துன்பமும் உண்டென்பது உட்கோள் எனலாம்.

"தேவரே தாமு மாகித் தேவராற் றெழிக்கப் பட்டும்
ஏவல்செய் திறைஞ்சிக் கேட்டு மணிகமாப்பணிகள் செய்தும்
நோவது பெரிதுந் துன்ப நோயினுட் பிறத்தல் துன்பம்
யாவதுந் துன்ப மன்று யாக்கைகொண் டவர்கட் கென்றான்.'

என்னும் சிந்தாமணி (2811-ஆம்) செய்யுளை நோக்கியறிக. இந்திரன் அல்லாதார் என்பது, (பத்துவகையான) வாகன தேவன் முதலியோரைக் குறிக்கும். (இதனை மே. ம. பு, 1318-ஆம் கவியில் காண்க.)

அச்சுத கல்பத்திற்குமேல் உள்ள தேவர்களுக்குத் தேவியர் இல்லை.

**பவணத்தார்க்கொருகடலாமிகையமரும்பல்லமொன்றும்
இவணொத்த வமரருக்கும் இருவிசும்பிற் சுடரவர்க்குஞ்
சிவணொத்த வுயர்வாழ்நாள் சென்றபினர்ச் செல்கதியும்
அவணொத்த தத்தமது விதிவகையா மதிபதியே!**

'மன்னவரே, இனி, பவண தேவர்களுக்கு உத்தம ஆயுள் ஒரு கடலும், ஜகன்ய ஆயுள் ஒரு பல்லமுமாகும்; வியந்தர தேவர்களுக்கும் ஜோதிஷ்க தேவர்களுக்கும் உத்தம ஆயுள் ஒரு பல்லமேயாகும்; பவண, வியந்தர, ஜோதிஷ்கர் ஆகிய மூவரும் ஆயுள் முடிந்து செல்லுங்கதிகளில் அவரவர் ஈட்டிய நல்வினை தீவினைக்குத் தக்கவாறு மனிதர்களாகவோ அல்லது விலங்குகளாகவோ பிறப்பார்கள்.

சிவணுதல் - சேர்தல்; கலத்தல். 'விலங்காகுவர்' என்பதனை, 'நீர் மர நிலங்களாவர் நின்றநால் வகைய தேவர்' என்னும் (மே. ம. பு. 74-ஆம்) செய்யுளாலறியலாகும். 222

பதினறு கற்ப உலகங்களை எட்டு யுகளமாகக் கூறுகின்றார்.

**இரண்டாகு முதல்வர்கட் கேழிரைந் தீரேழாய்
யிரண்டிரண்டாய் மூவுலகத் தொழிந்தவர்சேர்
[பிரண்டிரண்டாய்
அரண்டகவந் தேறிப்பின் னரணவச் சுதருலகின்
மருண்டாய மணிமுந்நீர் பதினொன்றற் கிருமடியே.**

'முதல் யுகளமாகிய சௌதர்ம ஈசான கற்பத்தார்க்கு இரண்டு கடலும்; அதற்குமேல் மூன்று யுகளத்தார்க்கு முறையே ஏழும், பத்தும், பதினன்கும்; அதற்கு மேலுள்ள நான்கு யுகளத்தார்க்கும் இரண்டிரண்டாக ஏறி ஆருண அச்சுத கல்பத்தார்க்கு இருபத்திரண்டு கடல் ஆயுளாகும்.

அவற்றுள் சௌதர்ம, ஈசானர்க்கு இரண்டு கடலும்; சனத்குமார, மாகேந்திரர்க்கு 7 கடலும்; பிரம, பிரமோத்தி

ரர்க்கு 10 கடலும்; லாந்தவ, காபிஷ்டத்தார்க்கு 14 கடலும்; சுக்கிர, மஹா சுக்கிரர்க்கு 16 கடலும்; சதார, சகஸ்ராரர்க்கு 18 கடலும்; ஆனத, ப்ராணதர்க்கு 20 கடலும்; ஆருண, அச்சுதர்க்கு 22 கடலுமாகும். ஈண்டு,

"இரண்டு மேழுமீ ரைந்துமீ ரேழுமாய்
இரண்டு மேற்சென் றிருபத்தி ரண்டெய்தத்
திரண்ட வற்றின்மே லொன்றுசென் றுயுக
முரண்டெ ழுங்கடல் முப்பத்து மூன்றுமே."

என்னும் மே. ம. பு. 498-ஆம் செய்யுள் ஒப்பு நோக்கி அறிக.

நமக்கு மேலேயுள்ள வானுலகத்துச்சௌதர்ம கற்பம் முதலாக அச்சுத கல்பம் வரையிலும் பதினாறு கல்பவுலகங்கள் இருக்கின்றன. அவை (எட்டுப்பழுவுடைய ஓர் ஏணியின் மத்தியில் மற்றொரு கால் நாட்டினாலொப்ப அதாவது மூன்றுகாலேயும் எட்டுப் பழுவையுமுடைய ஏணியின் மையம் போல) இரண்டிரண்டாய், ஒன்றின்மேலொன்றாக இருக்கின்றன. யுகளம் என்ற அவை தொகை வகையால் எட்டும் விரி வகையால் பதினாறுமாகும். அவற்றிற்குமேல் ஹேஷ்டிமத் திரயம், மத்தியமத் திரயம், உபரிமத் திரயம் என்ற மூன்று பிரிவினையுடைய நவக்ரைவேயகமும், அதற்கு மேலுள்ள நவாணுதிசையும், பஞ்சாநுத்தரமும் ஆகிய (ஐந்து பிரிவினையுடைய) மூன்று அகமிந்திரவுலகம் இருக்கின்றன. அதற்கு மேல் உலக உச்சியாகிய மோக்ஷ ஸ்தானம் உளது.

இரண்டு சேர்ந்ததனை 'யுகளம்' என்பர் வடநூலார். ('யமளம் யுகளம் யுக்மம்' என்பது அமரம்.) இரண்டிரண்டு என்பதனையும், முந்நீர் என்பதனையும் எவ்விடத்தும் கூட்டுக. 'மருண்டாய மணி முந்நீர்' என்று கடலுக்கு அடைமொழி தந்தார்; 'குருதிக்கோட்டுக் குஞ்சரநகரம்' என்று (அஸ்தின புரத்திற்குக்) கூறியதுபோல, 'வாங்கொலி நீர்' என்பர் அடுத்த செய்யுளிலும். அரண் - அழகு. 223

ஆங்கவர்மே லமரரசர் மும்மூவர்க் கொரோவொன்ருய்
ஓங்கினர்மே லொன்பதின்மர்க் கொன்ருென்ரு
[யவர்மேலார்
பாங்கினுறப் பெருகுவன பதினைந்திற் கிருமடிமேல்
வாங்கொலிநீ ரொருமூன்று வாழ்வென்ப மணிமுடியாய்!

'மணி முடியிர், வைமானிக தேவர்களுக்கு மேலுள்ள அகமிந்திர வுலகத்து ஹேஷ்டிமத்திரயம், மத்யமத்திரயம், உபரிமத்திரயமாகிய நவக்ரைவேயகம் ஒன்பதுக்கும் தனித்தனி ஒவ்வொரு கடலாக (22+9=31) ஏறி அதற்கு மேலுள்ள நவாணு திசைக்கு ஒரு கடலும், பஞ்சாணுத்தரத்திற்கு ஒரு கடலுமாகிய இம்முறையாகப் பெருகி வந்தது முப்பத்து மூன்று கடற்காலமாகும்.

அமரரசர் - அமரர்களுக்குள் அரசர் (இந்திரர்); எனவே அகமிந்திரர்கள் என்க. பாங்கு - வரிசை. பதினைந்தை இரட்டித்த முப்பதின்மேல் மூன்று 33. வாங்கொலிநீர் - கடல், கடல் என்பதனை எல்லாவற்றிற்கும் கூட்டுக. விஜயா, வைஜயந்தா, ஜயந்தா, அபராஜிதா, சர்வார்த்த சித்தியெனப் பஞ்சாணுத்தரம் ஐந்தாகும்.) 224

ஆயிடைய வமரரசர் திறம்வினவி னணங்கனையார்
வேயிடைமென் பணைப்பொற்ருேள் விழைவின்றிப்
[பெரிதாகி
ஏயிடையோ ரறவின்ரு வின்பஞ்செய் திருமூர்த்தி
சேயிடையொள் ளொளிநிழற்றச் செம்மாந்தா
[ரிருந்தாரே.

'அவ்விடத்தேயுள்ள அகமிந்திரர்களின் தன்மை யாதெனை நீர் கேட்பீராயின், அவர்கள் அணங் கனைய மாதர் பொற்ருேளின் விழைவாகிய காம வாஞ் சையே இல்லாதாராகி, இடையில் நழுவுதலில்லாத

இன்பமே பெரிதாகி, தங்களது அழகிய உடலொளியும் நெடுந்தூரம் ஒளி வீச, செம்மாந்திருப்பார்கள்.

அணங்கு-தெய்வம், வேய் - பச்சை மூங்கில், வேய் போலும் மென்மையும் திரட்சியும் உடைய கை. மூர்த்தி - உடல் (வடமொழி).

செம்மாத்தல் - மிகுமகிழ்ச்சி; இறுமாப்புமாம். அங்குள்ள தேவர் ஒருவருக்கொருவர் ஏற்றத் தாழ்வு இலராதலின், 'அகமிந்திரர்' எனப்படுவர். 225

ஊனிலா [1]வுறுப்பமைய வொளியமா யுலகெல்லாம்
பானிலாப் பரந்தெறிப்பப் பளிங்கினது படிவம்போல்
மேனிலா மணியனையார் வெண்சங்கே ரிலைச்சையாங்
கோனிலா வவரின்மிக் கவரில்லைக் குடைவேந்தே!

'குடைவேந்தரே, அவ்வகமிந்திரர்கள், நிணமற்ற யாக்கையராய், உலகெல்லாம் பால் நிலாப் போலும் ஒளிபரந்துவீச ஸ்படிக மணியையும் சந்திரகாந்த மணியையும் நிகர்த்த வடிவமுடையராய், வெண்மை வர்ணத்தராகி, தங்கட்கோரரசரின்றித் தாமே நால் வகைத் தேவருள்ளும் மிக்காராவர்.

ஒவ்வொருவரும் தமக்குத் தாமே இந்திரன் தன்மையுற்றவராதலின், 'அகமிந்திரர்' எனப்பட்டார். இலைச்சை-வர்ணம். 226

அப்பால தத்திதியா மதனிலமைந் தாலூணின்
றெப்பாரும் பிறிதிவணின் றூழிநாட் பெயர்ந்திழிவின்
றெப்பாலுந் திரிவின்றே ரியல்பாய வின்பத்தான்
மெய்ப்பால தவவரசர் வீற்றிருக்கும் வியனுலகே.

---

(பா-பே.) 2. வுறுப்பமைந்து வொளிய ; அமைந்தொளிய

'எவ்வகையினுலும் மாறுபடுதலில்லாத இயற்கை இன்பமாகிய கடையிலா இன்பத்தால், உண்மையின் பகுதியாகிய தவவேந்தர் வீற்றிருக்கும் வியன் உலகம், அகமிந்திர வுலகத்திற்கும் மேலேயுள்ளது; எக்காலத்தும் அழிவில்லாத அஸ்தித்வத்தோடு கூடியது; அங்ஙனம் அதனுள் அசரீரியாய் அமைந்தால், ஊண் முதலிய துன்பங்கள் இலவாகும்; தமக்குச் சமானமானவரும் வேறெவ்விடத்துமிலராவர்; பல ஊழிகாலம் சென்ற போதிலும் பிறவியில்லையாகும்.

இனி, 'அப்பாலது' என்பது மறு பிறவியில் முத்தியடையும் பிறவியென்பதனையும் குறிக்கும். 227

**கதிநான்குங் கதிசேரும் வாயிலுமிவ் விவையதனுல்**
**விதிமாண்ட நரகமும்புன் விலங்குகளுஞ் சேராமை**
**மதிமாண்ட நற்காட்சி வழிநின்று தவந்தாங்கின்**
**நிதிமாண்ட பெருஞ்செல்வ நீங்காத வியல்பென்ருன்.**

'நவநிதிகளினுல் மாட்சிமை தங்கிய பெருஞ்செல்வரே, நரகர், விலங்கு, மனிதர், தேவர் ஆகிய நான்கு கதிகளும், அக்கதிகளுள் சேரும் வழியும், யான் கூறிய இவையேயாகும்; இவற்றுள் தீவினைகளின் மிகுதியால் (மாண்டவர்) எய்தும் நரககதியிலும் அற்பமாகிய விலங்கினங்களிலும் சேராமையாகிய ஞானத்தால் மாட்சிமை தங்கிய நற்காட்சியின் வழியிலே தங்கித் தவம் முதலியன தாங்கின், உயிரின் நீங்காத இயல்பாகிய கடையிலா இன்பம் எய்தும்,' என்ருர். (தவம் தாங்காவிடின் முத்தியடையாதென்பது பெறப்படுதலின் இஃது உபசார வார்த்தையாயிற்று). 228

**உறுதிகணன் குரைக்குங்கா லுபசார முரைப்பதோ**
**அறுதியில்பே ரருளீரென் றரசனுங் கடிதொழலும்**
**இறுதியிலாப் பேரின்ப மெய்துமாறெடுத் துரைத்தான்**
**மறுதரவில் கதிபடரு மாதவத்து வரம்பாயோன்.**

*'உயிருக்கு உறுதியாகிய பேரறத்தை நன்கு உபதேசிக்குமிடத்து, உபசார மொழியாகக் கூறுவதோ? முடிவிலாப் பேரருள் எய்தக் கிருபை செய்வீர்,' என்று அரசன் அவர் திருவடிகளில் மீண்டும் வணங்கவும்; திரும்பி வாராமையாகிய முத்தியை எய்தும் மாதவத்து (முறைப்படி) மெட்டாக நிகழும் பிஹிதாஸ்ரவ முனிவரர் பிரஜாபதி மஹாராஜனுக்குக் கடையிலா இன்பம் எய்துமாறு மீண்டும் விரிவாக உரைத் தருளினார்.* 229

**பதினோராவது**
**துறவுச் சருக்கம் முற்றும்**

---



# 12. முக்திச் சருக்கம்

1. இருவகை வினைகளு மில்ல திவ்வழி
வருவகை யிலாதது மறுவின் மாதவர்
பெருவழி யாச்செலும் பெயர்வில் சூளிகைக்
கொருவழி யல்லதிங் குரைப்ப தில்லையே.

*பிஹிதாஸ்ரவ முனிவர் மேலும் சொல்லத் தொடங்கியவராய், 'வேந்தரே, காதி அகாதி யென்னும் இருவினைகளும் நீங்கியதும், இந்நாற்கதியில் மீண்டும் பிறவாததும், குற்றமற்ற மாமுனிவர் பலரும் விரும்பிச் செல்வதும், திரும்பிவாராத சாஸ்வதமாகிய பேரின்பமுடையதும், மூவுலகத்தின் உச்சியிலுள்ளதுமாகிய முத்தியை எய்துவதற்கு (நற்காட்சி நன்ஞானம் நல்லொழுக்கம் ஆகிய மூன்றும் நிறைதலாகிய) ஒரே வழியல்லது வேறொரு வழி இறைவனால் கூறப்படுவதில்லை,' என்றார்.* 230

2. பிறந்தவன் பொறிப்புலக் கிவரு மப்புலஞ்
சிறந்தபின் விழைவொடு செற்றஞ் செய்திடும்
அறைந்தவை வாயிலா வினைக ளீட்டினால்
இறந்தவன் பின்னுமவ் வியற்கை யெய்துமே.

*'பிறவியில் பிறந்தவன் ஐம்பொறிகளின் (விஷயங்களாகிய) புலன்களை இச்சிப்பன்; அப்புலன்கள் சிறப்பாக எய்துமாயின் விருப்பும், எய்தாவிடின் வெறுப்பும் அடைவன்; அவ்விருப்பு வெறுப்பு வாயிலாக மீண்டும் வினைகளைச் சேகரித்து (சம்பாதித்து)க் கொண்டு இறந்து, அவ்வினைகளுக்குத் தகுந்தவாறு மறுபிறவியெய்தி மேற்கூறியவாறே மீட்டும் மீட்டும் வினைகளால் (பிறந்து) உழலுவன்.*

**இவ்வுலகிலுள்ள புத்கல பரமாணுக்கள் ஸ்நிக்த, ரூக்ஷ குணங்களால் ஒன்று சேர்ந்து ஸ்கந்தங்களாகி, உயிர்களின்**

எண்ணங்களை நிமித்தமாகப் பெற்று, அவ்வெண்ணத்திற்குத் தக்கவாறு வினைகளாக மாறி, உயிர்களிடம் தாமே சேர்ந்து பிணிக்கின்றன. இதனையே,

'பிறந்தவன்... அறைந்தவை வாயிலா வினைகளீட்டினால்'

என்றார்.

அவை வருமாறு:—குணபர்யாயங்களை உடையது திரவியமாதலின், புத்கலத்திரவியத்தின் அமிசமாகிய பரமாணுக்களுள் ஒவ்வொருபரமாணுவிற்கும் எண்வகை ஸ்பர்சங்களில் இரண்டிரண்டு ஸ்பர்சங்களும், ஐவகை வர்ணம், இரு வகை கந்தம், அறுவகை (சுவை) ரசங்கள் ஆகிய மூன்றிலும் ஒவ்வொன்றும் இயற்கைக் குணமாக அமைந்துள்ளன;

'நாற்றமும் சுவையும் ஊறும் வண்ணமும் தன்மைத்தாகி,
போற்றல்பூ ரித்தல் வாடல் உடையதாம் புத்கலந்தான்'

(மேரு. 83வது கவி) என்பர் வாமன முனிவர். ஸ்பர்சம் என்பது தமிழில் 'ஊறு' எனவழங்கும். அது, நொய்மை, திண்மை, தண்மை, வெம்மை, பருமை, நுண்மை, மென்மை, வன்மை என விரியும். இவற்றை முறையே வட நூலார் ஸ்நிக்தம், ரூக்ஷம், சீதம், உஷ்ணம், குரு, லகு, மிருது, கர்க்கசம் என்பர். பரமாணுக்களிடம் ஸ்நிக்தம், ரூக்ஷம், சீதம், உஷ்ணம் என்னும் நான்கு ஸ்பர்சங்களும் பொருந்துவனவாகும் (ஏனைய ஸ்பர்சங்கள் பரமாணுக்களின் கூட்டமாகிய ஸ்கந்தங்களுக்கே ஆகும்). அவற்றுள்ளும் அவிரோதமாகிய இரண்டிரண்டு ஸ்பர்சங்களே உள்ளன. எங்ஙனமெனில், ஸ்நிக்தகுணமுள்ள பரமாணுவினுக்குச் சீதகுணமோ அல்லது உஷ்ணகுணமோ சேரும் ஆதலின், ஸ்நிக்த சீதம், ஸ்நிக்த உஷ்ணம் என்று அமையும்; அங்ஙனமே, 'ரூக்ஷதசீம், ரூக்ஷ உஷ்ணம் என்று இரண்டிரண்டு ஸ்பர்சங்களாக அமையும். அவற்றுள்; ஸ்நிக்த சீதம் - வெண்ணெய் போல்வது; ஸ்நிக்த உஷ்ணம் - உருகும் பொன் போல்வது; ரூக்ஷசீதம் - பனிக்கட்டி போல்வது; ரூக்ஷ உஷ்ணம் - சூடேறிய கல்

போல்வது. ஒரு பரமாணுவில்; ஸ்நிக்த குணம், ரூக்ஷ குணம் ஆகிய இரண்டு ஸ்பர்சங்கள் அமையாவிடினும், ஸ்நிக்தகுணமுள்ள பரமாணு ரூக்ஷ குணமுள்ள பரமாணுவி னுடனே சேர்ந்து பந்தத்தினை அடையும் (காய்ந்த சுவரில் ஈரமுள்ள மண் ஒட்டுவதுபோல) என்க. ஆதலின், ஸ்நிக் தம் - ஸ்நிக்தத்துடனும், ரூக்ஷத்துடனும், ரூக்ஷம் - ரூக்ஷத் துடனும் ஸ்நிக்தத்துடனும் சேர்ந்து பந்தத்தினை அடையும்.

ஒரு துளி எசன்ஸில் இனிப்பின் குணம் அளவின்றி அடங்கியிருப்பது போல ஒவ்வொரு பரமாணுவுக்கும் ஒன்று முதல் பல குணங்கள் பொருந்தியுள்ளன. (இங்குக் குணங்க ளென்பன ஸ்நிக்த ரூக்ஷங்களைக் குறிப்பிடும்.) ஒவ்வொரு பரமாணுவும் தன் குணத்திற்கு இரண்டு குணமோ அல் லது இரண்டிற்கு மேற்பட்ட குணமோ உள்ள பரமாணுவி னுடன் சேரும். (சூடான வெந்நீரில் கலந்த சிறிதளவு ஜல மும் சூடாவதுபோல என்க.) அதாவது, இரண்டு குண முள்ள ஸ்நிக்த பரமாணு நான்கு குணமுள்ள அல்லது ஆறு எட்டு முதலிய பல குணமுள்ள ஸ்நிக்த பரமாணுவினுடனே யாவது, ரூக்ஷ பரமாணுவினுடனேயாவது சேர்ந்து பந்தத் தினை அடையும். ரூக்ஷ பரமாணுவும் இச்சொன்ன முறையே சேரும். இங்ஙனம் ஒன்று முதல் அனந்த பரமாணுக்கள் வரை ஒன்றாகச் சேர்ந்து சூக்ஷ்ம ஸ்கந்தம், அல்லது கார்மண வர்க்கணையென்ற பெயர் பெற்று உலகம் முற்றிலும் நிறைந் துள்ளன. அவைகள் உயிர்களின் விருப்பு வெறுப்புக்காரண மாக எண்வினைகளாக மாறி உயிர்களிடம் சேர்ந்து பிணிக் கின்றன. இவற்றை இன்னும் விவரமாக அறியவேண்டின் 'அனந்தமா மணுக்கள் கூடி............வர்க்கணு ரூபத்தாலே', 'யோகமே............பந்தமாமே' என்ற (101, 102) மேரு மந்திரபுராணச் செய்யுட்களிலும், தரிசனுதிகாரம், பதார்த்த சாரம் முதலியவற்றுள்ளும் பார்த்தும், குருமூலமாகக் கேட்டும், பவ்வியர்கள் அறிந்துகொள்வார்களாக. 231

3. பிறவிச்சக் கரமிது பெரிது மஞ்சினுன்
துறவிக்கட் டுணிகுவன் றுணிந்து தூயனுய்
உறவிக்க ணருளுடை யொழுக்க மோம்பினுல்
மறவிக்க ணிலாததோர் மாட்சி யெய்துமே.

'இங்ஙனம் (துன்பகாரணமான) பிறவிச் சக்கரமாகிய இதன் சுழற்சிக்கு மிகவும் அஞ்சுமொருவன் துறவு மேற்கொள்ளத் துணிவான். அங்ஙனம் துணிந்து துறவு பூண்டு தூயனுகி, உயிர்களிடத்து அன்புடையவனுகி, நன்னெறியைப் பாதுகாக்குமிடத்து (ஞானிகள்) மறத்தற்கியலாத முத்தியை எய்துவன்.

உறவி - உயிர், 'உறவி புத்கலமிவை' என்பர் வாமன முனிவர். (மேரு. 92.) 232

4. காட்சியு ஞானமுங் கதிர்த்துத் தன்பொறி
மாட்சியை வெலீஇமனந் தூய னுயபின்
நாட்செய்து நவிற்றிய தியான வீதியான்
மீட்சியில் வீட்டுல கெய்தும் வீரனே.

'வினைப் பகைவரை வெல்லும் வீரன், நற்காட்சியும் நன்ஞானமும் விளங்கப் பெற்று, ஐம்பொறியையும் பெருமையுடன் வென்று, உள்ளும் புறமும் தூயனுன பின்னர், சாமாயிக காலத்திற்குக் கூறிய முறைப்படி நிகழ்ந்து நன்னெறியோடு பழகிய தியான மார்க்கத்தால் மீண்டும் (பிறவியில் வந்து) பிறவாமையாகிய வீட்டுலகத்தை அடைவான்.

பொறிமாட்சி - புண்ணியத்தின் பகுதி எனலுமாம். புண்ணியத்தையும் வெறுத்தோரே வீடடைவர் என்க. 233

5. கடையிலெண் குணத்தது காம ராகர்கள்
இடைநனி யிலாததில் லியற்கை யில்லது
மிடையொடு விழைவுவே ரறுத்த வீரர்கள்
அடைவதோர் நிலைபிறர்க் கறிய லாகுமோ.

'கடையிலா ஞானம் முதலிய எண்குணமுடையதும், நீதி முறை தவறிய காமவாஞ்சை உள்ளவர்களிடம் சிறிதளவும் இல்லாததும், இல்லறவியற்கையும் இல்லாததும், வெறுப்பும் விருப்பும் வேரறு (அடியோடு) விலக்கிய வீரர்கள் அடைவதுமாகிய அம் முக்தி நிலையைப் பிறரால் அறியவியலுமா? இயலாது.'

'எண்குணத்தான் தாள்' என்றார் (குறள் 91) தேவரும். எண் குணம் யசோ. 51ல் உள்ளன. 234

6 மணிமலர்ந் துமிழ்தரு மொளியுஞ் சந்தனத்
துணிமலர்ந் துமிழ்தருந் தண்மைத் தோற்றமும்
நணிமலர் நாற்றமு மென்ன வன்னதால்
அணிவரு சிவகதி யாவ தின்பமே.

'மேற்கூறிய சிவகதியின் இன்பம், சிகல் செய்த (சாணைபிடித்த) மணியின் ஒளியும், சந்தனக்கட்டையைக் கல்லில் உராய்ந்த சந்தனத் தண்மையும், புதிய மலரின் மணமும் எத்தகையவோ அத்தகையது.'

'நறையலர் வெறியென நகுமணி ஒளியன
நணுகிய இயல்பினது நின் சுகம்'

என்பர் உதீசி தேவரும். சிவம் - சௌக்யம். 235

7. வடுவறு மாதவ னுரைப்ப மாண்புடை
அடிகள வறவமிழ் துண்ட வாற்றலான்
முடிவுகொ ளுலகெய்த முயல்வ னென்றனன்
விடுகதிர் மணிமுடி வென்றி வேந்தனே.

குற்றமற்ற தவமியற்றும் பிஹிதாஸ்ரவ முனிவரர் இங்ஙனம் கூறியருள, கதிர் விடும் மணிமுடியணிந்த மிக்கோனாகிய பயாபதி வேந்தன், 'உவமையற்ற பெருமை தங்கிய இறைவன் அருளிய தர்ம அமிருதத்தினை உட்கொண்ட ஆற்றலினால் உலக உச்சியாகிய முத்தியை எய்த முயல்வன்; தீக்ஷை கொடுத்தருள்க,' என்றனன். 236

8. மிக்கெழு போதிகை விலக்க றக்கதன்
றொக்கநன் றுடன்பட லுலக [1]மேன்றெனத்
தக்கவாய் மொழித்தவத் தரச னேர்ந்திலன்
றொக்கவான் புகழவற் கமைச்சர் சொல்லினார்.

'மிகுதியாகத் தோன்றும் ஞானமார்க்கத்தை விலக்கல் தகுதியன்று ஆதலில், ஒருமிக்க நன்றாக உடன் படலே உலகத்திற்குப் பொருந்துவதாகும்,' என்று கூறி அமைச்சர் முதலியோரும் வணங்க, அரசன் மனம் இன்னும் உறுதிப்பட வேண்டும் என்று கருதிய தவத்தரசனாகிய முனிவரன், தகுதியுள்ள அவ்வாய்மை மொழியினை நேர்ந்தான் இல்லை; பின்னர்ப் புகழ்மிக வுடையவனான தவ வேந்தனுக்கு அமைச்சர் கூறினார்.

என்றல் - பொருந்தல்; இசைதல். நேர்தல் - உடன் படல். அமைச்சரும் துறவுகொள்ளும் உள்ளத்தராதலின் அங்ஙனம் கூறினார். 237

இது முதல் மூன்று கவிகள் அமைச்சர் கூற்று.

9. இருட்பிலத் தரும்பட ரெய்திப் பல்புகழ்
வருட்டதை யிலனலிந் துண்ண வாழ்பவன்
பொருட்டகு வாயில்பெற் றுய்ந்து போம்வழி
உருட்டுவா னொருவனை யுவந்து நாடுமோ ?

'பற்பல அருளும் புகழும் சேராதவனாகிய ஒருவன், இருள் மயமான குகையினுள் அகப்பட்டு, சகித்தற்கரிய துன்பமெய்தி, மெலிந்து உண்ணக் கருதி வாழ்பவன், (அருளும் புகழும் சேர்தற்குக் காரணமான) நற்பொருளின் தகுதி வாய்ந்த நல்வழி பெற்று, (இருள்மயமான) குகையினின்றும் பிழைத்துப் போகுமிடத்துத் தடை செய்வான் ஒருவனை, மனமுவந்து நாடுவானோ ? 238

---

[1] பா - பே. 'மனறெனத்'.

10. அருஞ்சிறைப் பிணியுழந் தலைப்புண் டஞ்சுவான
பெருஞ்சிறை தனைப்பிழைத் துய்ந்து போயபின்
கருஞ்சிறைக் கயவர்கைப் பட்டு வெந்துயர்
தருஞ்சிறைக் களமது சென்று சாருமோ.

*'சகித்தற்கரிய சிறைப்பிணியினால் உழந்து அலைச் சற்பட்டு அஞ்சுமொருவன், பெருஞ்சிறையாகிய அதனைத் தப்பியோடிய பின், வலிய சிறை காவலராகிய கறுத்த அக்கயவர் கையிலே அகப்பட்டுக் கடுந்துயர் தரும் சிறைச்சாலையை மீண்டும் சென்று அடைவனோ?* 239

11. பிணிபடு பிறவிநோய் பெயர்க்கு மாதவந்
துணிபவன் றன்னொடு தொடர்ச்சி நோக்குமோ?
அணிமுடி துறமினெம் மடிக ளென்றனர்
மணிமுடி மன்னவற் கமைச்ச ரென்பவே.

*'(மேற்கூறியவாறு குகையிலும் சிறையிலும் துன்புற்ற ஒருவன், மீண்டும் அவ்விடத்தே சார்வதற்கு அஞ்சுவது போல), நோய் மூப்புச் சாக்காட்டிற்குக் காரணமாகிய பிறவிப் பிணியை நீக்கும் மாதவத்தை விரும்பிச் செய்யுமொருவன், மீண்டும் அப்பிறவித் தொடர்ச்சியை விரும்புவனோ? ஆதலின், எம் அடிகளே, மன்னர் முடிதுறந்து துறவு மேற்கொள்ள அருள்வீர்' என அமைச்சர் கூறினர்.*

மேலே கூறிய இவ்வுரை அமைச்சர் அரசனுக்குக் கூறியதாக உரைப்பினும் அமையும். 240

12. எனவவர் மொழிதலு மெழுந்த போதியின்
சினைமல ரிலங்குவேற் சிறுவர் தங்களை
வனமலர்க் கண்ணியான் கூவி மற்றவர்க்
கினலிலா னிவ்வுரை யெடுத்துச் செப்பினான்.

அமைச்சர் இங்ஙனம் கூறியதும், அழகிய சிரோமாலையணிந்த வேந்தன், அறிவுமிக்கெழ, வெறுப்புற்று, சினம் மிக்க வேலேந்திய (விஜய திவிட்டர் களாகிய) சிறுவர்களை அழைத்து, அவர்கட்குத் துன்பமிலான் கீழ் வருமாறு கம்பீரமாக இவ்வுரை கூறினன்.

சினம் - கோபம், வனம் - அழகு, வனமலருமாம். முக்தி 25ல் துணிந்து கூறுகின்றனனாதலின், 'எடுத்துச் செப்பினன்' என்றார். 241

13. பொருளிலார்க் கிவ்வழிப் பொறியின் போகமும்
அருளிலார்க் கறத்தினும் பயனு நூல்வழி
உருள்விலா மனத்தவர்க் குணர்வும் போன்மனந்
தெருளிலார்க் கிசைவில டிருவின் செல்வியே.

'இவ்வுலகின்கண், பொருள் இல்லாதார்க்கு ஐம்பொறியின் இன்பம் கிட்டாதது போலவும், (அஹிம்சையின் அடிப்படையாகிய) கருணையிலாதார்க்குத் திருவறத்தாலாம் மறுமைப்பயன் எய்தாததுபோலவும், அறிவு வளர்ச்சிக்குக் காரணமான நூல்களின் வழியே நுழைந்து ஆராயாதார்க்கு அறிவு இல்லாதது போலவும், (உள்ளத்தே நிகழும் புண்ணியத்திற்குக் காரணமான) தெளிவில்லாதாரைச் செல்வத் திருமகள் வந்து சேரமாட்டாள்' என்றனர்.

'தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.'

'அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு'

என்றார் தேவரும். தெருள் - தெளிவு ; புண்ணிய காரணம் ஏழனுள் ஒன்று. 242

*14.* திருமக ணிலைமையுஞ் செல்வர் கேட்டிரேல்
மருவிய மனிதரை யிகந்து மற்றவள்
பொருவறு புகழினர் புதிய காமுறும்
ஒருவர்கண் ணுறவில ளுணர்ந்து கொண்மினே.

*'செல்வப் புதல்வர்காள், திருமகளின் நிலைமை யாதெனக் கேட்பீராயின், அத்திருமகள், சேர்ந்திருந்த மனிதரை விட்டு விலகி உவமையிலாப் புகழுடையவராகிய புதியவர்களை விரும்பியடைபவளும் எவரிடத்தும் நிலையான உறவு இல்லாதவளுமாவள்; நீங்கள் இதனை நன்றாக உணர்ந்துகொள்ளுங்கள்.* 243

*15.* புண்ணிய முலந்தபின் பொருளி லார்களைக்
கண்ணிலர் துறந்திடுங் கணிகை மார்கள்போல்
எண்ணில ளிகந்திடும் யாவர் தம்மொடும்
நண்ணிய நண்பில ணங்கை வண்ணமே.

*'புண்ணியம் உலர்ந்தபின் கைப்பொருளிழந்தவர்களைப் பட்சமின்றித் துறந்து வேறொருவரைக் காதலிக்கும் கணிகை மாதரைப் போல, திருமகளும் புண்ணியமிழந்த அதனால், பொருளிழந்தவர்களைச் சிறிதளவும் கருதாது விட்டு நீங்குவள்; எவரிடத்தும் பொருந்திய நட்பில்லாதவளுமாவள்; ஆதலின், அத்திருமகளின் தன்மை கணிகையர் தன்மையோடு ஒக்கும்.*

*கண்ணுதல் - கருதுதல்; முதல் அடி இரண்டிடத்தும் கூட்டப்பட்டது.* 244

*16.* உற்றுநன் கொருவர்கண் ணிற்கு மாய்விடின்
மற்றவர் குணங்களை மறைத்து மாண்பிலாச்
செற்றமுஞ் சினங்களுஞ் செருக்குஞ் செய்திடுங்
கற்றவர் தம்மையுங் கழற நோக்குமே.

---

பா - பே. *1. உற்று நின்றொருவர்.*

'(அங்ஙனமன்றி) அத்திருமகள், 'ஒருவரிடத்தே (சிறிது காலம்) பொருந்தி நிலைத்திருந்த போதிலும், அவரிடத்தேயுள்ள நற்குணங்களை மறைத்து, மாட்சிமையில்லாத செற்றத்தையும் சினங்களையும் கர்வங்களையும் உண்டுபண்ணுவள்; அதுவேயுமன்றி, கற்றறிந்த பெரியோரையும் அதட்டி எதிர்த்து இழித்துரைக்கச் செய்வள்.

சினம் முதலியன நான்கு வகையாதலின், பன்மையாகக் கூறினர். அவை அனந்தானு பந்தி, அப்ரத்யாக்யானம், பிரத்யாக்யானம், ஸஞ்ஜ்வலனம் என்பன. 245

17. அம்பெனு நெடியகட் கணிகை யார்தமை
நம்பிய விளையவர் பொருளி னையுமால்
வம்பின மணிவண்டு வருடுந் தாமரைக்
கொம்பினை மகிழ்ந்தவர் குணங்க ளென்பவே.

'புதுமையான மணி வண்டினம் வருடும் தாமரையில் வீற்றிருக்கும் திருமகளை (பொருளாசையால்) விழைந்தவர்களின் நற்குணங்கள், (தவறாது பாயும்) கூரிய அம்பு போலும் நீண்ட கண்களையுடைய கணிகைமார்களை நம்பிய காமுகரின் பொருள் அழிவது போல நைந்து கெடும் என்பர். 246

18. ஆதலா லவடிறத் தன்பு செய்யன்மின்
ஏதிலா ரெனவிகழ்ந் தொழியும் யாரையுங்
காதலா ராபவர் கற்ற மாந்தரே
போதுலா மலங்கலீர்! புரிந்து கேண்மினே.

'பூக்கள் செறிந்த மாலை அணிந்த புதல்வர்காள், அத்திருமகள் எத்தகையோரையும் அயலாரென இகழ்ந்து விட்டு விலகுவாள்; ஆதலால், நீவிர் அத் திருமகளோடு உறவு கொள்ளன்மின். உங்களுக்குக் காதலராகுமவர் கற்றறிந்த சான்றோரேயாவர்; மேலும், யான் கூறுவதனைக் கேளுங்கள். 247

19. நிலமக ணிலைமையு நெறியிற் கேட்டிரேற்
குலமிலர் குணமில ரென்னுங் கோளிலள்
வலமிகு சூட்சியார் வழியண் மற்றவள்
உலமிகு வயிரத்தோ ளுருவத் தாரினீர்!

'உருவத்தாரினீர், நிலமகள் இயல்பின் நீதி முறையையும் கூறக் கேட்பீராயின், அந்நிலமகள் உயர் குடிப்பிறவாதவர், நற்குணமில்லாதவர் என்று ஆராயும் கொள்கையில்லாதவள்; (அதாவது, தாழ்ந்த குலமும் தீய குணமும் உடையராயினும், அவரைச் சேருந்தன்மையள்;) கல் தூண் போலும் கெட்டி பொருந்திய தோள் வல்லமை மிக்கோரிடத்தும், உபாயத்தால் மிக்கோரிடத்துமே சேருந்தன்மையள்.

'உலமிகு வயிரத்தோள் உருவத்தார்' எனினும் அமையும். உருவத்தார் - நிறம் தங்கிய மாலை. 248

20. தன்னுயர் மணலினும் பலர்க டன்னல
முன்னுகர்ந் திகந்தவர் மூரித் தானையீர்!
பின்னும்வந் தவரொடுஞ் சென்று பேர்ந்திலள்
இன்னுமஃ தவடன தியற்கை வண்ணமே.

'மூரித்தானையீர், நிலமகளின் நலத்தை முன்னர் நுகர்ந்து அனுபவித்து நீங்கியவர், பூமி தேவியாகிய அவளது நுண்ணிய மணலைக்காட்டிலும் பலராவர்; தன்னை நுகர்ந்தவனை விட்டுப் பின் வந்தவரொடும் நுகர்ந்து சென்று நீங்கி, மற்றொருவரோடும் கூடி, அங்கும் நிலைத்திராது மாறிக்கொண்டே வருவதே அவள் இயற்கையாகும். 249

21. வெற்றிவேன் மணிமுடி வேந்தர் தம்மொடும்
உற்றதோ [1]ருரிமைய ளல்லள் யாரொடும்
பற்றிலள் பற்றினர் பால ளன்னதால்
முற்றுநீர்த் துகிலுடை முதுபெண் ணீர்மையே.

---

பா - பே. 1. ருரிமைகளில்லள்.

'கடலை ஆடையாகவுடைய பூமிதேவி யாவரோடும் பற்றில்லாதவள் ஆவள்: தன்னைப் பற்றினவர்கள் பாலும் நீடித்து நிற்காத தன்மையள்; மற்றும், வெற்றி வேல் தரித்த முடி வேந்தரோடும் பொருந்தியதோர் உரிமை இல்லாதவளாவள். 250

22. அடிமிசை யரசர்கள் [1]பணிய வாண்டவன்
பொடிமிசை யப்புறம் புரள விப்புறம்
இடிமுர சதிரவொ ரிளவ றன்னொடு
[2]கடிபுகு மவளது கற்பி னீர்மையே.

'தன் அடிமிசைப் பல சிற்றரசர் வணங்க மன்னாதி மன்னனாய்ச் செல்வத்துடன் அப்பூமி தேவியை ஆண்டவன், (பகையரசனால் அடிபட்டு) பூமியின் புழுதி மேல் ஒரு புறம் புரண்டு கிடக்க, அவனைவிட்டு மற்றொரு புறத்தே இடியின் கர்ச்சனை போலும் ஜய பேரிகை முழங்க, ஓர் இளவரசனோடு சேர்ந்து அவன் அரண்மனையில் விளக்கமாகப் புகுந்து வீற்றிருப்பாள் அவளது கற்பின் தன்மையும் அத்தகையதே. 251

23. இன்னன விவடன தியற்கை யாதலால்
அன்னவள் பொருளென வார்வஞ் செய்யன்மின்
மன்னுயிர் காவனும் மக்க டாங்கினாற்
பின்னை நுங் கருமமே பேணற் பாலிரே.

'பூமிதேவியின் இயற்கை இத்தன்மையதேயாதலின், அப்பூமி (தேவி)யைச் சிறந்த பொருளென விரும்பாதீர்கள்; மன்னுயிர்க்குத் துன்பம் அணுகாது காவல் புரியும் அரசபாரத்தை நும்மக்கள் தாங்கினால், பிறகு உங்கள் (கடமையின்) காரியமாகிய துறவை மேற்கொண்டு காப்பாற்றி நற்கதி பெறுவீர்களாக. 252

---

பா - பே. 1. வணங்க. 2. கடிமணம் புணர்பவள்.

24. மீனிவர் விரிதிரை வேலி காவன்மேல்
ஊனிவர் வேலினீர்! உங்கள் பாலதால்
யானினி யெனக்கர சாக்க லுற்றனன்
தேனிவ ரலங்கலீர்! செவ்வி காண்மினே.

'பகைவர் ஊனை விரும்பியுண்ணும்வேல் தாங்கிய மைந்தர்காள், மீன் தவழ்ந்து விரிந்த திரைகடலை வேலியாகவுடைய இப்பூவுலகின் காவல் இனிமேல் உங்கள் பகுதியானதேயாம்; யான் இனிமேல் எனக்குரிய தவராச்சியத்தை ஆள்வதற்கே உளம் பொருந்தியுள்ளேன்; தேனிவரும் மாலையை உடையீர், யான் கூறுமிதனை நன்றாக ஆராய்ந்து தெளியுங்கள். 253

25. உற்றநாள் [1]சிலநுமக் கென்னொ டல்லது
மற்றநாள் பலவவை வருவ வாதலாற்
கற்றமாண் சிந்தையீர்! கவற்சி நீங்குமின் [னுன்.
இற்றையான் றுணிந்ததென் றிறைவன் செப்பி

'உமக்கு என்னோடு உறவினராக உற்ற நாள் சில நாட்களே; உறவினரல்லாதாராய்ப் பிரிந்திருந்த நாட்களே பலவாகும். இப்பொழுது நமக்குள் அத்தகைய பிரிவே நேர்ந்துளது; ஆதலால், கல்வியின் மாட்சிமை பெற்ற சிந்தையீர், வருத்தஞ் செய்யாதொழிமின். யான் இன்று துணிந்ததும் (துறவு மேற்கொள்ளலாகிய) அதுவேயாகும்.'

'கல்வியின் பெருமையால் கவற்சி நீங்குமின்', என்றான். 'என்மீது வைத்த அன்பினின்றும் விலகுமின்' எனலுமாம். ஈண்டு,

'தொல்லைநம் பிறவி எண்ணில் தொடுகடல் மணலு மாற்ற
எல்லைய; அவற்றுளெல்லாம் எதிலம் பிறந்து நீங்கிச்
செல்லுமக் கதிக டம்முள் சேரலம்; சேர்ந்துநின்ற
இல்லினுள் இரண்டு நாளைச் சுற்றமே இரங்கல்வேண்டா'.

பா - பே. 1. 'சிலவுமக்கு'

என்ற சிந்தாமணிச் செய்யுள் ஒப்பு நோக்கி அறிதற்பாலது. கவற்சி - துன்பம். 254

26. என்றலு மிளையவ ரிறைஞ்சிக் கைதொழு(து)
இன்றியா மடிகளைப் பிழைத்த தென்னென
ஒன்றுநீ ரிலீரென வுரையொ ழிந்தரோ
அன்றவர்க் [1]கயலவ ணாகிச் சொல்லுவான்.

வேந்தன் இங்ஙனம் கூறிமுடிப்பதற்குள் விஜய திவிட்டராகிய இளைஞர் தாழ்மையோடு கைகுவித்து வணங்கி, 'அடிகளுக்கு இன்று யாம் செய்த தவறு யாது?' என, அரசன் அன்று அக்குமாரர்களுக்கு அயலான் ஒருவனைப் போலாகி, 'நும்மால் ஒன்றும் (தவறு) இல்லை,' என்றனன்; அதோடு மௌனம் சாதித்தான். 255

27. ஆவியா யரும்பெற லமிழ்த மாகிய
தேவிமார் தங்களைக் கூவிச் செவ்வனே
காவியாய் நெடுங்கணீர்! கருதிற் றென்னென
மேவினர் தவமவர் வேந்தன் முன்னரே.

வேந்தன் தன் உயிர்போன்றவரும் பெறுதற்கரிய அமிர்தம் போன்றவருமாகிய ஜெயவதி மிருகாவதி என்னும் தேவிமார்களை வரவழைத்து, 'நீலமலர் போலக் கறுத்து நீண்ட கண்களையுடையீர், செவ்விதாக நீவிர் கருதியது யாது?' என, அவ்விருவரும் வேந்தன் முன்னிலையில் துறவு மேற்கொண்டு தவமியற்றினர். 256

28. இமைப்பதும் பெருமிகை யினியி ருந்தென
நமைப்புறு பிறவிநோய் நடுங்க நோற்கிய
அமைச்சரு மரசர்கோ னருளி னூற்றம
சுமைப்பெரும் பாரத்தின் றெழுதி நீக்கினர்.

---

(பா - பே.) 1. 'கயலவனாகிச் செப்பினன்.

அமைச்சர்களும், 'நாம் இனிக் கணப்பொழுதிருப்பதும் வீண்காலமாகும். ஆதலின், இனி இங்கு இருந்து யாது பயன்?' என்று துன்பந்தரும் பிறவிப் பிணி நடுங்கும் வண்ணம் தவம்மேற்கொண்டு நோற்பதற்காக வேந்தன் அருள் பெற்று, தம் அமைச்சர் பதவியாம் பெரும்பாரமாகிய சுமைத்தொகுதியினை தங்கள் தங்கள் புதல்வர்களுக்கு அளித்து, பற்றைவிட்டுத் துறந்தனர்.

ஈண்டுப் பற்று என்றது, அகப்பற்றுப் புறப்பற்று என்பன. 257

29. அணிமுடி யமரர்தந் தாற்றப் பாற்கடல்
மணிமுடி யமிழ்தநீ ராடி மாதவர்
பணியொடு பன்மணிக் கலங்க ணீக்கினான்
துணிவொடு சுரமைநா டுடைய தோன்றலே.

அப்போது முடியணிந்த தேவர்களால் பாற்கடலினின்றும் கொண்டு வரப்பெற்ற அமிர்த நீரை, சுரமைத் தேசத்தை ஆட்சி புரிந்த தோன்றலாகிய பயாபதியின் முடியின்மேல் சொரிந்து நீராட்டிய பின்னர், பிஹிதாஸ்ரவ முனிவரின் கட்டளையை மேற்கொண்டு துணிந்த அவ்வேந்தன் நூல் முறைப்படி ஆபரணங்களை நீக்கினான்.

மாதவர் பணிவொடு - பல முனிவர்களை வணங்கி அல்லது இறைவனை வணங்கி என்லலாம். அரசபாரம் நீங்கிய உள்ளமுடைமையின் 'சுரமைநாடு உடைய தோன்றல்' என்று குறிப்பிட்டார். 258

30. அருமுடி துறந்தன னரச னயிடைத்
திருமுடி மணித்துணர் தேவர் கொண்டுபோய்ப்
பருமுடி நிரையன பரவைப் பாற்கடற்
பெருமுடி யமைகெனப் பெய்யப் பட்டதே.

தவவேந்தனுகிய பயாபதி, அரிதாகிய கேச பாரத்தினை நீக்கி, இயல்பான மெய்த்தவத்தினை மேற்கொண்டனன்; அப்பொழுது தேவர்கள், இந்திர நீல மணியின் திரள் போலும் கேசமாகிய முடி முதலியவற்றை முறைப்படி ஏற்றுச் சென்று விசாலமான பாற்கடலில் அமைக என விட்டார்கள்.

முக்தி எய்துவோரின் தலை மயிர் முதலியவற்றைத் தீக்ஷாகல்யாண முறைப்படி பாற்கடலில் விடுவது மரபு. விவரம் 'யதியாசாரம்' என்னும் நூலில் காண்க. திருமுடி மணித்துணர் - இந்திர நீலமணியின் கற்றைபோலும் தலை மயிர், பருமுடி - கிரீடம், நிரை - ஏனைய அணிகள். 259

31. முரைசதிர் முழங்கொலி மூரித் தானையுந்
திரைசெறி வளாகமுஞ் சிறுவர்க் கீந்துபோய்
அரைசரு மாயிர ரரசர் கோவொடு
விரைசெறி மணிமுடி விலங்க நீக்கினர்.

பயாபதி முனிவரனேடு ஆயிரம் சிற்றரசர்கள் பேரிகை ஒலியோடு முழங்கி ஒலியிடும் நால்வகைச் சேனையையும், அலைகடல் சூழ்ந்த பூபாரத்தையும், தங்கள் தங்கள் சிறுவர்களிடம் கொடுத்து, வனம் சென்று மணங்கமழும் மயிர் முடி முதலியவற்றை முறைப்படி துறந்து, தவவேடங்கொண்டார்கள். 260

32. முடிகளுங் கடகமு முத்தி ஞரமுஞ்
சுடர்விடு குழைகளுந் துளும்பு பூண்களும்
விடுசுடர்க் கலங்களும் விட்டெ றிந்தவை
[1]படுசுடர் தாமெனப் பரந்தி மைத்தவே.

அவ்வனத்தின்கண், அரசர் பலரால் கழற்றி விடப்பட்ட முடிகளும், கடகங்களும், முத்தாரங்களும்,

பா - பே. 1. 'படுசுடரா மென, படுசுடர் தானென'

கர்ணத்தோடுகளும், மற்றுமுள்ள பல ஆடை ஆபரணங்களும் ஆகிய அவைகள் சுடர் கெட்டதாமென எங்கும் பரந்து இமைத்தன.

படுதல் - கெடுதல். இனி சூரியன் ஒளிபோலும் மிளிர்ந்தன எனலுமாம். 261

33. வரிவளை வண்ணனு மறங்கொ ணேமியத்
திருவளர் மார்பனுஞ் செல்வன் சென்னிமேல்
எரிவளர் மணிமுடி யிழியு மாயிடைப்
புரிவளைக் கடலெனப் புலம்பு கொண்டனர்.

இரேகை தங்கிய சங்கவர்ணனாகிய விஜயனும், ஆழி ஏந்திய திருவளர் மார்பனான திவிட்டனும், பயாபதி முனிவன் சிரசில் அணிந்திருந்த அனல் போல ஒளிரும் மணி முடியைக் கழற்றி நீக்கும் சமயத்தில் சுரிந்த சங்குகளும் கடலும் ஒலித்தாற்போன்று புலம்பினர்.

'எரிவளர் மணிமுடி' எனவே கிரீடமாயிற்று. சங்குகளையுடைய கடலெனலுமாம். செல்வன் - ஞானச்செல்வன். பயாபதி. 262

34. காதல ராயினுங் காதல் கையிகந்
தேதில ராயின மடிகட் கின்றென
ஊதுலை மெழுகினின் றுருகி னாவர்
போதலர் கண்களும் புனல்ப டைத்தவே.

(அங்ஙனம் புலம்புகொண்ட அக்குமாரர்கள்), 'அடிகளுக்கு யாம் காதலராயினும், இன்று அக்காதல் கைவிடப்பட்டு, அயலாராயினோம்!' என்று ஊதுகின்ற கொல்லன் உலையில் அகப்பட்ட மெழுகு உருகுவது போல மனம் உருகினார்கள். அவர்களுடைய தாமரையொத்த கண்களினின்றும் கண்ணீர் பெருகிற்று. 263

35. முடிகெழு மன்னர்முன் னிறைஞ்ச நம்மைத்தங்
கடிகம ழகலத்துக் கொண்ட காதலெம்
அடிகளு மயலவர் போல வாயினர்
கொடிதிது பெரிதெனக் குழைந்து போயினர்.

'முடியணிந்த பல வேந்தர்கள் முன் நாம் இறைஞ்ச, நம்மைத் தம் விளக்கமாகிய மார்பினிடத்தே அணைத்துக்கொண்ட அன்புடையராகிய நம் அடிகளும் இன்று அயலவர் போலாயினர்! இது மிகவும் கொடியது!' என்று மனங்கசிந்து புலம்பினர்கள்.

மன்னர் - சபையிலுள்ள அரசர். 264

36. தாதுக வகலத்துத் தாமம் வாங்கியும்
மீதுவந் தேறியு மேவல் செய்யுநங்
கோதுக மியாவர்கொண் டாடு வாரெனப்
போதுக முடியினர் புலம்பொ டேகினர்

'பூவிதழ் சொரியும் வண்ணம் மார்பின் மாலை வாங்கியும் மார்பின் மீது உவந்து ஏறியும் ஆணை செலுத்தி விளையாடும் நம் சீராட்டினை நம்வேந்தரைப் போல இனிக் கொண்டாடுபவர் யாவருளர்?' என்று இளைஞரிருவரும் முடிமலர் சொரிய அறைந்தழுது புலம்பினர்.

கைதுகம் என்பது, கோதுகம் என மருவிற்று. 265

37. நின்றிலா நிலைமையி னீங்கி நின்றதோர்
வென்றியா லுலகுடன் வணக்கும் வீரியம்
இன்றுகோன் புரிந்ததற் கிரங்கல் வேண்டுமோ
என்றுதா னிளையரை முனிவர் தேற்றினர்.

'நிலையாமையை நிலையாகவுடைய இவ்வாழ்க்கையினின்றும் நீங்கி ஒப்பற்று நின்ற வினைப்பகைவரை வெல்லும் வெற்றியால் மூவுலகமும் வணங்கச் செய்யும் அனந்த வீரியத்தை இன்று நம் கோன் விரும்பித்

துறவு மேற்கொண்டதற்கு இங்ஙனம் வருந்த வேண்டுமோ?' என்று இளைஞரை பிஹிதாஸ்ரவ முனிவர் தேற்றினர்.

"நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை."

என்பது தேவர் குறள். தான் - அசை. 266

38. அணங்குசா லடிகள தருள தாய்விடிற்
பிணங்கிநாம் பிதற்றிய பேதை வாய்மொழி
குணங்கடா மல்லகோன் குறிப்பு மன்றென
வணங்கினர் மணிமுடி மான வீரரே.

'தெய்வத்தன்மை வாய்ந்த அடிகளது அருள் அங்ஙனமாயின், மாறுகப் பிதற்றிய பேதைமையான நம் வாய்மொழி நற்குணங்களே அல்லாதனவாகும். நம் இறைவரின் குறிப்பும் அஃதன்று,' என்று வாய் விட்டுக் கூறி அபிமானமுடைய மணிமுடி வீரர்களாகிய மைந்தர்களிருவரும் வணங்கினர்கள். 267

39. திருவுடை யடிகடஞ் சிந்தைக் கேதமாம்
பரிவொடு பன்னிநாம் பயிற்றி லென்றுதம்
எரிவிடு சுடர்முடி யிலங்கத் தாழ்ந்துபோய்
மருவுடை வளநகர் மன்னர் துன்னினர்.

'நம் வருத்தத்தைக் கூறி நாம் மனம் கலங்குவது திருத்தன்மை பொருந்திய நம் அடிகளின் தியானத்திற்கு இடையூறாகும்,' என்று மைந்தரிருவரும் தம் முடிமலர் பதியும் வண்ணம் அவர் திருவடியில் தாழ்ந்து வணங்கி, விடைகொண்டு மீண்டும் தம் மனம் விரும்பும் வளநகரத்தே வந்து சேர்ந்தனர். 268

40. பாற்படு செல்வமும் பரவை ஞாலமுங்
காற்பொடி யாகவுங் கருதிற் றின்மையால்
ஏற்புடைத் தன்றுநம் மடிமை யீண்டென
வேற்படை வீரனைத் தொழுது மீண்டதே.

இன்பத்தின் பாற்படும் செல்வத்திருமகளும், கடலை ஆடையாகவுடைய பூமகளும், 'இம்முனிவரன் இன்று நம்மைக் கால் புழுதிக்குச் சமானமாகவும் கருதவில்லை; ஆதலின், இனி நம் அடிமை இம்முனிவனிடம் ஏற்புடைத்தன்று,' என்று வேற்படை வீரனாகிய வேந்தனைத் தொழுது விடைபெற்று மீண்டனர்.

திருமகளும் பூமகளும் வேந்தனை வணங்கி நீங்கினர். எனவே, அரசனது பற்றற்ற நிலைமை பெறப்பட்டதென்க.

269

வேற்படை விடுத்து வீரத் தவவர சதனை மேவி
நூற்படை முனிவர் கண்ணு னேக்கிய நயத்த னாகிப்
பாற்படு விரத நோன்மைப் படைப்பெருந் தலைவ ரைவர்
மேற்படை செய்யச் செல்லும் வினைவரை விலக்க
[வைத்தான்.

பயாபதி முனிவரன் வேல்படை முதலிய அரச பாரத்தை விட்டு விலகி, அனந்த வீரியத்தை அடைவதற்குக் காரணமான தபோ ராஜ்யத்தினைப் பொருந்தி, வினைப் பகைவரை வேரற ஒழிக்க வேண்டி மெய்ந்நூல் வல்லவராகிய முனிவர்களை அமைச்சராய் அமைத்து, அவர்கள் ஞானக்கண்ணால் ஆராய்ந் உரைத்த நூல் நயத்தினைக் கேட்டு, விரதங்களிலும் தவங்களிலும் நிகழ்வதாகிய **பஞ்சாசாரம்** என்னும் ஐவகை வினைகளின் மேல் படையெடுத்து வருமாறு அவர்களுக்குச் சேனாதிபதி பட்டம் சூட்டி, தன் உயிர்க் காவலாக வைத்தான்.

அரசர்களில் வீரனாகிய ஒருவன் தன் பகையரசனை வெல்ல வேண்டி, யானை முதலிய நான்கு வகைச் சேனைகளுடன் கவசம் முதலியன அணிந்து சென்று பகை வென்று, ஆட்சி புரிவது போலவே, தவராச்சியத்தை மேற்கொள்ளும் ஒருவன் நற்பரிணாமங்களாகிற பஞ்சாசாரம், எண்பத்து நான்கு லக்ஷம் குணவிரதம், பதினெண்ணாயிரம் சீலாசாரம் நான்குவகைத் தருமத்தியானம், மூவகைக் குப்தி, ஐம்பொறி வாயில் செல்லாத மனவுறுதி, 22 பரிஷகஜெயம், பன்னிரு வகைச் சம்யமம், தசதருமம், பன்னிருவகை அநுப்ரேக்ஷை, பன்னிரு வகைத் தவம், நான்கு வகை சுக்கிலத் தியானம் ஆகிய சேனைகளுடன் சென்று, மோக நீயம் என்னும் பகையரசனை அவன் சேனைகளுடன் வென்று மூவுலகமும் ஆட்சி புரிவதாக வருணித்தல் மரபு. இதனை,

"ஒளிறுதேர் ஞானம் பாய்மா இன்னுயி ரோம்ப லோடைக்
களிறுநற் சிந்தை காலாள் கருணையாங் கவசஞ் சீலம் [ளாகப்
வெளிறில்வாள் விளங்கு செம்பொன் வட்டமெய்ப் பொருள்க
பிளிறுசெய் கருமத் தெவ்வர் பெருமதில் முற்றி னானே."

என்னும் சிந்தாமணியார் வாக்காலும் உணரலாகும்.

இனி, ஈண்டு ஐவர் என்றது, பஞ்சவித ஆசாரத்தினை. (ஆசாரம் ஒழுக்கம் என்பன ஒரு பொருளன.) ஐவகை ஆசாரமாவன :—ஞானம், தரிசனம், சாரித்திரம், தவம், வீரியம் என்பன. அவற்றுள் ஒவ்வொன்றும் விரி வகையாற் பல விதமாகும். அவற்றுள்,

1. ஞானசாரம் :—1. பரமாகமத்திலுள்ள சொற்களைக் குற்றமின்றி மொழிதல், 2. அச்சொற்களின் பொருள்களை மனத்தில் தரித்தல், 3. அச்சொற்களிலும் பொருள்களிலும் உள்ள குற்றமற்ற தன்மையினை மறவாதிருத்தல், 4. படிப்பதற்குத் தகுந்த காலமும் இடமும் அறிந்து படித்தல், 5. அறிவு வளர்ச்சிக்குக் காரணமான விரதங்களில் ஒழுகுதல், 6. மும்மணிகளிடத்திலும், அவற்றை உடையா

ரிடத்திலும் வணக்கமாயிருத்தல், 7. தாம் கற்றவைகளைப் பிறருக்கு வஞ்சனையின்றிக் கற்பித்தல், 8. நற்குணவான்கள் தம்மை மன்னித்தற்கேற்ப ஒழுகுதல் என எட்டுவிதமாகும்.

2. தரிசநாசாரம் :—1. ஐயமின்மை - திருவறத்தைச் சந்தேகமின்றித் தெளிதல், 2. அவாவின்மை - பற்றின்றியிருத்தல், 3. உவர்ப்பு இன்மை - பரமாணுக் கூட்டங்களின் தன்மையை உள்ளவாறு உணர்ந்து அருவருப்பு இன்றி இருத்தல், 4. மயக்கம் இன்மை - *மூடச் செய்கைகளில் மயங்கி நடவாதிருத்தல், 5. செய்பழி நீக்கல் - உலகோர் செய்த பழியை வெளியாகா வண்ணம் மறைத்தல், 6. திரிந்தாரை நிறுத்தல் - நீதியினின்றும் நழுவினவரை முன்போல நீதியில் நடக்கச்செய்தல், 7. அன்புடைமை - பெரியாரைக் காணின் கன்று கண்ட கறவை போல அன்புடனிருத்தல், 8. அற விளக்கஞ் செய்தல் - திருவறத்தை யாவருக்கும் வஞ்சனையின்றி உபதேசித்தல் என எட்டு விதமாகும்.

3. சாரித்திராசாரம் ;—1. (ஓரறிவு முதல் ஐயறிவு வரையிலுள்ள எவ்வுயிர்களையும்) கொல்லாமை, பொய்யாமை, களவின்மை, காமமின்மை, அகப் பற்றுப் புறப் பற்று இன்மை ஆகிய மஹா விரதம் ஐந்தும், நடத்தல், பேசுதல், உணவு உட்கொள்ளல், பண்டங்கள் பொருள்கள் முதலியவைகளைச் சோதனை செய்து வைத்தல், எடுத்தல், சிறுநீர் மலங்கழித்தல் முதலிய காலங்களில் பிறவுயிர்களுக்குத் துன்பம் நேரா வண்ணம் மிதமாக நிகழ்வதாகிய சமிதி ஐந்தும் ; தீய எண்ணமும், சொல்லும், செயலும் இன்றி அடங்குவதாகிய குப்தி மூன்றும் என்கிற இப்பதின்மூன்றுமாகும். இதனை வடநூலார் பஞ்ச மஹாவிரதம், பஞ்ச சமிதி, த்ரிகுப்தி ' என சாரித் ராசாரம் த்ரயோதசவிதம் ' என்பர்.

---

*"இருள்நீங்கி யின்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு," (குறள் : 352)
என்று தேவர் கூறியது இங்கு ஒப்பிடத்தகும்.

4. தபாசாரம் :—அனசனம் முதலிய பன்னிரண்டு விதமாகும். இந்நூல், 166ஆம் செய்யுளிற் காண்க.

5 வீரியாசாரம் :—1. உணவினாலாகிய பல வீரியம், 2. கர்ம உபசமத்தாலாகிய சாமர்த்திய வீரியம், 3. உடலினாலாகிய சத்தி வீரியம், 4. தைரியத்தினாலாகிய பராக்கிரம வீரியம், 5. மனத்தினாலாகிய *த்ருதி வீரியம் என ஐந்து விதமாம்.

விரதத்தின் பாற்படும் நோன்மையென்றியைக்க. நோன்மை - தவம்.

இனி, வினைப்பகைவரின் விவரமாவன :

வினைகள் காதி அகாதி என இரண்டு வகைப்படும். அவற்றுள் ஒவ்வொன்றும் நான்கு பிரிவினையுடையதாக, (வினைகள்) எட்டாகும். அவற்றுள் ஒவ்வொன்றிலுமுள்ள உட்பிரிவினால் அவை 148 ஆகும்.

"காதியாகாதியும் நூற்று நாற்பத்தெட்டுக் கர்மம் கெடுத்த மணியே," என்று அப்பர் ஆண்டார் தோத்திரத்தில் கூறுவது காண்க. அவை வருமாறு :—

| காதி வினைகளும் உட்பிரிவும் | | | அகாதி வினைகளும் உட்பிரிவும் | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஞானாவரணீயம் | 5 | 1. | வேதநீயம் | 2 |
| 2. | தரிசனாவரணீயம் | 9 | 2. | ஆயுஷ்யம் | 4 |
| 3. | மோஹநீயம் | 28 | 3. | நாமம் | 93 |
| 4. | அந்தராயம் | 5 | 4. | கோத்திரம் | 2 |
| | ஆக | 47 | | ஆக | 101 |

ஈண்டுக் கூறிய காதி வினையின் விரிவு நாற்பத்தேழாயிருப்பினும், அகாதி வினையின் பிரிவான நாம கருமத்தில்

* த்ருதி என்பது தைரியத்தைக் குறிக்கும் சொல். இதில் சிற்சில வேறுபாடு உண்டு.

பதின்மூன்றும், ஆயுஷ்யத்தில் மூன்றும் சேர்ந்து காதிவினையின் விரிவுவகை அறுபத்து மூன்று என்றும்; நாம கருமத்தில் (எஞ்சி நின்றன) எண்பது, ஆயுஷ்யம் ஒன்று, வேதநீயம் 2, கோத்திரம் 2 ஆக அகாதி வினையின் விரிவு எண்பத்தைந்து என்றும் கூறப்படும். இதனை,

"ஆயிடை யெண்பத்தைந்து வினை விட்ட வக்கணத்தே
போயுல குச்சி புக்கான் பொருந்தியெண் குணங்களோடும்"

என்று (மேரு. 811ல்) கூறுவதனலறியலாகும்.

1. ஞானவரணீயம்—(ஒளியை மறைக்கும் இருள்போல) உயிரின் இயற்கைக் குணமான அறிவை விளங்கவொட்டாது தடுப்பது.

2. தரிசனவரணீயம்—அவ்வாறே காட்சியை விளங்கவொட்டாது தடுப்பது.

3. மோகநீயம்—கள் குடித்தவனைப்போல உண்மைப் பொருள்களை அறியவொட்டாது மயங்கச் செய்வது.

4. அந்தராயம்—பிறர் துய்க்கவொட்டாது தடுக்குங் காவற்காரனைப்போலப் போகம் முதலிய சுகம் அடையவொட்டாது தடுப்பது,

5. வேதநீயம்—தேனையும் விஷத்தையும் பூசப்பெற்ற வாளாயுதத்தின் இரண்டு வாயிலும் முறையே நா வைத்து அறுபட்டவன் அடையும் இன்ப துன்பம் போலப் பிறவியின் சுகதுக்கத்தை அளிப்பது.

6. ஆயுஷ்யம்—காலிற்பூட்டிய இருப்புத்தளை போல நாற்கதிகளில் தங்கச் செய்வது.

7. நாமம்—ஓர் ஓவியன் பல சித்திரங்கள் வரைந்தாற் போன்று உடலின் உருவம் முதலியன அமையச் செய்வது.

8. கோத்திரம்—சிறிதும் பெரிதுமாகிய பாண்டங்களைச் செய்யும் குயவனைப்போல உச்ச நீச குலங்களிற் பிறக்கச் செய்வது. இதனை மேருமந்தர புராணம் 613, 614-ஆம் பாடல்களால் அறியலாகும். 270.

குணப்படை [1]யிலக்க மெண்பான் குலவுநான் காகுஞ் [சீலக்
கணப்படை பதினெட் டாகு மாயிரங் கருவி யாகத்
துணைப்படை பிறர்க்குச் செய்யுந் துன்னயத் தளவுநீக்கி
மணப்புடை சிந்தை யென்னு மடந்தையைச் செறிய [வைத்தான்.

பயாபதி எண்பத்து நான்கு லக்ஷம் குணவிரதங்களையும், பதினெண்ணாயிரம் சீலாசாரங்களையும் தன் காலாட்படை(களின் கருவி)களாக்கி, வினைப்பகைவர்க்குத் துணைப்படையாக உதவி செய்யும் துர்நயமாதைத் தன் கண் சேராதவாறு நீக்கி, நன்மையைத் தரும் தருமத்யானமாகிற மாதரசைத் தன்னிடத்துச் சேரும்படி நிலை நிறுத்தினன்.

சிந்தை - தர்ம த்யானம். துர்நயம் - ஆர்த்த ரௌத்ர த்யானங்களும், அவற்றிற்குக் காரணமாகிய கிருஷ்ணநீல கபோதலேஸ்யை முதலியனவுமாகும்; அந்தத் தியானங்களுக்குச் சிந்தையென்று பெயர் வழங்கியிருத்தல் காண்க.

' ஆர்த்தரௌத் திரத்த சிந்தை
அறவெறிந்து உயிரை மாற்றின்
பேர்த்துமுத் திக்கண் வைக்கும்
தர்மசுக் கிலதி யானம் ''—(மேரு மந்தர புராணம்).

குணவிரதம் சீலாசாரம் முதலியன பதார்த்த சாரத்தில் கண்டு கொள்க. சிந்தை - தியானம். தருமத்தியானம் நான்கு வகை. அவை,

1. ஆக்ஞா விசயம் - இறைவனருளிய தத்துவங்களை விசாரித்தறிதல்.

2. அபாய விசயம் - பிறவிச் சுழற்சியின் அபாயத்தை விசாரித்தறிதல்.

---

பா - பே. 1. ' யிலக்க மெண்பத் தீரிரண்டாகும் '

3. விபாக விசயம் - 148 கர்மங்களின் அனுபாகம் முதலியவற்றை விசாரித்தறிதல்.

4. சம்ஸ்தான விசயம் - இம்மூவுலகிலும் உத்தமர்கள் வாழும் இடங்களையும் அக்ரத்திமஜிநாலயம் முதலியவற்றையும் விசாரித்தறிதல் என்பனவாம். இந்நான்கும் சுக்கிலத்யானத்திற்குக் காரணமாதலின், இவற்றை முதற்கண் கூறினார். 271

**செறிவெனப் படுவ மூன்று செழுமதில் செறியச் செய்து**
**பொறியெனும் வாயிலைந்து பொற்கத வடைத்து மாற்றி**
**அறிவமை சிந்தை யின்மாட் டகம்படி யுழைய ராக்கிக்**
**கறையிலீ ரறுவர் நிற்ப விறைவராக் காக்க வைத்தான்.**

பயாபதி அரசன், அடக்கம் என்று கூறப்படுவதாகிய (மனோகுப்தி, வசனகுப்தி, காயகுப்தி என்னும்) மூன்று குப்திகளையும், (பகைவர் தாண்ட வியலாத) செழுமை பெற்ற அரண் மதிலாகச் சேரச் செய்து, ஐம்பொறிகள் வழியாக வரும் ஐம்புலன்களாகிய கோட்டைக் கதவுகளைத் தாளிட்டு, அறிவும் உள்ளமும் ஒத்துழைக்கின்ற உள்ளும் புறமுமாகிய 22 பரீஷக ஜெயம் என்னும் தூதுவர்களை உழையர்களாக்கி, குற்றமற்ற பிராணி சம்யமம் விஷய சம்யமம் என்னும் சிற்றரசர்களைத் தனக்குப் படைத்துணையாக வருமாறு திரட்டி வரவழைத்தான்.

குப்தி மூன்றும் ஒன்று சேர்ந்தால்தான் பயன்படும். ஆதலின், 'செறிவெனப் படுவமூன்று செழுமதில்' என்றார். ஈண்டு மதில் ஒன்றேயென்றுணர்க. மெய் வாய் கண் மூக்குச் செவி ஆகிய ஐந்தும் கதவாக உருவகம் செய்தார். நான்கு திசைக்கும் நான்கு (கோட்டை) கதவும் ரகஸ்ய சுரங்கக் கதவு ஒன்றும் இருத்தல் மரபு. முத்தியை எய்துமவர் தவம் பொருந்தித் தியானம் குலையாது விரதத்தில் நிற்கவேண்

டின், தம்க்கு நேரிடும் துன்பங்களைப் பரிகரி(த்து நீ)க்க முயலாது அவைகளைச் சகித்து ஜயிக்க வேண்டும். அந்த வேதனைகளுக்கு, 'பரீஷகம்' என்பதும், அவைகளுக்கு மனந்தளராது சஹிப்பதற்குப் 'பரீஷக ஜெயம்' என்பதும் பெயர். அவை மன சம்பந்தமானவை 13ம், உடல் சம்பந்தமானவை 9ம் என்றறிக. அவற்றுள், மன சம்பந்தமானவை வருமாறு:—1. பசி உண்டாதல், 2, தண்ணீர்த் தாகம் உண்டாதல், 3. வியாதி உண்டாதல், 4. ஆடை இல்லா திருத்தல், 5. வெறுப்புண்டாதல், 6. முனிவர் உணவு ஏற்கச் செல்லல், 7. படுத்திருத்தல், 8. யோகத்திருத்தல், 9. பிறரை யாசித்தல், 10. நஷ்டமெனக் கருதல், 11. அறிவின்மை, 12. அஞ்ஞானமுடைமை, 13. காட்சியின்மை என்பனவாம். உடல் சம்பந்தமானவை வருமாறு:— 1. குளிர்தல், 2. உஷ்ணமர்தல், 3. மாதர் நினைவு வரல், 4. ஆக்ரோசம் வரல், 5. கொலை புரிதல், 6. தீயவூறுண்டாதல், 7. மாசு படிதல், 8. பிறர் கொண்டாடல், 9. சத்கார புரஸ்காரமாதல் என்பனவாம். இவற்றை மேரு மந்தரம் 786, 787-ஆம் கவிகளில் கண்டுகொள்க. சம்யமம்-விரதம். அவை இரு விதம். பிராணி சம்யமம் விஷய சம்யமம் என. அவை வருமாறு:—

மண், நீர், நெருப்பு, காற்று, மர வகைகள் (ஆகிய ஓரறிவு உயிர்களையும், இரண்டறிவு மூவறிவு நாலறிவு ஐயறிவு ஆகிய) ஏனைய நகரும் தன்மையுள்ள உயிர் வகைகள் என்னும் பிராணிகளையும் துன்பம் நேரவொட்டாது காப்பாற்றுவது பிராணி சம்யமம் என்றும்; மெய், வாய், கண், மூக்கு, காது, மனம் ஆகிய இந்த அறுவகைப் பொறிகளின் மூலம் ஏற்படும் புலன்கள் வழியே நம் நினைவு செல்லவொட்டாமல் தடுத்துக் காப்பாற்றுவது விஷய சம்யமம் என்றும் அறிக. 272

**படைகெழு புரிசை வெல்வார் புறநின்று பதின்மர் காக்க**
**விடையவர் தம்மு ளாரே யுழையரீ ரறுவ ராக**
**உடையதன் னுலக மூன்று மொருவழிப் படுக்க லுற்று**
**மிடைகெழு வினைவர் தானை மெலியமேற் சென்று**
**[விட்டான்.**

*அரசன், பகை வெல்லும் தன்மையுள்ளாராகிய உத்தமக்ஷமை முதலிய (தசதர்மம் என்னும்) பதின்மர் ஆயுதம் ஏந்தித் தன் சேனையின் புறத்தே எதிரே நின்று காவலாகச் செல்ல, ரிஷபம் போலும் விட புருஷர்களாகிய அனித்தியம் முதலிய த்வாதச அனுப்ரேக்ஷை என்னும் பன்னிருவரும் தன் அகத்தே நின்று மெய்காப்பாளராக வர, தன் ஆளுகைக்குட்படவேண்டிய உலகம் மூன்றையும் தனக்கு வசமாக்கும்பொருட்டு நெருங்கிய குழுவினர்களாகி ஆயுதந் தாங்கிய வினைப்பகைவர்களின் சேனை மெலியும் வண்ணம் படையெடுத்துச் சென்று அவர்கள் கோட்டையை (முற்றுகையிட்டான்) வளைத்தான்.*

*புரிசை வெல்வது - புறப்பொருள் வகை எட்டனுள் 'பகையரண் வளைத்தல்' என்பதின்பாற்படும் எனினுமாம்.*

**தசதர்மம் ஆவன :—**

'**உத்தம க்ஷமை** - *கோபங் கொள்ளாதிருக்கத்தக்க மிக்க பொறுமை. அதாவது, தன்னை அறுப்பவனுக்கும் நிழலைத் தரும் மரத்தைப் போலவும், அவ்வாறே அரைப்பவனுக்கும் குளிர்ச்சியைத் தரும் சந்தனக்கட்டை போலவும், பிறன் ஒருவன் தனக்கு ஒன்றன்பின் ஒன்றாகப் பல துன்பங்கள் செய்த போதிலும் அவன்மேல் கோபங்கொள்ளாது க்ஷமை செய்வதுமன்றி அவனுக்கு இன்பத்தை அளிப்பது உத்தம க்ஷமையாகும்.*

2. **உத்தம மார்த்தவம்** - *மென்மையான உள்ளத்துடன் கர்வமில்லாதிருத்தல். அதாவது, கர்வம் சிறிதளவும் இல்லாமல் வணக்கமுடையவர்களாகி, ஏற்றத் தாழ்வின்றி யாவ*

ருக்கும் அறம் பகர்ந்து, உள்ளம் பஞ்சைப்பார்க்கிலும் மென்மையுடையதாயிருத்தல்.

3. உத்தம ஆர்ஜவம்—வஞ்சனை மாயம் முதலியன இல்லாமல் நேர்மையான மென்மையுடையராதல். அதாவது, மாணிக்கத் தீபம்போல உள்ளும் புறமும் ஒளிர்ந்து மேன்மை பெறும் நேர்மையுடன் (ருஜு பரிணமத்துடன்) மிளிர்ந்து ஒப்பற்ற விதமாக மனம் வாக்குங் காயம் மூன்றும் தூய்மையராதல்.)

4. உத்தம சத்தியம்—சிறந்த சத்தியத்தையே பேசல், அதாவது, தனக்குப் பிரியமான சிலவற்றில் ஆசையும், தனக்குப் பிரியமில்லாத சிலவற்றில் கோபமும், தத்துவத்தின் உண்மைத் தன்மையினை உணராத மயக்கமும் ஆகிய (ராகம், த்வேஷம், மோகம் என்னும்) முக்குற்றமும் நீங்கியவர்களாகி உயிர்களுக்கு உறுதி பயப்பனவாகிய சத்தியத்தையே பகர்தல்.

5. உத்தம சவுசம்—பரிசுத்தமான தூய குணமுடைமை. அதாவது, ஐம்பொறி வாயிலாக வரும் விஷய சுகங்கள் தீமையைத் தரும் என்று துறந்து நீக்கிய பின், தனக்கு எத்தகைய சோர்வு ஏற்பட்டபோதிலும் மீண்டும் அப்புலன்களில் மனம் செல்லவொட்டாது தடுத்து நிறுத்தும் களங்கமற்ற தூய உள்ளமுடைமை.

6. உத்தம சம்யமம்—மேலான விரதங்களில் நிகழ்தல். அதாவது, 43-ஆம் கவியில் கூறிய பிராணி சம்யமம் விஷய சம்யமங்களில் பொருந்தி நிகழ்தல்.

7. உத்தம தவம்—நூல்களில் கூறியவாறு இருவகைத் தவங்களில் தப்பற நிகழ்தல். அதாவது, துறவு சருக்கம் 166-ஆம் கவியில் கூறிய பாஹ்யாப்யந்தர தவங்களில் நூல் முறைப்படி நிகழ்தல்.

8. உத்தம தியாகம்—முக்தியையெய்தும் பக்குவம் உடையவர்களுக்கு அவர்கள் துறவு கொள்வதற்குக் காரணமாகிய திருவறத்தை உபதேசித்தல்.

9. உத்தம ஆகிஞ்சின்யம்-(பாஹ்யாப்யந்தர பரிக்ரஹங்கள் இரண்டில்) ஒன்றிலும் பற்றில்லாமை. அதாவது,

1. க்ஷேத்திரம் - நிலம்
2. வாஸ்து - வீடு } முதலியன
3. ஹிரண்யம் - வெள்ளி
4. சுவர்ணம் - பொன் } முதலியன
5. தனம் - திரவியம்
6. தான்யம் - தானியம் } முதலியன
7. தாஸி - வேலைக்காரி
8. தாஸன் - வேலைக்காரன் } முதலியோர்
9. குப்யம் -
10. பாண்டம் - } பொன் வெள்ளிப் பாத்திரம் முதலியன.

ஆகிய பாஹியபரிக்கிரகம் பத்திலும்,

1. குரோதம் - கோபம்,
2. மானம் - கர்வம்,
3. மாயம் - நேர்மையின்றி வஞ்சனை புரிதல்,
4. லோபம் - உலுத்த குணம்,
5. மித்யாத்வம் - அறுவகைப்பொருள்களின் உண்மையறியாது மயங்கல்,
6. ஸ்த்ரீ வேதம் - (மறு)மர்தரை நினைத்தல்,
7. புருஷ வேதம் - மனிதனை மனிதன் கண்டு மயங்கல்,
8. நபும்ஸக வேதம் - பேடியின் தன்மையினுறுதல்.
9. ஹாஸ்யை - பரிகாசம் செய்தல்,
10. ரதி - பொருள்களில் விருப்பு,
11. அரதி - பொருள்களில் வெறுப்பு,
12. சோகம் - சோகப்படல்,
13. பயம் - ஏழுவகைப் பயம் அடைதல்,

14. ஜுகுப்ஸை - அருவருப்பு,
என்னும் அப்யந்தர பரிக்கிரஹம் பதினாலிலும் ஒன்றிலும் சேராது பற்றற்றிருத்தல்.

10. உத்தம பிரமசரியம்—எக்காலத்தும் எந்தக்காரணத்தைக் கொண்டும் மாதரையே விரும்பாதிருத்தல் என்பனவாம். 273

45. பின்னணி யோகு நான்மை
யபரகாத் திரம்பெற் றேனைத்
தன்னவ யவங்கண் முற்றித்
தயங்குநூன் மனங்க ளோவா
துன்னிய திசையி னுய்க்கு
முணர்வெனும் வயிரத் தோட்டி
இன்னியன் ஞான வேழத்
தெழிலெருத் தேறி னானே.

பிரதமானுயோகம் முதலிய நான்கையும் நான்கு கால்களாகவும், இனிய இயல்புடைய நன்ஞானமென்னும் யானையின் மத்தகத்தே மனத்தில் இடைவிடாது கருதிய முத்தி(யென்னும் திசை)யில் கொண்டு போய்ச் சேர்க்குமாறு உணர்வு என்னும் வயிரத்தாலாகிய அங்குசத்தைக் கொண்டு, ஏறினான் (ஆரோகணித்தான்)

யோகம் நான்கு 1 பிரதமானுயோகம் - தீர்த்தங்கரர் இருபத்து நால்வர், சக்கரவர்த்திகள் பன்னிருவர், வாசுதேவர் பலதேவர், பிரதிவாசு தேவர் ஆகியோர் இருபத்தெழுவர், ஆகிய (63) திரிஷஷ்டி சலாகா புருஷர் சரிதத்தினையும் அவ்வவக்காலத்தின் முக்கியமானவர்களின் சரிதத்தினையும் தெரிவிப்பது.

2. கரணானுயோகம் - லோக ஸ்வரூபத்தினைத் தெரிவிப்பது.

3. சரணானுயோகம் - முனிவர்களின் சாரித்திரம் முதலிய வற்றைத் தெரிவிப்பது.

4. த்ரவ்யானுயோகம் - பஞ்சாஸ்திகாயம், ஷட்த்ரவியம், சப்ததத்துவம், நவபதார்த்தம் முதலிய தத்துவங்களைத் தெரிவிப்பது. அபரம் - யானையின் பின்னங்கால், காத்திரம்- முன்னங்கால். தோட்டி - அங்குசம். 274

46. தருக்கெயில் காப்பு வாங்கத்
தடக்கைமால் பகடு நுந்தித்
திருக்கிளர் குணமேற் சேடிச்
செழுமலைக் குவட்டி னோட்டி
முருக்கிய வுருவு வேட்கை
முனைப்புல மகற்றி முற்றிச்
செருக்கிய வினைவர் வாழுந்
திண்குறும் பழிக்க லுற்றான்.

அரசன் கர்வம் முதலிய பகைவரின் கோட்டை மதிலின் காவலைத் தகர்த்தெறிய வேண்டி, பெரிய துதிக்கையையுடைய ஞானவேழத்தைச் செலுத்தி, முத்தி நாயகியோடு பொருந்தச் செய்யும் அப்ரமத்தன் முதலிய க்ஷபகஸ்ரேணியிலேயே ஏறும் பொருட்டு ஓட்டி, விடாது பற்றித் தொடரும் உடல் (அவயங்கள்) அமைவதற்குக் காரணமான வேட்கையாகிற பகையறிவை அகற்றி முடித்து, மயக்கத்தைச் செய்யும் வினைப்பகைவர் வாழும் திண்ணிதாகிய கோட்டையை அழிக்கலுற்றான்.

இனி முருக்கிய உருவு வேட்கை என்பதற்குத் தன் சுய உருவமான சித்த ரூபத்தை ஆகவொட்டாது தடை செய்யும் ஆசை எனினும் அமையும். வேட்கைப் பகை வெல்வது சம்வரை. வினைப்பகை வெல்வது நிர்ஜரை.

அங்ஙனம் வினை வென்று அழிக்கும் போது குணஸ்தான வரிசைகளில் (சிரேணி) முறையாக ஏறி, காதி

(அகாதி) வினைகளை வெல்லுதல் மரபு. அதாவது, அறிவு வளர்ச்சிக்கு ஏற்பப் பலவாறு கல்வி நிலையங்களில் பல வகுப்புக்கள் ஏற்பட்டிருப்பது போலக் குணங்களையும் செயல்களையும் அனுசரித்து மக்களின் நிலை பதினன்கு வகையாக ஏற்பட்டுள்ளன. அவை குணஸ்தானம் என்று வழங்கப்படும்.

அவை வருமாறு :—1. மித்தியாதிரஷ்டி, 2. சாசாதனன், 3. மிச்ரன் (இம்மூவரும் தாழ்ந்த நிலையினர்).

4. அசம்யதன் - நற்காட்சி மட்டும் உடையனுகி விரதம் இல்லாதவன். அசம்யத சம்யக்த்ரஷ்டி எனவும் கூறப்படும்.

5. தேச சம்யதன் - அணுவிரதங்களை மட்டும் அனுஷ்டிப்பவன் இந்தத் தேச சம்யதனையே தரிசனீகன் முதலாகப் பதினொரு சிராவக நிலையினராகப் பிரித்துக் கூறுவர், (விவரம் யசோதர காவியம், 37-ஆம் பக்கம் பார்க்க.)

6. பிரமத்தன்-15 பிரமாதங்களையுடையவன் (நாடு, அரசன், பெண்கள், உணவு ஆகியவற்றில் விருப்பம் தரக் கூடிய விகதை நான்கு, கோபம் கர்வம் மாயம் லோபம் ஆகிய கஷாயம் நான்கு, மெய் வாய் மூக்குக் கண் செவி என்ற பொறி ஐந்து, சிநேகம் ஒன்று, மோகம் ஒன்று ஆகிய பதினைந்து வகை பிரமாதங்களையுடையவன்.)

7. அப்பிரமத்தன் - (முனிவர் தன்மையில்) தவறாது ஒழுகுபவன்.

8. அபூர்வகரணன் - (முதல் சுக்கிலத்தியானத்துடன்) கர்மங்களைக் கெடுக்கின்ற தன்மையனுகி முன் என்றுமில்லாத சுத்த பரிணமத்துடன் பந்தம், சத்வம், உதயம், உதீரணை ஆகிய நான்கு தன்மையினையுமுடையவனுகி நிகழ்பவன் விவரம் யசோ. 69ம் பக்கம் பார்க்க).

9. அநிவ்ரத்தி கரணன் - தனக்குரிய இரண்டு நாழிகையின் கடைசியில் ஒன்பது சமயத்தில் சமயந்தோறும்

வரிசையாக (16-ம், 8-ம், 1-ம், 1-ம், 6-ம், 1-ம். 1-ம், 1-ம், 1-ம், ஆகிய) முப்பத்தாறு கர்மங்களை வெல்பவன்.

10. ஸூக்ஷ்ம ஸாம்பராயன்-சூட்சுமலோபம் ஒன்றை மட்டும் ஜெயிப்பவன்.

11. உபசாந்த கஷாயன் - கர்மங்களை உபசரிக்கச் செய்ப வன். (இது உபசம சிரேணியில் ஏறுமவர்களுக்கேயாகும்.)

12. க்ஷீண கஷாயன் - காதி வினையின் பிரிவு நான்கை யும் கெடுப்பவன்; மற்றும் அகாதி வினையில் எஞ்சியுள்ள 16 கர்மங்களையும் கெடுப்பவன்.

13. ஸயோகி கேவலி - கேவல ஞானத்தைப் பெற்ற இறைவனாகிய அரஹந்தன் தன்மையை அடைபவன்.

14. அயோகி கேவலி - (அகாதி வினை 85-ம் கெட சரீரம் விட்டு மேனோக்கிச் சென்று சித்தராபவன்.

இப்பதினான்கனுள் ஒன்று முதல் ஐந்து வரை இல்லறத்தாரின் குணங்களையும் செயல்களையும் அனுசரித் தும், ஆறு முதல் பன்னிரண்டு வரை முனிவர்களின் குணங்களையும் செயல்களையும் அனுசரித்தும், பதின் மூன்றும் பதினான்கும் இறைவனின் தன்மையை அனுசரித் தும் கூறப்பட்டனவாகும்.

இல்லறத்தாருக்குக் கூறப்பட்ட ஐந்து குணஸ்தானங் களுள்ளும், முதல் மூன்று குணஸ்தானங்களில் உள்ளவர் களுக்கு நற்காட்சி பெறும் சக்தி இல்லையாதலின் [1] அவர் கள் எக்காலத்தும் பிறவிப் பெருங்கடலிலேயே சுழல வேண்டியவர்களே. அதாவது அம்மூன்று குணஸ்தானத்து சம்யக்த்வம் (நற்காட்சி பெறும் சத்தி) இல்லையாதலின், அவை பயனற்றவை என்க.

1. "சப்த ப்ரக்ரதிகளினுடைய உபஸமாதிகள் த்ரிகாலத்தும் கூடாவாகையால், அவர்களே அபவ்யர்கள்' என்று பதார்த்தசாரம் முதலியவற்றுள் கூறுவதனுலுணராகும்.

நான்காவது அசம்யத சம்யக்த்ரஷ்டி என்பவன் (நாலாங் குணஸ்தானவர்த்தி) விரதமில்லாதவன் நற் காட்சியை மட்டிலும் பெறுபவன் (மேருமந்தரம் 160-ஆம் பக்கம் பார்க்க.)

இல்வாழ்வானுக்குக் கூறிய இந்த நாலாங்குணஸ் தானத்தை அடைந்த பிறகே ஒவ்வொருவரும் முத்தியை அடைய வேண்டும். [1] ஆகவே, அந்நிலையினரைத் தலைமை யுடையராகப் போற்றுவர்.

முத்தியை அடைய முயலும் அனைவருக்கும் இவன் முதன்மை பெற்றவன் என்றுணர்க. மற்றும் நிச்சங்கை முதலிய எட்டு அங்கங்கள் உடையதும், 25 மலங்கள் நீங்கிய தும், இறைவன், முனிவன், நூல் இவைகளில் நம்பிக்கையுள் ளதும், ப்ரசம சம்வேக அனுகம்ப ஆஸ்திக்யச் சின்னமுடை யதுமாகிய நற்காட்சியைப் பெறும் இவர்கள் சம்யக்த்வத்தின் பிரிவாகிய உபஸமம், வேதகம், க்ஷாயிகம் என்ற மூன்றில் ஒன்றை அடைந்து மேன்மை பெறுவர். அவற்றுள்,

உபஸமம் என்பது, அனந்தானுபந்தி க்ரோதம், அனந் தானுபந்தி மானம், அனந்தானுபந்தி மாயம், அனந்தானு பந்தி லோபம், மித்யாத்வம், சம்யக் மித்யாத்வம், சம்யக்த்வ ப்ரக்ரதி ஆகிய சப்த ப்ரக்ரதிகள் ஏழும் உதயத்திற்கு வாரா மல் இரண்டு நாழிகை அடங்கியிருத்தல்.

2. வேதகம் என்பது, மேற்கூறிய சப்த ப்ரக்ரதி ஏழில் சம்யக்த்வ ப்ரக்ரதி மட்டும் உதயத்திற்கு வந்து, மற்ற ஆறும் இரண்டு நாழிகை அடங்கியிருத்தல்.

1. இவர்கள் முத்திக்குக் காரணமான நற்காட்சியை அடைந்து இப்பெயர் பெற்றனராதலின்,

"இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை."

என்று தேவர் கூறியது இவர்களைக் குறிக்கும் என்ப.

3. க்ஷாயிகம் என்பது, மேற்கூறிய சப்த ப்ரக்ருதிகள் ஏழும் கெட்டு (அந்த) ஆத்மனிடம் என்றைக்கும் உதயத்திற்கே வாராமல் அழிவது. இந்த சப்த ப்ரக்ருதி ஏழினையும் தரிசன மோகநீயம் என்றும், வினையரசன் என்றும் கூறுதல் மரபு. இதனை, "கெடுவழிதான் கெடாமுன் கேடெந்த வினைக்கும் ஒட்டாது, அடுதலுக்கு அரிய மோகமரசனும்" என்றும், "திரையினை யவித்தான் மாற்றும் திண்கடல் கரையைக் காணும்" என்றும் மேருமந்தரத்தில் 615-720ல் கூறியிருப்பதனாலும் அறியலாம்.

இனி, மேற்கூறிய மூன்று சம்யக்த்வங்களும் எந்தக் குணமுள்ளவர்களிடம் எவ்வாறு நிறைகின்றனவென்பதும் வினை வெல்லும் தன்மையும் கூறப்படும்.

4. அசம்யதன், 5. தேச சம்யதன், 6. ப்ரமத்தன், 7. அப்ரமத்தன் ஆகிய நான்கு குணஸ்தானத்திலுள்ளவர்க்கும். உபசமம், வேதகம், க்ஷாயிகம் ஆகிய மூன்றில் ஏதாவது ஒன்று ஆகும் ; அதாவது, மூன்றில் ஏதானாலும் ஆகும். பின்னர் உபசம சிரேணியில் ஏறுபவராகிய 8. அபூர்வ கரணன், 9. அநிவிருத்தி கரணன், 10. ஸூக்ஷ்ம சாம்பராயன், 11. உபசாந்த கஷாயன் என்ற நான்கு பேருக்கும் உபசம சம்யக்த்வம் ஒன்று மட்டும் ஆகும். இவர்கள் மறுபிறவியில் உத்தம தேவராய்ப் பிறந்து வந்து இன்பம் நுகர்ந்து கடைசியில் க்ஷாயிகம் பெற்று முத்தியை அடைவர்.

இனி, க்ஷபக சிரேணியில் ஏறுபவர்கள் 8. அபூர்வ கரணன், 9. அநிவிருத்தி கரணன், 10. சூட்சும சாம்பராயன், 12. க்ஷீணகஷாயன், 13. சயோகி கேவலி, 14. அயோகி கேவலி என்ற ஆறு குணஸ்தானத்திலுள்ளவர்கள் என்று கூறப்படுவார்கள். இதனை,

"அடக்கமி லானை யாதி நால்வர்க்கு மூன்று மாகும்
உடைத்திடா துவச மிப்பார் நால்வருக் குபச மித்தாங்
கெடுத்தவ ரறுவர்க் காகிற் கேட்டின்க ணுய தாகும்
தடக்கைமா வேந்தே யென்றான் தத்துவத் தவத்து வேந்தன்

என்ற மேருமந்தரம் 724-ஆம் பாட்டினால் உணரலாகும்.

"திருக்கிளர் குணமேற் சேடி செழுமலைக் குவட்டினேட்டி" என்று இதனையே சூளா. முத்தி. 46-ஆம் செய்யுளில் கூறியது காண்க.

க்ஷபக சிரேணியில் ஏறுமவர்கள் மேற்கூறிய அப்ரமத்த குணஸ்தானத்தில், நரகாயுஷ்யம், திர்யகாயுஷ்யம், தேவாயுஷ்யம் ஆகிய மூன்றையும் முன் சொன்ன சப்த ப்ரக்ரதியோடு கெடுத்துப் பின்னர், அனிவ்ரத்தி கரண குணஸ்தானத்தின் காலமாகிய இரண்டு நாழிகையில் அந்தியத்திலுள்ள ஒன்பது சமயங்களில் முதல் சமயத்து (நாம கருமத்தில் பதின்மூன்றும் தரிசனுவரணீயத்தில் மூன்றும் ஆக) பதினாறும், இரண்டாம் சமயத்து (அப்ரத்யாக்யான க்ரோதம், மானம், மாயம், லோபம்; ப்ரத்யாக்யான க்ரோதம், மானம், மாயம், லோபம் ஆக) எட்டும், மூன்ரும் சமயத்து நபும்ஸக வேதம் ஒன்றும், நான்காம் சமயத்து ஸ்த்ரீ வேதம் ஒன்றும், ஐந்தாம் சமயத்து (ஹாஸ்யை, ரதி, அரதி, சோகம், பயம், ஜுகுப்ஸை என்ற) ஆறும், ஆரும் சமயத்துப் புருஷவேதம் ஒன்றும், ஏழாம் சமயத்து சஞ்சுவலனக்ரோதம் ஒன்றும், எட்டாம் சமயத்துச் சஞ்சுவலன மானம் ஒன்றும், ஒன்பதாம் சமயத்துச் சஞ்சுவலன மாயம் ஒன்றும் இவ்வாறு 36 கர்மங்கள் கெடப் பின்னர் சூக்ஷ்ம சாம்பராய குணஸ்தானத்தில் சஞ்சுவலன லோபம் ஒன்றும் கெடுப்பர். இதுவரை முதல் சுக்கிலத்தியான உதவியிலாகும். இனி இரண்டாவது சுக்கிலத்தியானமாகிற வாளினுல் க்ஷீண கஷாய குணஸ்தானத்தில் அந்தியத்திலுள்ள இரண்டு சமயத்தில் முதல் சமயத்து நித்திரை ப்ரசலை என்ற இரண்டையும் வென்று, இரண்டாம் சமயத்துத் தரிசனுவரணீயத்தில் சக்ஷு தரிசனம், அசக்ஷு தரிசனம், அவதிதரிசனம், கேவலதரிசனம் என்ற நான்கும், மதிஞானம் முதலாகக் கூறும் ஞானுவரணீயம் ஐந்தும், தானம் முதலாகக்கூறும் அந்தராயம் ஐந்தும் ஆக பதினன்கையும்வென்று இவ்வாறு அந்த ஆத்மனின் காதிவினைகள் 63ம் கெட, கேவலஞானம் முதலிய நான்கு குணத்தையும் பெற்று, அர்ஹந்தனுகி, இறைவன் தன்மையைப் பெறுதல் மரபு. முத்தியடையும் ஒவ்வொரு ஜீவனும் இம்முறையாகவே இறைவன் தன்மை எய்துதல் முறைமையாகும் என்ப. 275

47. நிறையிலார் பொறுத்தலாற்ரு
நிலையிது நிறைந்த நோன்மைக்

கறையிலீ ராறுக் கொத்த
கண்ணியர் கவரி வீச
முறையினற் பெருகு முள்ளச்
சமாதிநீர் முறுக வுண்ட
குறைவிலாத் தியான மென்னுங்
கொற்றவா ளுருவிக் கொண்டான்.

மனநிறைவிலாதவர் தாங்கவியலாத குணநிலை நிறைந்த குற்றமற்ற தவமாகிய பன்னிரண்டு கன்னியரும் மனமொத்து இரு புறமும் கவரி வீச, ஆகம முறையினல் பெருகியதும், உள்ளத்தே வேண்டுதல் வேண்டாமையில்லாததுமாகிய சமாதி நீரை அளவோடு வடித்து உண்டதும், இரண்டு நாழிகையில் குறையாமல் தியானிக்க வேண்டியதுமாகிய சுக்கிலத்தியான மென்னும் வெற்றி வாளினை உருவி (கையிலே) பிடித்துக்கொண்டான்.

நிலை - குணஸ்தான நிலை, கோன்மை - தவம், பன்னிரு தவம். பாஹ்யதவம், 6; ஆப்யந்தரதவம் 6 எனப்பிரியும். துறவு, 166-ஆம் கவியில் கூறியது காண்க.

நிறையிலார் - மனத்தை வேறொன்றில் செல்லவொட்டாது தடுத்துப்பிடித்து ஆத்ம பரிணாமத்திலேயே நிறுத்தும் வன்மையிலாதார்.

ஈண்டுச் சாமாயிகம் என்பன, முனிவர் அறுவகைக் காலங்களில் ஏற்று நிகழும் கிரியை முதலியன. கிரியா புஸ்தகம் ஸாமாயிக பத்தியிலும் பதார்த்த சாரத்திலும் கண்டுகொள்க. பொன்னும், உடைந்த மண்ஓடும் சமமென்றெண்ணுதல் முதலியனவும் சாமாயிகபாவத்தில் அடங்கும்.

ஸாமாயிகம். ஸ்துதி, வந்தனை, பிரதிக்கிரமணம், பிரத்தியாக்கியானம், காயோத்ஸர்க்கம் ஆகிய ஆறும் முனிவரின் நித்தியக்கடன் என்று கூறுவர் ஆசிரியர்.

சுக்கிலத்தியானம் நான்கு விதம். அவை 1. ப்ரதக்த்வ விதர்க்க வீசாரம்:—உயிரும் உடல் முதலியனவும் வேறு வேறு தன்மையின என்று நன்ருகப் பிரித்து (ஆலோசனை செய்து) அறிதல்.

2. ஏகத்வ விதர்க்க வீசாரம் :—ஆன்ம சொரூபத்தை மட்டும் நன்குக ஆராய்ந்தறிந்து அதிலேயே நிற்றல்.

3. ஸூக்ஷ்மக்ரியாப்ரதிபாதி :—யோகம் முதலியன சூக்ஷ்மமாகச் சுருக்கல்.

4. வ்யுபரதக்ரியா நிவர்த்தி :—எவ்விதச் செயல்களிலும் நிகழாது நிவர்த்தித்தல். மேலே கூறிய நான்கு சுக்கிலத்தியானத்திலும் முதல் இரண்டு சுக்கிலத்தியானத்திலேயே கேவலஞானம் அடைந்துவிடுகின்றனர். மற்ற இரண்டும் உபசாரமாகக் கூறப்பட்டுள்ளன என்றறிக.

இவை ஈண்டு விரிக்கிற் பெருகும். 276

48. விண்கடாஞ் செய்யும் வெய்ய
வினைவர்கட் கரண மாகிக்
கண்கடா மறைக்கு மோரேழ்
கடிவினை பொடிசெய் திட்டுக்
கொண்கடா நவின்ற வீரெண்
கொடிமதிற் கோட்டை குட்டி
எண்கடா முடைய வெண்மர்
குறும்பரை யெறிந்து வீழ்த்தார்.

உயிர்களுக்கு மிக்க மயக்கத்தைச் செய்து, துன்பந் தரும் வினைப்பகைவர் அனைவர்க்கும் பாதுகாப்பாளனுகி (காவலனுகி), நற்காட்சியை ஆகவொட்டாது தடுக்கும் தரிசன மோஹநீயம் என்னும் சப்தப்ரக்ருதிகளை ஆயுள் மூன்றேடு (க்ஷயம் செய்து) அழித்துவிட்டு, க்ஷாயிக சம்யக்த்ரஷ்டியாகி, மதங்கொண்டு பேசுகின்ற பதினுறு பிரக்ருதிகளையும் அவரவர்கள் கோட்டைகளையும் (அனிவ்ரத்திகரண குணஸ்தான காலமாகிய அந்தர் முகூர்த்தத்தின் அந்தியத்திலுள்ள ஒன்பது சமயங்களில்) முதல் சமயத்து அழித்து, எண்ணிக்கையால் எண்மராகிய இளவரசர்களையும், இரண்டாம் சமயத்தில் வாளால் எறிந்து வீழ்த்தினன்.

### மோகநீய கர்மத்தின் விவரம்

நம் உயிரின் இயற்கைக் குணங்களைக் கெடுப்பன முக்குற்றம். அவை :—ஆசை, கோபம், மயக்கம் என்பன. (இவற்றை ராகம், த்வேஷம், மோகம் என்பர் வடநூலார்.) ஆசை, கோபம் இரண்டையுமே வேண்டுதல், வேண்டாமை என்பர் தேவர் (குறளில்). கோபமும் ஆசையுமாகிய அவ்விரண்டுமே. க்ரோதம், மானம், மாயம், லோபம் என நான்காக விரியும். அதாவது, கோபம் - (பகைமைக்குக் காரணமான) **க்ரோதம்,** (கர்வத்தை எய்துவிக்கும்) **மானம்** என இரண்டாக விரியும்; அவ்வாறே ஆசை (உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுதலும் அவ்வாறே நிகழ்வதுமாகிய) **மாயம்,** (மிகு பொருள் வேட்டல் பொருமை கொள்ளல் முதலாகிய) **லோபம்** என இரண்டாக விரியும். ஆகவே, கோபம், ஆசை, இரண்டும் க்ரோதம், மானம், மாயம், லோபம் என நான்காகும். அவை ஒவ்வொன்றும் அனந்தானுபந்தி, அப்ரத்யாக்யானம், ப்ரத்யாக்யானம், சஞ்சுவலனம் என்ற நான்கு வகைபாக மாறி, பதினாறும். அவை கஷாயம் பதினாறு எனப்படும்; இவற்றோடு (ஹாஸ்யை, ரதி, அரதி, சோகம், பயம், ஜுகுப்ஸை, ஸ்த்ரீவேதம், பும்வேதம், நபும்ஸக வேதம் ஆகிய) நவநோகஷாயம் ஒன்பதும், மித்யாத்வம், சம்யக் மித்யாத்வம், சம்யக்த்வப்ரக்ரதி ஆகிய மூன்றும் சேர்ந்து மோகநீயத்தின் பிரிவு 29 ஆகும்.

### அனந்தானுபந்தி முதலியவற்றின் விவரமாவன

(அனந்தங் காலத்திற்குவிடாது தொடர்ந்து வருவது அனந்தானுபந்தியென்பது)

ஔவையார், கயவரின் சினத்திற்கு (ஒருதரம் பிளவு பட்டகல் எவ்வகையிலும் மீண்டும ஒன்றுகக் கூடாத) கற்பிளப்பையும், சான்றோரின் சினத்திற்கு (அதிவிரைவில் தானே கூடும்) நீர்க் கீற்றையும், ஏனையோர் சினத்திற்கு (ஒருவன் பொடிவைத்துக் கூட்டக் கூடும்) பொற்பிளப்பையும் உவமையாகக் கூறிப் போந்தார். இதனை,

"கற்பிளப்போ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளப்போ டொப்பாரும் போல்வரே - விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்." என்ற மூதுரையாலறியலாம்.

இதனையே திருவறத்தில் அனந்தானுபந்தி க்ரோதம், கற்பிளப்பு, அப்ரத்யாக்யான க்ரோதம் நிலப் பிளப்பு, ப்ரத்யாக்யான க்ரோதம் மணற்கீற்று, சஞ்சுவலன க்ரோதம் நீர் கீற்று என்ற நான்கு பிரிவாகக் கூறுவர். இவ்வாறே மானம், மாயம், லோபம் என்பவற்றிற்கும் அனந்தானுபந்தி முதலிய நான்குவகையாகக் கூறப்பட்டுக் கஷாயம் பதினாறாகும்.

அதாவது, ஒரு மனிதனுக்கு க்ரோதம் மானம் மாயம் லோபம் ஆகிய நான்கும் ஒருமுறை ஏற்பட்டவை பல பிறவி வரையிலும் விடாது தொடர்ந்து வருவது அனந்தானுபந்தி யென்றும், அவையே பலவருஷம் வரை தொடர்ந்து நிற்பது அப்ரத்யாக்யானம் என்றும், பல மாதங்கள் மட்டும் தொடர்ந்து நிற்பது ப்ரத்யாக்யானம் என்றும், இரண்டு நாழிகை மட்டும் தொடர்ந்து நிற்பது சஞ்சுவலனம் என்றும் கூறப்படும்.

### கஷாயம் பதினாறுவன

1. அனந்தானுபந்தி க்ரோதம் - கற்பிளப்புப் போல்வது. (என்றும் கூடாதது.)

2. அப்ரத்யாக்யான க்ரோதம் - நிலப்பிளப்புப் போல்வது. (ஒருவர் கூட்டக் கூடுவது.)

3. ப்ரத்யாக்யான க்ரோதம் - மணற்கீற்றுப் போல்வது. (காற்றடித்தாலும் கூடுவது.)

4. சஞ்சுவலன க்ரோதம் - நீர்க்கீற்றுப் போல்வது. (கீறும்போதே தானாகக் கூடுவது.)

5. அனந்தானுபந்தி மானம் - கற்றூண் போல்வது. (நீண்ட நாள் நிற்பினும் வளையாதது.)

6. அப்ரத்யாக்யான மானம் - எலும்பு போல்வது. (நீண்ட நாள் சென்று நுறுங்குவது.)

7. ப்ரத்யாக்யான மானம் - திமிசுத்தூண்போல்வது. (திமிசு - ஒரு வகை மரம்) (சிலகாலத்தில் மட்கி அழிவது.)

8. சஞ்சுவலன மானம் - செங்கொழுந்து போல்வது. (காற்றடித்த போதிலும் தானே வளைவது.)

9. அனந்தானுபந்தி மாயம் - மூங்கில் வேர் (மூட்டியின்) முடங்கல் போல்வது. (பிரிக்கவியலாத சிக்கலும் வலிவும் உடையது.)

10. அப்ரத்யாக்யான மாயம் - தகர்க்கோடு (ஆட்டினது கொம்பின் வளைவு) போல வக்ரமானது.

11. ப்ரத்யாக்யான மாயம் - வாளாயுதத்தில் சிக்கின நார் போல்வது.

12. சஞ்சுவலன மாயம் - விடைநீர் வளைவு (அதாவது எருது நடந்து செல்லும் பொழுது கழிக்கும் சிறுநீரின் வளைவு) போல்வது.

13. அனந்தானுபந்தி லோபம்-கருமான் உலையில் உருகிப் பற்றிய கிட்டம் (சிட்டம்) போல்வது.

14. அப்ரத்யாக்யான லோபம் உசவு (அதாவது வண்டிமை) போல்வது.

15. ப்ரத்யாக்யான லோபம் - நீர் மஞ்சள் (மஞ்சள் தோய்த்த துணி) போல்வது.

16. சஞ்சுவலன லோபம் - துகிலின் நீர் (அதாவது நனைந்த துணியின் நீர்) போல்வது. இதனை,

"மலைநிலனே மணனீர்க்கிற் றிவைவெகுளிக் குவமமாம்
சிலையென்பு திமிசுந்தூண் செங்கொழுந்து பெருமிதக்காம்
முலை மாயை முதிர்வெதிர்வேர்த் தகர்மறுப்பு நார்விடைநீர்
உலையுசவு நீர்மஞ்சட் டுகிலினீ ருலோபக்கே."

என்று சீவக சிந்தாமணி3076-ஆம் பாட்டின் உரையிலுள்ள மேற்கோளாலறியலாம். இதனையே, கோமட சாரத்திலும். அஷ்ட பதார்த்த சாரத்திலும் சிற்சில மாறுதலுடன் கூறுவர்.

### நவநோகஷாயம் ஒன்பதாவன

(நூதனமான மெல்லிய (லேசான) கஷாயம் ஒன்பது)

ஹாஸ்யை முதலிய அறுவகைத் துவர்ப்பும், ஸ்த்ரீ, பும் நபும்ஸக வேதம் மூன்றும் சேர்ந்து நவநோகஷாயம் ஒன்பதாகும். அவை வருமாறு :— ஹாஸ்யை - (கேலியாக) சிரித்தல், ரதி - வேண்டுதல், அரதி - வேண்டாமை, சோகம் - அசைவு (வருத்தம்), பயம் - அச்சம், ஜுகுப்ஸை - அருவருப்பு. (இவை, நகைப்பு, விருப்பு, வெறுப்பு, சோகம்,

அச்சம், அருவருப்பு, எனத் தமிழில் வழங்கும். இவ்வாறும் அறுவகைத் துவர்ப்பு எனப்படும்.)

ஸ்த்ரீ வேதம் - மறுமாதரைக் கண்டு இச்சித்தல், பும் வேதம் - புருடனைக் கண்டு இச்சித்தல், நபும்ஸக வேதம் - பேடியாதல், ஆண் பெண் இருவரையும் இச்சித்தல் ஆகிய இந்த ஒன்பதும் நோகஷாயம - மெல்லிதான கஷாயம் என்றும், இவை மீறும்மாகில் இவையே 16 கஷாயத்திற்கும் மூல காரணமென்றும் கூறப்படும். (வி ளை ய ா ட் டு ச் சண்டை வினையாகும் என்பது பழமொழி.)

இனி, மித்யாத்வம்முதலிய மூன்றும் வருமாறு. மித் யாத்வம் - சேறுபோல்வது, பொருளின் உண்மைத் தன்மை யினை அறியவொட்டாது தடுப்பது. சம்யக் மித்யாத்வம் - சேறும் நீரும் கலந்தாற் போல்வது, ஓரளவு தெளிவும் தெளி வின்மையும் கலந்தது. சம்யக்த்வ ப்ரக்ரதி - மண்ணின் மேல் தெளிந்த நீர் போல்வது. ஓரளவு தெளிவுடையது. ஆக 28. இந்த மோகனீயம் 28 ல் நற்காட்சியை ஆகவொட் டாது தடுக்கும் மித்யாத்வம், சம்யக் மித்யாத்வம், சம்யக்த்வ ப்ரக்ரதி அனந்தானுபந்திக்குரோதம் மானம் மாயம் லோபம் என்ற எழும் தெரிசன மோகனீயம் என்றும், ஏனைய இருபத் தொன்றும் சாரித்ர மோகனீயம் என்றும் கூறப்படும்.

இந்தத்தரிசன மோகனீயம் எழினையும் சப்தப்ரக்ரதி யென் றும் மோகனீய வரசன் என்றும் கூறுவதுண்டு.

"கெடுவது தான்கெடாமுன் கேடெந்த வினைக்கும்
ஒட்டாது, அடுதலுக்கு அரிய மோக வரசனும்."

என்பர் வாமன முனிவர்.

இனி, சூரியனுக்கு, உஷ்ணமும் ஒளியும் (பிரிக்க விய லாத) இயற்கையாக அமைந்திருப்பது போல; உயிருக்கு ஞானமும் தரிசனமும் இயற்கையாய் அமைந்துள்ளன. இவையிரண்டும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திராத தன்மை வாய்ந்தன என்றுணர்க. ஞானத்தை அறியவொட்டாது மறைப்பது ஞானவரணீயம். தரிசனத்தை ஆகவொட்டாது மறைப்பது தரிசனுவரணீயம். (ஆவரணீயம் - மறைத்தல்; சம்யக்தரிசனமென்பது இந்தத் தரிசனத்தினின்றும் வேறான தாகும்.) ஞானவரணீயம் ஐந்து விதம்.

### ஐவகை ஞானுவரணீயத்தின் விவரம்.

1. மதி ஞானுவரணீயம் - புத்தி (மதி)யினுல் அறியும் அறிவை மறைப்பது.

2. சுருத ஞானுவரணீயம் - (சுருத) நூல் அறிவை அறியவியலாது மறைப்பது.

3. அவதி ஞானுவரணீயம் - முற்பிறப்பை அறியும் அறிவை மறைப்பது.

4. மனப் பர்யய ஞானுவரணீயம் - தன்னுடையதும் பிறருடையதுமாகிய முற்பிற்ப்பு, பல சூக்ஷமமானவை, பிறர் மனத்திலுள்ளவை முதலியவற்றை அறியவொட்டாது மறைப்பது.

5. கேவல ஞானுவரணீயம் - உலகிலுள்ள அனைத்தையும் அறியும் த்ரிகால ஞானத்தையும் மறைப்பது.

### தரிசனுவரணீயம் ஒன்பதாவன

1. சக்ஷு தரிசனுவரணீயம் - கண்களால் (அறியும் அறிவிற்கு முன்) காணும் காட்சியை மறைப்பது.

2. அசக்ஷு தரிசனுவரணீயம் - மெய், வாய், மூக்கு, செவி ஆகிய நான்கினுல் (அறியும் அறிவிற்கு முன்) காணும் காட்சியை மறைப்பது.

3. அவதி தரிசனுவரணீயம் - அவதி ஞானத்திற்கு முன் காணும் காட்சியை மறைப்பது.

4. கேவல தரிச்னுவரணீயம் - கேவலஞானத்திற்கு முன் காணும் காட்சியை மறைப்பது.

5. நித்திரை - தூக்கம் (வருவதற்குக் காரணமான கருமம்.)

6. நித்திரா நித்திரை - தூக்கத்தின் மேல் தூக்கம் (அதிக தூக்கம்) வருவதற்குக் காரணமான கருமம்.

7. ப்ரசலை - அற்பத் தூக்கம் வருவதற்குக்காரணமான கருமம் அதாவது கண்களைச் சிறிது திறந்துகொண்டு உறங்குவது, பிறர் பேசுவதை அறிதல் போல்வது. (துளக்கம் என்பதும் இது.)

8. ப்ரசலா ப்ரசலை - (துளக்கத்தின் மேல்துளக்கம்) உட்கார்ந்து உறங்குதல், வாயிலிருந்து (சொள்ளு) நிங் வடிதல், உடல் நடுங்குதல் முதலியவற்றிற்குக் காரணமான கருமம்.

9. ஸ்த்யான க்ருந்தி - (கனவிற்செய்தது நனவிலறியாமை) தூக்கத்தில் எழுந்து வேலை செய்தல், வழி நடத்தல், வாய் பிதற்றுதல் முதலியவற்றிற்குக் காரணமான கருமம்.

அந்தராயம் ஐந்தாவன

1. தானாந்தராயம் - தானம் கொடுக்கும் வசதியைச் சதி செய்வது.

2. லாபாந்தராயம் - லாபம் கிடைக்கவொட்டாமல் தடை செய்வது.

3. போகாந்தராயம் - ஒருதரம் அனுபவிக்கக் கூடிய உணவு முதலியன போகப்பொருள் என்றும் மீண்டும் மீண்டும் அனுபவிக்கக் கூடிய படுக்கை வாகனம் முதலியன உபபோகப் பொருள் என்றும் கூறப்படும். இதனை, " துய்த்துக் கழிப்பன போகம் துய்ப்பாம் பெயர்த் துண்பனல் " என்னும் அருங்கலச் செப்பில் கூறியது ஈண்டு ஒப்புநோக்கி அறிதற்பாலது ஆகவே) .உணவு தாம்பூலம் முதலியன கிடைக்கப்பெறாமல் தடுப்பது.

4. உபபோகாந்தராயம் .. வாகனம் வீடு முதலியன கிடைக்கப் பெறாமல் தடுப்பது.

5. வீரியாந்தராயம் - ஆத்மனின் அனந்த வீரியத்தை ஆகவொட்டாது தடுப்பது. 277

49. ஈடிலர் வெகுளி யுள்ளிட்
டெண்மரை யெறியத் தீயுட்
பேடுவந் தொன்று பாய்ந்து
முடிந்தது முடிந்த பின்னை
ஓடிவந் தொருத்தி வீழ்ந்தாள்
உழையவ ரறுவர் பட்டார்
ஆடவன் றனும் போழ்து
கழித்துவந் தொருவ னழ்ந்தான்.

பிறர் தமக்கு இணையிலாராகிய அப்ரத்யாக்யான க்ரோதம், மானம், மாயம், லோபம்; ப்ரத்யாக்யான

குரோதம் மானம் மாயம் லோபம் ஆகிய எண்மரை இங்ஙனம் இரண்டாம் சமயத்தில் எறிய, கொடிய நபும்ஸக வேதமென்னும், ஒருத்தி வேகமாய் ஓடி வந்து எதிர்த்து அவளும் நான்காம் சமயத்தில் பட்டாள்; பின்னர், மென்மையுடையராகிய ஹாஸ்யம் முதலிய ஆறுபேர்களும் ஒருமிக்க ஐந்தாம் சமயத்து வந்து எதிர்த்து மாண்டார்கள். புருஷ வேதம் என்னும் ஒருவனும் சிறிது பொழுது கழித்து வந்து எதிர்த்து அவனும் ஆறும் சமயத்தில் முழுகி அழிந்தான். 278

50. பின்னுமோர் நால்வர் தெவ்வர்
முறைமுறை பிணங்கி வீழ்ந்தார்
அன்னவர் தம்மு ளானே
குறைப்பிண மொருவ னாகித்
தன்னைமெய் பதைப்ப நோக்கி
யவனையுந் தபுப்ப நோனர்
துன்னிய துயிலு மேனைத்
[1]துளக்குஞ்செய் திருவர் பட்டார்.

பின்னர்ச் சஞ்சுவலன குரோத மான மாயா லோபமென்னும் நான்கு பகைவர், வரிசைக் கிரமமாக 7, 8, 9 ஆகிய மூன்று சமயத்திலும் முறையாக எதிர்த்து மூவர் மாண்டனர்; அவர்களில் சஞ்சுவலன லோபம் என்னும் ஒருவன் குற்றுயிராய்க் கிடந்த போதிலும், தன்னை எதிர்த்த அவனையும் சூக்ஷ்ம சாம்பராய குணஸ்தானத்தின் அந்திய சமயத்தில் தஹிக்கப் பொறுனய் அழிய, அதைக்கண்டு மனம் பொறுதவர்களாகி எதிர்த்து வந்த நித்திரையும் பிரசலையும் என்னும் இருவர்களும் க்ஷீண கஷாய குணஸ்தானத்தின் அந்தியமாகிய இரண்டு சமயத்து முதல் சமயத்தில் மாண்டார்கள்.

பட்டார் - வாளின் வாய்ப்பட்டார் எனினுமாம். தபுப்ப - கெடுக்க எனினுமாம். நோனர் - பொறுதார். 279

பா - பே. 1. 'துளக்கஞ்செய்'

**ஆங்கவ ரழிந்த பின்னை யரசரை யிருவ ரோடுந்**
**தாங்கியீ ரிருவர் தாக்கித் தலைதுணிப் புண்ட பின்னை**
**வீங்கிய வனந்த நான்மை விழுநிதி முழுதுங்**
**[கைக்கொண்**
**டோங்கிய வுலகிற் கெல்லா மொருபெருங் கிழவ னானான்.**

*அங்ஙனம் அவர் அழிந்த பின்னை, ஞானவரணீயம் ஐந்து, அந்தராயம் ஐந்து ஆகிய பத்து அரசர்களோடும், தரிசனாவரணீயத்தில் (முன் வீயாது தங்கியிருந்த) எஞ்சி நின்ற நால்வரும் ஒன்று சேர்ந்து பதினான்கு பேரும் ஒருங்கே எதிர்க்க, அவர்கள் சிரசுகளையும் இரண்டாம் சுக்கிலத்தியானமென்னும் வாளினால் துண்டித்தவுடன் (அகாதி கர்மங்களாகிய எண்பத்தைந்து பேர்களும் தங்களால் இனி ஒன்றும் இயலாதென்று சரணம் புகுந்து அடங்கிவிட), தனக்குச் சொந்தமான கடையிலா அறிவு, கடையிலாக் காட்சி, கடையிலா இன்பம், கடையிலா வீரியம் என்னும் நிதிக்குவியல்களைக் கைக்கொண்டு, உலகனைத்திற்கும் சிறந்த (கேவலக் கிழத்தியின்) நாயகனானான்.* 280

**நெடிதுட னாய தெவ்வர் நால்வரை நீறு செய்திட்**
**டடிகள்பின் முடிவென் பாளை யகப்படுத் தனைய ராக**
**இடிமுர சதிருந் தானை யரசரோ டிங்க ணீண்டிக்**
**கடிகம ழமரர் வீரன் கடிவினை முடிவித் தாரே.**

*அனாதி காலமாகத் தொடர்ந்து தன்னை வருத்தி வந்த பகைவர்களுள் ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், மோஹநீயம், அந்தராயம் என்னும் நான்கு வகையான காதி வினைகளை மேற்கூறியவாறு வென்று சுட்டெரித்து நீறாக்கிவிட்டு, பிரஜாபதி இறைவராகிய கேவலிகள் முத்தியென்னும் கன்னிகையை அகப்படுத்திக்கொண்டனராக, அந்த க்ஷணமே இடியைப் போல முழங்கும் முரசுடைய சேனைகளுக்குத் தலைவர்களாகிய பூமி வேந்தர்களோடு, நால்வகைத் தேவர்*

களும் அவ்விடத்தே குழுமி வந்து, அனந்த வீரிய ராகிய பிரஜாபதி கேவலிகளின் கேவல ஞான கல்யாணத்தைப் பூர்த்தி செய்(து கந்தகுடி முதலிய வைபவங்களை நிருமித்)தனர்.

கடிகமழ் அமரர் - நெடுந்தூரம் நறுமணம் வீசும் உட லுடைய தேவர். 281

**கொடிகளுங் குடையுங் கோலக் கவரியு மமரர் தங்கள்**
**முடிகளு மடந்தை மாரு முகிழ்நகைக் கலங்க ளுஞ்செற்**
**றடியிடு மிடமின் ருகி மூடியா காய மெல்லாங்**
**கடிகமழ் மலருஞ் சாந்துஞ் சுண்ண முங் கலந்த வன்றே.**

அழகிய கொடிகளும், குடைகளும், சாமரைகளும், அமரர்தம் முடிகளும், அவர்தம் மடந்தையரின் ஒளி விட்டெறிக்கும் கலன்களும் ஒன்றோடொன்று நெருங்கி அடி பெயர்த்து வைக்கவும் இடமிலதாகி, ஆகாயமெங்கும் மணம் கமழும் மலரும் சாந்தும், சூர்ணமாகிய கந்தப்பொடிகளும் கலந்து விண்ணும் மண்ணும் மூடின. 282

**பொன்னரி மாலை பூவின் பொழிமதுப்பிணையன்முத்தின்**
**மின்னிவர் விளங்குந் தாம மெனவிவை விரவி வீசித்**
**துன்னிய வினைவர் கூட்டந் துணித்துவீற் றிருந்த**
**பன்னிய துதிய ராகி யமரர்கள் பரவு கின்ருர். [கோனைப்**

அமரர் முதலியோர், பொன்மாலை, பூமாலை, மதுச் சொரியும் பிணையல் மாலை, முத்து மணியின் மாலை, மின்னலைப் போல விளங்கும் ஜோதி மாலை முதலி யன கலந்தியற்றிய அவ்விடத்தே, தம்மிடத்தே செறிந்திருந்த வினைப்பகைவரை வென்று வீழ்த்தி முத்தி நாயகியுடன் வீற்றிருந்த பயாபதி இறை வரைப் பரவித் துதித்தனர். 283

**55. கருமால் வினையரசு காறளர நூறிப்**
**பெருமான் முடிவென்னும் பெண்ணரசி தன்னை**
**ஒருவாமை வேட்டெய்தி யூழிபெயர்ந் தாலும்**
**வருமா றிலாத வளநகரம் புக்கானே.**

மயக்கப் பிறவியைத் தரும் (மோஹநீயம் என்னும்) கர்ம ராஜனை அவன் குடி மக்களோடு கலங்க வீழ்த்திய பெருமான், முடிவென்னுங் கைவல்ய நாயகியை விட்டகலாது மணந்தெய்தி, பல்லூழிகாலம் சென்ற போதிலும், மீண்டும் பிறவி எய்தா வளந் தங்கிய, முத்தி நகரத்தை அடைந்தான். 284

56. சிந்தை மடவா டொடுத்த தியானவாள்
வெந்து வினைவேந்தர் வீடியபின் விட்டெறிந்து
முந்து முடிவென்னுங் கன்னி முலைமுயங்கி
வந்து பெயரா வளநகரம் புக்கானே.

பயாபதி முனிவர் மனமென்னும் கன்னியால் நினைத்து உருவாக்கிய (சுக்கிலத்) தியான வாளால், கர்மராஜன் தன் சுற்றமுடன் மடிந்த பின் அவ்வாளை விட்டொழித்து (ஆத்துமனுக்குப்) பழைமையாகிய முத்தி மாதின் முலை முயங்கி, தோன்றி மாய்தலில்லாத முத்தியென்னும் வளநகரம் அடைந்தார். 285

கேவலஞானமான பிறகு தியானம் வேண்டுவதில்லையென்க.

57. அலகில் பெருங்குணத்தோ ராவரண நீக்கி
உலக மலோக முடனே விழுங்கிப்
புலவன் முடிவென்னும் பூங்கொடியுந் தானும்
நிலவு சிவகதியு ணீங்காது நின்றார்.

தவவேந்தராகிய பயாபதி, ஆத்துமனின் இயற்கைக் குணங்களை (அறிவு காட்சிகளை) மறைக்கும் ஆவரணீயங்களை நீக்கிக் கடையிலா ஞானக்காட்சி விளங்கப்பெற்று, அதனால் லோகா லோகத்தையும் (கேவல) ஞானத்தால் விழுங்கி உட்கொண்ட அருக பரமேஷ்டியாகி, (பாவ) முத்தியென்னும் பூங்கொடியும் தாமும், சாஸ்வதமாகிய (பேரின்பம்தரும்) சிவகதியுள் என்றும் நீங்காது நின்றனர். 286

இனையன பலபரவி யிறைஞ்சி யேத்தி யிமையவர்கள்
கனையெரி மிகுவேள்வி கலந்து செய்து களிப்பெய்தி
அனையவ ரறவாழி யமிர்த நீங்கா தகத்தாடிப்
புனையவிர் சுடரொளியார் புகழ்ந்து தத்த மிடம்புக்கார்.

**களங்காண் வகையுடைந்து காலர் காமர் கையகல**
**விளங்காத் திசையின்றி விளங்க வீரன் மெய்ப்பொருளே**
**உளங்காண் கேவலப்பே ரொளியா லிம்ப ருலகெல்லாந்**
**துளங்கா துயர்ந்துலகின் முடிக்கோர் சூளா மணியானுன்.**

இங்ஙனம் பரவி ஏத்திய இமையவர்கள் தர்ம அமிருதத்தினைத் தம் உள்ளத்தே அகப்படுத்தி ஆடிப் பாடிக் களித்திருக்க, போர்க் களத்தைக் காண வந்தவர் உடைந்து போவது போலக் காமனும் காலனும் கைவிட்டகல, (அதாவது ஆயுஷ்யம், வேதநீயம், நாமம், கோத்திரம் என்னும்) அகாதி வினைகள் நான்கும் அகல, எத்திக்கும் விளங்கும் அனந்த வீரியராகிய பிரஜாபதி இறைவர், அறுவகை மெய்ப்பொருள்களை யும் ஒருங்கேயுணரும் கடையிலா அறிவு, கடையிலாக் காட்சி, கடையிலா இன்பம், கடையிலா வீரியம், நாம மின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியா வியல்பு ஆகிய எண்குணத்தராகி, இவ்வுலகத்தே நில்லாதுயர்ந்து, உலகின் உச்சி (யாகிய சித்தி க்ஷேத்திரத்தை) அடைந்து, முடிமணிபோலும் ஆன்மஜோதி யைப்பெற்ற இறைவராகி விளங்கினர்; அப்பொழுதே, சுடரொளியாராகிய தேவர்கள் அக்கினி குமாரன் முதலியவர்களோடு கூடிப் பரிநிர்வாண கல்யாணத்தைக் கலந்து செய்து; அறவாழி அண்ணலுரைத்த திருவறத்தையும் மறவாது மீண்டும் பரவிப் புகழ்ந்து, தங்கள் தங்கள் இடம் சென்றனர். (இருகவியும் ஒரு தொடர்.) 288

**அருமால் வினையகல வமரர் நாளு மடிபரவப்**
**பெருமான் பிரசாபதி பிரம லோக மினிதாளத்**
**திருமால் பெருநேமி திகழ்ந்த செந்தா மரைத்தடக்கைக்**
**கருமால் கடல்வரைத்த கண்ணார் ஞாலங் காக்கின்றுன்.**

எம்பெருமானுகிய பிரஜாபதி எண்வினை நீங்க எண்குணமெய்தி, அமரர் முதலிய பவ்வியர் வழிபட ஆன்மவுலகமாகிய பிரமலோகத்தை ஆட்சி புரிய, கரிய பெரிய கடல் சூழ்ந்து இடமகன்ற இப்பூவுலகை

வாசுதேவனுகிய திவிட்டன், தாமரையொத்த தடக்கையில் ஆழி ஏந்தி ஆள்கின்றான்.

பிரமம் - ஆத்மன் ; பிரமம் - முத்தி, வேதம், ஆத்மன் முதலியவற்றிற்குக் கூறும் பெயர். பிரமலோகம் - பிரம பதவி, பரமபதம் கடலை ஆடையாகவுடைய இடமகன்ற இப்பூவுலகம். 289

தங்கோ னமருலக மினிதி னுளத் தரங்கநீர்ப்
பொங்கோத மதுடுத்த பூமியெல்லாம் பொது நீக்கிச்
செங்கோ லினிதோச்சித் தேவர் காப்பத் திருமாலும்
அங்கோல வேலரச ரடிபா ராட்ட வாள்கின்றார்.

பலதேவ வாசுதேவர்களாகிய விஜயதிவிட்டர்கள், தம் கோனுகிய பிரஜாபதி கேவலிகள் சித்தபரமேஷ்டியாகி மூவுலகையும் ஆட்சி புரிய, மிகுதியாகப் பொங்கும் அலைகடலை ஆடையாகவுடைய நாவலந்தீவில் பரதகண்டத்தின் பிரிவாகிய மூன்று கண்டங்களையும் பொதுவின்றித் தாமே இனிதாகச் செங்கோல் நடத்தித் தங்கள் ஆயுதங்களை அமரர்கள் காவல் புரிய, ஏனைய அரசர்கள் அடிப்பணிபுரிய, அரசாள்கின்றனர். 290

வலம்புரி வண்ண னு மகர முந்நீர் மணிமேனி
உலம்புரி [1]தோளினனு முலக மெல்லா முடன்வணங்கச்
சலம்புரி வினைவென்ற தங்கோன் செந்தா மரையடிக்கீழ்
நலம்புரி விழவியற்றி நாளு நாளு மகிழ்கின்றார்.

சங்க வண்ணனுகிய விஜயனும், கடல் வண்ணனுகிய திவிட்டனும் ; மூன்று கண்டங்களிலுள்ள வியந்தர தேவர்களும் அரசர் முதலிய ஏனையோரும் வணங்கி அடிப்பணி புரிய, இரு வினைகளையும் வென்ற தம் கோன் மரை மலரடியின் கீழ் நலந்தரும் திருவிழா இயற்றி எந்நாளும் மகிழ்ந்து இன்புறுகின்றனர்.

மகரமீன் உலவும் கடல், கற்றூண் போலும் கை. 291

முத்திச் சருக்கம் முற்றும்

வந்தே ஜினவரம்!

---

# பிழைதிருத்தம்.



டைடல்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 6 | உ_ரியாசிரியர் | உரையாசிரியர் |
| 6 | 3 | வரலறு | வரலாறு |
| ,, | 9 | இன்பங்களேபும் | இன்பங்களேயும் |
| 8 | 7 | வளர்ப்பத்தால் | வளப்பத்தால் |
| 20 | 7 | அச்சுவக்வக்ரீவன் | அச்சுவக்ரீவர் |
| ,, | 8 | எடுத்துகின்ருன் | எடுத்துவருகின்ருன். |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 23 | புறமசெய்தல் | புறம்செய்தல் |
| 10 | 25 | கிமைபபிடை | கிமைப்பிடை |
| 11 | 16 | இருககு | இருக்கு |
| 14 | 4 | காணபார் | காண்பார் |
| 28 | 22 | ஒணடுதல் | ஒண்டுதல் |
| 32 | 30 | ெ ாருள | பொருள் |
| 34 | 1 | எனனே | என்னே |
| ,, | 3 | திருபதி | திருப்தி |
| ,, | 4 | கணககளே | கண்களே |
| ,, | 15 | தயாபரன | தயாபரன் |
| 35 | 13 | வெனறு | வென்று |
| ,, | 32 | சக்ரம | சக்ரம் |
| 39 | 20 | என்னு | என்னும் |
| ,, | 21 | பொருள | பொருள் |
| ,, | 22 | நி ம | நிலம் |
| ,, | 23 | ெ ாருள் | பொருள் |
| ,, | ,, | தாம | தாம் |
| ,, | 24 | அபபொருள்கள | அப்பொருள்கள் |
| ,, | 29 | தனஸ்வருத்தை | தன் ஸ்வருபத்தை |
| ,, | 31 | ஸ்வஸ்வரு | ஸ்வஸ்வருப |
| 42 | 22 | பொருளபடும் | பொருள்படும் |
| ,, | ,, | பிஹிதாஸரவன | பிஹிதாஸ்ரவன். |
| 43 | 14 | கிடைக்குமு | கிடைக்கும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 46 | 18 | கீழ உலக | கீழ் உலக |
| 47 | 14 | பரபை | ப்ரபை |
| 52 | 3 | நமமால் | நம்மால் |
| 54 | 18 | குழமபு | குழம்பு |
| 55 | 21 | பறிபபர் | பறிப்பர் |
| 56 | 14 | மார்பம | மார்பம் |
| ,, | 15 | யகைப் ர் | யகைப்பர் |
| 58 | 18 | 92-ஆமகவியின | 92-ஆம் கவியின் |
| ,, | 19 | விளிதல | விளிதல் |
| 59 | 19 | வில | வில் |
| ,, | 30 | தம | தம் |
| 63 | 14 | காமததினுலும | காமத்தினுலும் |
| ,, | 29 | 1-சோதனை | 2-சோதனை |
| 82 | 11 | மரயகம் | மாயகம் |
| 113 | 30 | ஏற் டுகின்றன | ஏற்படுகின்றன |
| 116 | 14 | பார்கக | பார்க்க |
| 117 | 1 | த்தமர்க | உத்தமர்க |
| 122 | 27 | சாட்சியரேல் | காட்சியரேல் |
| 123 | 31 | இந்நூல் | இந்நூலில் |
| 131 | 13 | திவ்பந்தி க்ரீடந்தி தேவர் | திவ்யந்தி க்ரீடந்தி தேவா: |
| 143 | 26 | ருக்ஷிதசீம் | ருக்ஷிசீதம் |
| 146 | 8 | உள்ளன. | கூறியுள்ளன. |
| 148 | 1 | டஞ்சுவான | டஞ்சுவான் |
| 161 | 26 | ஐவகை | ஐவகையரை, |
| 169 | 14 | பொருட்டு | பொருட்டு ; |
| 170 | 23 | 43-ஆம் கவியில் | 168-ஆம், பக்கத்தில் |
| 175 | 5 | உபசரிக்கச் | உபசமிக்கச் |
| ,, | 8 | எஞ்சியுள்ள | மிஞ்சியுள்ள |
| 176 | 25 | நற்சாட்சியை | நற்காட்சியை |
| 181 | 8 | வடலூலார் | வட நூலார் |
| 186 | 2 | நீந் | நீர் |
| ,, | 8 | அந்நராயம் | அந்தராயம் |
| 187 | 3 | நபும்ஸ்க வேத மென்னும்ஒருத்தி | நபும்ஸக வேதமென்னும் ஒருவன் மூன்ரும் சமயத்துக்கெடப் பின்னர் ஸ்த்ரீ வேதமென்னும் ஒருத்தி |

வாதி சந்திரமாமுனிவர் இயற்றிய

# பாண்டவ :: :: புராணம்

(தமிழ் உரையுடன்)



விலை ரூ. 5/-



ஆதிபகவன் அறநூற் பதிப்பகம்
14, புதுப்பேட்டைத் தோட்டத் தெரு
இராயப்பேட்டை :: சென்னை - 14

Jacket Printed at Neo Art Press, Madras-2